# சித்ரா வாசகம்

ஒன்பதாம் வகுப்பு



...ரா பதிப்பகம்

# சித்திர வாசகம்

## ஒன்பதாம் வகுப்பு

(புதிய பாடத்திட்டப்படி தொகுக்கப்பெற்றது)




Vijaya Printers,
28, TOWN HALL ROAD,
Madurai.

தொகுத்தோர்:

புலவர் மா. அய்யாவு

கழக உயர்நிலைப்பள்ளி, திருமழபாடி, திருச்சி மாவட்டம்.

புலவர். க. கு. முத்தையா

தலைமைத் தமிழாசிரியர்,

தூய மரியன்னை உயர்நிலைப்பள்ளி, திண்டுக்கல்




சித்திரா பப்ளிஷிங் ஹௌஸ்

ஸ்ரீவைகுண்டம்

1965



[விலை ரூ. 2.25

# முன்னுரை

சித்திரா வாசகம் என்னும் மகுடத்துடன் வெளி வரும் இந்நூல் அண்மையில் கல்வியிலாக்கா வெளியிட்டுள்ள புதிய பாடத் திட்டத்தை முற்றுந் தழுவி அமைக்கப்பட்டது. இதில் அமைந்துள்ள கட்டுரைகள் இள மாணவ மாணவிகளின் மொழித்திறத்தையும் பொது அறிவையும் வளர்க்கத் தக்கவை; பல்லாண்டுகளாக மாணவர்களுடன் பழகிய நல்லாசிரியர்களும், நாட்டு நலங்கருதும் பேரறிஞர்களும் ஆய்ந்தறிந்த கருத்துக்களைக்கொண்டு விளங்குபவை.

செய்யுட் பகுதியில் அமைந்துள்ள பாடப்பகுதிகள் அவற்றைப் பயிலும் மாணவ மாணவிகளை இன்புறச் செய்து அவற்றின் மூலங்களாகிய இலக்கியங்களைக் கற்கத் தூண்டும் வகையில் தேர்ந்தெடுத்து அமைக்கப்பட்டவை.

உரைநடைப் பாடங்களுக்கும் செய்யுட் பாடங்களுக்கும் தரப்பட்டுள்ள அருஞ்சொற்பொருள் விளக்கமும் பயிற்சிகளும் மாணவ மாணவிகளுக்குப் பெரிதும் பயன்படத் தக்கவை.

இதில் இடம் பெற்றுள்ள சீரிய செய்யுட்களையும் பொருள் பொதிந்த கட்டுரைகளையும் இதில் சேர்த்துக் கொள்ளப் பெரிதும் அன்புகூர்ந்து இசைவு தந்தருளிய கவிஞர்களுக்கும் அறிஞர்களுக்கும் எங்கள் வணக்கங் கலந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

தமிழ்த் துறையில் ஈடுபட்டுள்ள ஆசிரியப் பெருமக்கள் இந்நூலினைத் தம் மாணவ மாணவிகளுக்குப் பயன்படச் செய்தருள வேண்டுகிறோம்.

*சித்திரா பதிப்பகத்தார்*

# பொருளடக்கம்

## உரைநடை

# நாட்டு வணக்கம்

ஜன கண மன அதி நாயக ஜயஹே!
பாரத பாக்ய விதாதா
பஞ்சாப சிந்து குஜராத மராட்டா
த்ராவிட உத்கல வங்கா
விந்திய ஹிமாசல யமுனா கங்கா
உச்சல ஜலதி தரங்கா
தவசுப நாமே ஜாகே
தவசுப ஆசிஷ மாங்கே
காயே தவ ஜய காதா!
ஜன கண மங்கள தாயக ஜயஹே!
பாரத பாக்ய விதாதா!
ஜயஹே! ஜயஹே! ஜயஹே!
ஜய ஜய ஜய ஜயஹே!

## பொருள்

மக்களின் உள்ளத்தில் உறையும் பாரதத்தின் பெரும் பேற்றிற்கு முதல்வனுய் உள்ள ஆதி இறைவனே, வெற்றி உண்டாகட்டும்! பஞ்சாபு, சிந்து, குஜராத்தி, மராத்தி, திராவிடம், உத்கலம் (ஒரிஸா), வங்காளம், விந்தியம் முதலிய நாடுகளையும், இமயமலையையும், யமுனை, கங்கை, முதலிய பொங்கும் அலைகளுடன் பொலிவுறும் யாறுகளை யும் கொண்ட உனது மங்கலம் மிருந்த பெயரைக்கூறி, உனது மங்கலம் மிக்க ஆசியை வேண்டுகிறேன்.

உன்னுடைய வெற்றியைப் பாடுகிறோம்! மக்களின் மங்கல நல்வாழ்வை நல்கும் இறைவனே, பாரதத்தின் ஆதி முதல்வனே, உனக்கு வெற்றியுண்டாகுக!

வெற்றி! வெற்றி!! வெற்றி!!!

# 1. வாழ்த்துப் பகுதி

## 1. கடவுள் வாழ்த்து

என்னுயிர்நீ என்னுயிர்க்கோர் உயிரும்நீ என்
இன்னுயிர்க்குத் திணைவன்நீ என்னை ஈன்ற

அன்னைநீ என்னுடைய அப்பன்நீ என்
அரும்பொருள்நீ என்இதயத்து அன்பும்நீ என்

நன்னெறிநீ எனக்குரிய உறவும்நீ என்
நற்குருநீ எனைக்கலந்த நட்பும்நீ என்

தன்னுடைய வாழ்வும்நீ என்னைக் காக்கும்
தலைவன்நீ கண்மூன்று தழைத்த தேவ!

—இராமலிங்க அடிகள்

## 2. மொழி வாழ்த்து

சீர்மலிந் தோங்குதே வாரத்தீம் பாலே
செப்பு புகழ்த்திரு வாசகத் தேனே

மாமலி யுந்திரு வாய்மொழிக் கண்டே
மற்றிவை போல்வநின் மாமுடி மணியே

ஏர்மலிந் தோங்குதொல் காப்பிய நூலே
என்று மிளிர்ந்திடு மங்கல நாணே

சேர்திரு வள்ளுவன் செப்புநல் அமிழ்தே
செம்முகச் சுட்டியாம் செந்தமிழ்த் தாயே!

—கவியரசு வெங்கடாசலம் பிள்ளை

## 3. நாட்டு வாழ்த்து

திருநி றைந்தனை தன்னிகர் ஒன்றிலை
    தீது தீர்ந்தனை நீர்வளஞ் சார்ந்தனை

மருவு செய்களின் நற்பயன் மல்குவை
    வளனின் வந்ததோர் பைந்திறம் வாய்ந்தனை

பெருகும் இன்பம் உடையை குறுநகை
    பெற்றொ ளிர்ந்தனை பல்பணி பூண்டனை

இருநி லத்துவந்து எம்முயிர் தாங்குவை
    எங்கள் தாய்! நின் பதங்கள் இறைஞ்சுவாம்!

—பாரதியார்

## குறிப்புரை

### 1. கடவுள் வாழ்த்து

இப்பாட்டை இயற்றியவர் இராமலிங்க அடிகள் ஆவார். இவர் சிதம்பரத்துக்கு அருகில் உள்ள மருதூரில் பிறந்தவர்; தந்தையார் இராமையாபிள்ளை; தாயார் சின்னம்மையார்; கருணிகர் குலம். 1823-ல் தோன்றி, இவர் 1874-ல் மறைந்தார். 'சமரச சன்மார்க்க' நெறியைக் கண்டவர். இவருடைய பாடல்கள் திருவருட்பா எனப்படும்.

ஈன்ற—பெற்றெடுத்த, தேவே—தெய்வமே.

### 2. மொழி வாழ்த்து

இப்பாட்டை இயற்றியவர் கரந்தைக் கவியரசு வேங்கடாசலம் பிள்ளை ஆவார்; திருவையாற்று அரசர் கல்லூரியிலும், கரந்தைப் புலவர் கல்லூரியிலும் தமிழ்ப் பேராசிரியராய்த் திகழ்ந்தவர்; தஞ்சை மாவட்டம் மோகனூரில் பிறந்தவர்; சிறந்த உரைநடை நூல்களும், செய்யுட்களும் எழுதியுள்ளார். இவரது காலம் 1886—1951.

சீர் – சிறப்பு, புகழ்; மலிந்து – நிறைந்து, மா – பெருமை, ஏர் – அழகு. மிளிர்ந்திடும் – விளங்கிடும், செம்முகச்சுட்டி – ஓர் அணி.

## 3. நாட்டு வாழ்த்து

இப்பாட்டை இயற்றியவர் தேசீய கவிஞர் சுப்பிரமணிய பாரதியார். பெற்றோர் சின்னச்சாமி ஐயர், இலக்குமி அம்மையார் ஆவர். இவர் திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள எட்டய புரத்தில் பிறந்தவர்; அந்தணர் குலத்தவர். இவர் காலம் கி. பி. 1882—1921. நாட்டு விடுதலை இயக்கத்தில் பங்கு கொண்டு பணியாற்றியவர். இவர் எழுதிய நூல்கள் தேசிய கீதங்கள், பாப்பாப் பாட்டு, கண்ணன் பாட்டு, பாஞ்சாலி சபதம், ஞானரதம் முதலியனவாகும்,

மருவு—பொருந்திய, மல்குவை - நிறையப் பெற்றனை, இறைஞ்சுவாம் - வணங்குவோம்.

### பயிற்சி

1. வரலாற்றுக் குறிப்புத் தருக:—

   இராமலிங்க அடிகள், கவியரசு, பாரதியார்.

2. இராமலிங்க அடிகள் இறைவனை எவ்வாறு கூறுகிறார்?

3. இராமலிங்கர் இயற்றிய பாடல்களுக்குப் பெயர் என்ன?

4. செந்தமிழ்த் தாயைக் கவியரசு என்ன கூறி வாழ்த்து கிறார்?

5. தமிழ்த் தாயின் மங்கல நாணும், செம்முகச் சுட்டியுமாய் விளங்குவன யாவை?

6. பாரதியார் இயற்றிய நூல்கள் யாவை?

7. பாரதியார் தாய் நாட்டை எவ்வாறு போற்றி வணங்கு கிறார்?

# II. அறிவுரைப் பகுதி

## 2. திருக்குறள்

1. பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார்
இறைவன் அடிசேரா தார்.

2. கெடுப்பதூஉங் கெட்டார்க்குச் சார்வாய்மற் றாங்கே
எடுப்பதூஉம் எல்லாம் மழை.

3. உரனென்னும் தோட்டியான் ஓரைந்துங் காப்பான்
வரனென்னும் வைப்பிற்கோர் வித்து.

4. நிறைமொழி மாந்தர் பெருமை நிலத்து
மறைமொழி காட்டி விடும்.

5. மனத்துக்கண் மாசிலன் ஆதல்; அனைத்தறன்;
ஆகுல நீர பிற,

6. அன்றறிவாம் என்னாது அறஞ்செய்க; மற்றது
பொன்றுங்கால் பொன்றாத் துணை.

7. வீழ்நாள் படாஅமை நன்றாற்றின், அஃதொருவன்
வாழ்நாள் வழியடைக்குங் கல்.

8. அன்பும் அறனும் உடைத்தாயின், இல்வாழ்க்கை
பண்பும் பயனும் அது.

9. அறனெப் பட்டதே இல்வாழ்க்கை; அஃதும்
பிறன்பழிப்பது இல்லாயின் நன்று.

10. மனைமாட்சி இல்லாள்கண் இல்லாயின் வாழ்க்கை
எனைமாட்சித் தாயினும் இல்.

11. தற்காத்துத் தற்கொண்டாற் பேணித் தகைசான்ற
சொற்காத்துச் சோர்விலாள் பெண்.

12. என்பி லதனை வெயில்போலக் காயுமே
அன்பி லதனை அறம்.

13. புறத்துறுப் பெல்லாம் எவன் செய்யும் யாக்கை
அகத்துறுப்பு அன்பி லவர்க்கு ?

14. செல்விருந்து ஓம்பி வருவிருந்து பார்த்திருப்பான்
நல்விருந்து வானத் தவர்க்கு.

15. வித்தும் இடல்வேண்டுங்கொல்லோ விருந்தோம்பி
மிச்சில் மிசைவான் புலம்?

16. துன்புறூஉந் துவ்வாமை இல்லாகும் யார்மாட்டும்
இன்புறூஉம் இன்சொ லவர்க்கு.

17. தினைத்துணை நன்றி செயினும், பனைத்துணையாக்
கொள்வர் பயன்தெரி வார்.

18. கொன்றன்ன இன்னா செயினும், அவர் செய்த
ஒன்றுநன்று உள்ளக் கெடும்.

19. வாணிகஞ் செய்வார்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்.

20. ஒருமையுள் ஆமைபோல் ஐந்தடக்கல் ஆற்றின்
எழுமையும் ஏமாப் புடைத்து.

21. யாகாவா ராயினும் நாகாக்க; காவாக்கால்
சோகப்பர் சொல்லிழுக்குப் பட்டு.

22. ஒழுக்கம் உடைமை குடிமை; இழுக்கம்
இழிந்த பிறப்பாய் விடும்.

23. ஒழுக்கத்தின் ஒல்கார் உரவோர் இழுக்கத்தின்
ஏதம் படுபாக் கறிந்து.

24. பிறன்மனை நோக்காத பேராண்மை சான்றோர்க்கு
அறனொன்றோ? ஆன்ற ஒழுக்கு.

25. இன்மையுள் இன்மை விருந்தொரால்? வன்மையுள்
வன்மை மடவார்ப் பொறை.

26. அழுக்காறு எனஒரு பாவி திருச்செற்றுத்
தீயுழி உய்த்து விடும்.

27. அவ்விய நெஞ்சத்தான் ஆக்கமும் செவ்வியான்
கேடும் நினைக்கப் படும்.

28. கண்ணின்று கண்ணறச் சொல்லினும் சொல்லற்க
முன்இன்று பின்நோக்காச் சொல்.

29. பயனில்சொல் பாராட்டு வானை மகனெனல்;
மக்கட் பதடி எனல்.

30. தீயவை தீய பயத்தலான், தீயவை
தீயினும் அஞ்சப் படும்.

31. ஒப்புரவி னல்வரும் கேடெனின், அஃதொருவன்
விற்றுக்கோள் தக்க துடைத்து.

32. ஈத்துவக்கும் இன்பம் அறியார்கொல் தாமுடைமை
வைத்திழக்கும் வன்க ணவர்?

33. இரத்தலின் இன்னாது மன்ற நிரப்பிய
தாமே தமியர் உணல்.

34. சாதலின் இன்னாத தில்லை; இனிததூஉம்
ஈதல் இயையாக் கடை.

35. புகழ்பட வாழாதார் தந்நோவார் தம்மை
இகழ்வாரை நோவது எவன்?

36. அல்லல் அருளாள்வார்க்கு இல்லை; வளிவழங்கும்
மல்லம்மா ஞாலம் கரி.

37. உள்ளத்தாற் பொய்யா தொழுகின், உலகத்தார்
உள்ளத்துள் எல்லாம் உளன்.

38. யாமெய்யாக் கண்டவற்றுள் இல்லை எனைத்தொன்றும்
வாய்மையின் நல்ல பிற.

39. தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்!

40. இலர்பல ராகிய காரணம், நோற்பார்
சிலர்; பலர் நோலா தவர்.

41. நெஞ்சில் துறவார் துறந்தார்போல் வஞ்சித்து
வாழ்வாரின் வன்கணார் இல்.

42. மனத்தொடு வாய்மை மொழியின், தவத்தொடு
தானஞ்செய் வாரின் தலை.

43. சினமென்னும் சேர்ந்தாரைக் கொல்லி இனமெனும்
ஏமப் புணையைச் சுடும்.

44. இணர்எரி தோய்வன்ன இன்னா செயினும்,
புணரின் வெகுளாமை நன்று.

45. சிறப்பினும் செல்வம் பெறினும், பிறர்க்கின்னா
செய்யாமை மாசற்றார் கோள்.

46. அற்கா அயல்பிற்றுச் செல்வம்; அதுபெற்றால்
அதற்குப ஆங்கே செயல்.

47. உறங்குவது போலும் சாக்காடு; உறங்கி
விழிப்பது போலும் பிறப்பு.

48. யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்.

49. பற்றுக பற்றற்றான் பற்றினை; அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

50. முறைசெய்து காப்பாற்றும் மன்னவன் மக்கட்கு
இறையென்று வைக்கப் படும்.

51. தாமின் புறுவது உலகின் புறக்கண்டு
காமுறுவர் கற்றறிந் தார்.

52. கல்லா தவரும் நனிநல்லர் கற்றார்முன்
சொல்லா திருக்கப் பெறின்.

53. செவிக்குண வில்லாத போழ்து சிறிது
வயிற்றுக்கும் ஈயப் படும்.

54. கற்றில னாயினும் கேட்க; அஃதொருவற்கு
ஒற்கத்தின் ஊற்றாந் துணை.

55. செவியிற் சுவையுணரா வாயுணர்வின் மாக்கள்
அவியினும் வாழினும் என்?

56. அறிவற்றங் காக்கும் கருவி; செறுவார்க்கும்
உள்ளழிக்க லாகா அரண்.

57. எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பது அறிவு.

58. பற்றுள்ளம் என்னும் இவறன்மை எற்றுள்ளும்
எண்ணப் படுவதொன் றன்று.

59. மனந்தூய்மை செய்வினை தூய்மை இரண்டும்
இனந்தூய்மை தூவா வரும்.

60. மனநலம் மன்னுயிர்க் காக்கம்; இன் நலம்
எல்லாப் புகழும் தரும்.

61. செய்தக்க அல்ல செயக்கெடும்; செய்தக்க
செய்யாமை யானும் கெடும்.

62. பீலிபெய் சாகாடும் அச்சிறும் அப்பண்டஞ்
சால மிகுத்துப் பெயின்.

63. அளவறிந்து வாழாதான் வாழ்க்கை உளபோல
இல்லாகி தோன்ருக் கெடும்.

64. ஞாலம் கருதினும் கைகூடும் காலம்
கருதி இடத்தாற் செயின்.

65. கடலோடா கால்வல் நெடுந்தேர்; கடலோடும்
நாவாயும் ஓடா நிலத்து.

66. காதன்மை கந்தா அறிவறியார்த் தேறுதல்
பேதைமை எல்லாம் தரும்.

67. தேரான் தெளிவும் தெளிந்தான்கண் ஐயுறவும்
தீரா இடும்பை தரும்.

68. செய்வானை நாடி வினைநாடிக் காலத்தொடு
எய்த உணர்ந்து செயல்.

69. வானேக்கி வாழும் உலகெலாம்; மன்னவன்
கோல்நோக்கி வாழும் குடி.

70. இறைகாக்கும் வையக மெல்லாம்; அவனை
முறைகாக்கும் முட்டாச் செயின்.

71. வேலொடு நின்ருன் இடுஎன் றதுபோலும்
கோலொடு நின்ருன் இரவு.

72. கடிதோச்சி மெல்ல எறிக நெடிதாக்கம்
நீங்காமை வேண்டு பவர்.

73. கருமம் சிதையாமல் கண்ணோட வல்லார்க்கு
உரிமை உடைத்திவ் வுலகு.

74. வினைசெய்வார் தம்சுற்றம் வேண்டாதார் என்றாங்கு
அனைவரையும் ஆராய்வது ஒற்று.

75. ஆக்கம் இழந்தேமென்று அல்லாவார் ஊக்கம்
ஒருவந்தம் கைத்துடை யார்.

76. பொறியின்மை யார்க்கும் பழியன்று; அறிவறிந்து
ஆள்வினை இன்மை பழி.

77. இடும்பைக்கு இடும்பை படுப்பர் இடும்பைக்கு
இடும்பை படாஅ தவர்.

78. இன்பம் விழையான் இடும்பை இயல்பென்பான்
துன்பம் உறுதல் இலன்.

79. ஆக்கமும் கேடும் அதனால் வருதலால்
காத்தோம்பல் சொல்லின்கட் சோர்வு.

80. பழிமலைந்து எய்திய ஆக்கதின் சான்றோர்
கழிநல் குரவே தலை.

81. துன்பம் உறவரினும் செய்க துணிவாற்றி
இன்பம் பயக்கும் வினை.

82. எனைத்திட்பம் எய்தியக் கண்ணும் வினைத்திட்பம்
வேண்டாரை வேண்டாது உலகு.

83. பகையகத்துச் சாவார் எளியர்; அரியர்
அவையகத்து அஞ்சா தவர்.

84. பிணியின்மை செல்வம் விளைவின்பம் ஏமம்
அணியென்ப நாட்டிற்கிவ் வைந்து.

85. பேராண்மை என்ப தறுகண்ஒன் றுற்றக்கால்
ஊராண்மை மற்றதன் எஃகு.

86. புரந்தார்கண் நீர்மல்கக் சாகிற்பின் சாக்காடு
இரந்துகோள் தக்கது உடைத்து.

87. புணர்ச்சி பழகுதல் வேண்டா; உணர்ச்சிதான்
நட்பாம் கிழமை தரும்.

88. அழச்சொல்லி அல்லது இடித்து வழக்கறிய
வல்லார்நட்பு ஆய்ந்து கொளல்.

89. சொல்வணக்கம் ஒன்னார்கண் கொள்ளற்க வில்வணக்கம்
தீங்கு குறித்தமை யான்.

90. ஏவவும் செய்கலான் தான்தேறான் அவ்வுயிர்
போஒம் அளவுமோர் நோய்.

91. வாள்போல் பகைவரை அஞ்சற்க; அஞ்சுக
கேள்போல் பகைவர் தொடர்பு.

92. வகைமாண்ட வாழ்க்கையும் வான்பொருளும் என்னும்
தகைமாண்ட தக்கார் செறின்?

93. இருமனப் பெண்டிரும் கள்ளும் கவறும்
திருநீக்கப் பட்டார் தொடர்பு.

94. துஞ்சினார் செத்தாரின் வேறல்லர் எஞ்ஞான்றும்
நஞ்சுண்பார் கள்ளுண் பவர்.

95 பெருக்கத்து வேண்டும் பணிதல்; சிறிய
சுருக்கத்து வேண்டும் உயர்வு.

96. அற்றம் மறைக்கும் பெருமை; சிறுமைதான்
குற்றமே கூறி விடும்.

97. கடன்என்ப நல்லவை எல்லாம் கடனறிந்து
சான்றாண்மை மேற்கொள் பவர்க்கு.

98. அரம்போலும் கூர்மைய ரேனும், மரம்போல்வர்
மக்கட்பண்பு இல்லா தவர்.

99. நல்லாண்மை என்பது ஒருவற்குத் தான்பிறந்த
இல்லாண்மை ஆக்கிக் கொளல்.

100. உழவினார் கைம்மடங்கின் இல்லை, 'விழைவதூஉம்
விட்டேம்!' என் பார்க்கும் நிலை.

—திருவள்ளுவர்.

## குறிப்புரை

திருக்குறளை இயற்றியவர் திருவள்ளுவர். திருக்குறள் இரண்டாயிரம் ஆண்டுகட்கு முன் எழுதப்பட்டது; உலக மக்கள் அனைவருக்கும் ஒத்த பொது நீதி கூறுவது. பல மொழிகளிலும் இந்நூல் மொழி பெயர்க்கப்பட்டுள்ளது இது அறத்துப் பால், பொருட்பால், காமத்துப்பால் என மூன்று பிரிவுகளை யுடையது. 133 அதிகாரங்களும், அதிகாரத்துக்குப் பத்து வீதம் 1330 குறட்பாக்களும் கொண்டது. இது பதினெண் மேல்க் கணக்கு நூல் வகையைச் சார்ந்தது. பழந்தமிழ் மக்களின் அறிவுத் திறன், நாகரிகம், கலைச்சிறப்பு, பழக்க வழக்கம் முதலிய வற்றை இந்நூலால் அறியலாம்.

2. எடுப்பதூஉம்—துணையாக நிற்பதும்.

3. உரன் — அறிவு, தோட்டி — யானை செலுத்தும் கருவி (அங்குசம்), வரன் என்னும் வைப்பு — மேலான வீடு, வித்து -விதை.

4. மறைமொழி — அழியாமல் நிற்கும் மொழிகள்.

5. மாசு—குற்றம், ஆகுல நீர—ஆரவாரத் தன்மையுடையன.

6. அன்று அறிவாம்—பிறகு செய்வோம். பொன்றுங்கால்—உடல் அழியும் போது.

7. வீழ்நாள்—(அறம் செய்யாத்) தவறிய நாள்

10. மாட்சி—நற்பண்பு.

11. தற்கொண்டான் — தன்னை மணந்து கொண்டவன், தகை சான்ற—சிறப்புமிக்க.

13. யாக்கை—உடல்

14. மிச்சில்—மிஞ்சிய உணவு, புலம்—நிலம்.

16. துன்புறூஉம் — துன்பத்தை உண்டாக்கும், துவ்வாமை— வறுமை.

18. உள்ள—நினைக்க.

20. ஏமாப்பு—பாதுகாப்பு.

21. சோகாப்பர்—துன்புறுவர்.

23. ஒல்கார்—தவறமாட்டார், இழுக்கம் — ஒழுக்கம் — தவறுதலால் உண்டாகும் குற்றம்.

24. ஆன்ற—சிறந்த, நிறைந்த; ஒழுக்கு -ஒழுக்கம்.

25. ஒரால் — நீக்குதல், மடவார் — அறிவிலிகள், பொறை — பொறுத்துக்கொள்ளுதல்.

26. திரு—செல்வம், செற்று—அழித்து.

27. அவ்விய—பொறாமை கொண்ட, ஆக்கம் — செல்வம், செவ்வியான் -சிறந்தவன்.

28. கண் நின்று — எதிரே நின்று, கண் அற — கண்ணோட்டம் (அருள்) இல்லாமல், பின் நோக்கா — பின் விளைவை ஆராயாத.

29. மக்கட்பதடி—மக்களுள் பதர்.

31. கோள் தக்கது—கொள்ளும் தன்மையுடையது.

32. தாம் உடைமை—தம்முடைய செல்வம்.

33. நிரம்பிய—நிரப்புவதற்காக, தமியர்—தனியராக.

36. வளி—காற்று, மல்லல்—வளம், ஞாலம்—உலகம், கரி—சான்று

39. மன்னுயிர்கு—நிலைபெற்ற மற்ற உயிர்களுக்கு.

41. வன்கணூர்—இரக்கமற்றவர், கொடியவர்.

43. ஏமப்புணை—இன்பத் தெப்பம்.
44. இணர்—சுடர், தோய்வு—தோய்வது, புணரின்—கூடுமானால்.
46. அற்கா—நிலையாத.
48. நோதல்—வருந்துதல்.
50. முறை—செங்கோல் முறை.
52. கனி—மிகவும்.
54. ஒற்கம்—தளர்ச்சி (வறுமை)
55. அவியினும்—இறந்தாலும்.
56. அற்றம்—துன்பம், வறுமை,
58. இவறன்மை—ஈயாத்தன்மை.
62. பிலி—மயிலிறகு, பெய்—ஏற்றிய, சாகாடு—வண்டி.
65. கால் வல்—கால் (சக்கரம்)வலிமையுள்ள, நாவாய்—கப்பல்.
66. காதன்மை—அன்புடைமை, கந்தா—பற்றுக, தேறுதல்—நம்பித் தெளிதல்.
67. தேரான்—ஆராயாதவனிடம், இடும்மை—துன்பம்,
70. முறை—நீதிமுறை, முட்டா—கெடாது.
71. இரவு—பொருள் இரத்தல்.
72. கடிது—கடுமையாக, ஓச்சி—ஓங்கி, எறிக—வீசுக.
74. வினை செய்வார்—தம் தொழிலைச்செய்பவர்.
75. ஒருவர்தம்—உறுதியாக.
76. ஆள்வினை—முயற்சி.
77. இடும்மை—துன்பம்.
79. அதனால்—அச்சொல்லால்.
80. கழி—மிகுந்த, நல்குரவு—வறுமை.
85. ஊராண்மை—உதவிசெய்தல்.
86. புரந்தார்—தம்மைக்காத்தவர்.
87. உணர்ச்சி—மனம் ஒன்றுபடும் உணர்ச்சி.
88. அல்லது—நல்லது அல்லாதது (தீயது)
89. ஒன்னார்—பகைவர்.
91. கேள்—உறவினர்.
92. தகை மாண்ட—தகுதியால் சிறப்புற்ற, தக்கார்—பெரியவர்' செறின்—வெகுண்டால்
93. இருமனப் பெண்டிர்—பொது மகளிர், கவறு—சூது, திருநீக்கப் பட்டார்—வறிபவர்,
95. பெருக்கம்—செல்வம் நிறைந்திருத்தல், சிறிய சுருக்கம்—செல்வம் சுருங்கி வறுமையுறுதல்.
96. அற்றம்—குறைபாடு.

99. இல்லாண்மை—தான் பிறந்த குடியை ஆளும் தன்மை.

100. கைம்மடங்கின்—கையை மடக்கிக்கொண்டு தொழில் செய்யாமல் இருந்தால், விழைவதூஉம்—பற்றையும், நிலை—வாழ்வு.

## பயிற்சி

1. திருக்குறளைப் பற்றிக் குறிப்பு எழுதுக.
2. வரன் என்னும் வைப்புக்கு வித்தாவான் யார் ?
3. எது அறம் என வள்ளுவர் கூறுகிறார் ?
4. வாழ்நாள் வழியடைக்குங் கல் எது ?
5. இல்வாழ்க்கை பற்றி வள்ளுவர் கூறுவது யாது ?
6. பெண்ணுக்கு இலக்கணம் யாது ?
7. அன்பில்லாதவருக்குக் காட்டப்படும் உவமை என்ன ?
8. விருந்தோம்புவார் சிறப்பை எழுதுக.
9. எவ்வாறு வாணிகம் செய்ய வேண்டும் ?
10. 'ஒருமையுள் ஆமைபோல' —இவ்வுவமையை விளக்கிப் பொருத்துக.
11. அழுக்காறு என்ற பாவியின் செயல்கள் யாவை ?
12. புறங்கூறுமை பற்றிக் குறள் கூறுவது யாது ?
13. தீயினும் அஞ்சக்கூடியது யாது ?
14. தாமே உண்ணலின் தீங்கு யாது ?
15. உலகோர் உள்ளத்தில் உறைப்பவன் யார் ?
16. சினத்தின் செயல் யாது ?
17. இறப்பும் பிறப்பும் எவ்வாறு விளக்கப்படுகின்றன ?
18. கல்லாதவரும் நல்லவராவது எப்போது ?
19. ஒற்கத்தின் ஊற்றாய் இருப்பது எது ?
20. அறிவு எத்தகையது ?
21. இனந்தூய்மையான் வருவன யாவை ?
22. வாளும், குடியும் எவ்வெவற்றை நோக்கி வாழும் ?
23. கொடுங்கோல் அரசன் செயல் எத்தகையது ?
24. நல்குரவே தலையாயது ஆவது எப்போது ?
25. பேராண்மை, ஊராண்மை விளக்குக.
26. வில் வணக்கத்தின் தீங்கைக் காட்டி விளக்கப்படுவது யாது ?
27. திருநீக்கப்பட்டாரின் தொடர்புகள் யாவை ?
28. மக்கட்பண்பு இல்லாதவர் எது போல்வர் ?
29. நல்லாண்மையாவது யாது ?
30. உழவரின் சிறப்பு எவ்வாறு விளக்கப்படுகிறது.

## 2. ஏலாதி

நூல்: இது பதினென் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. ஏலம், இலவங்கம், சிறுநாவற்பூ, சுக்கு, மிளகு, திப்பிலி ஆகிய ஆறு பொருள்களும் சேர்த்துச் செய்யப்பட்ட மருந்துக்கு ஏலாதி என்று மருத்துவ நூலில் பெயர் கூறப்படும். இம்மருந்து மக்களின் உடல் நோயைப் போக்குவதுபோல,இந்நூலில் உள்ள நீதிகளைக் கொண்ட ஒவ்வொரு பாட்டும் மக்களின் அறியாமையாகிய நோயைப் போக்குவதாகும். அதனால்; இந்நூல் இப்பெயர் பெற்றது.

### தாய் அன்னவன்

நிறையுடமை நீர்மை யுடைமை கொடையே
பொறையுடமை பொய்மை புலாற்கண்—மறையுடைமை
வேயன்ன தோளாய்! இவையுடையான் பல்லுயிர்க்கும்
தாயன்னன் என்னத் தகும். 1

### இமையவர் விரும்புவர்

காலில்லார் கண்ணில்லார் நாவில்லார் யாரையும்
பாலில்லார் பற்றிய நூலில்லார்—சாலவும்
ஆழப் படும்ஊண் அமைத்தார் இமையவரால்
வீழப் படுவார் விரைந்து. 2

### சாபம் போலச் சாரும்

பெருமை புகழ்அறம் பேணுமை சீற்றம்
அருமைநூல் சால்பில்லார் சாரின்—இருமைக்கும்
பாவம் பழிபகை சாக்காடே கேடச்சம்
சாபம்போற் சாரும் சலித்து. 3

### ஆறுதொழில்

எடுத்தல் முடக்கல் நிமிர்த்தல் நிலையே
படுத்தலொடு ஆடல் பகரின்—அடுத்துயர்
ஆறு தொழிலென்று அறைந்தார் உயர்ந்தவர்
வேறு தொழிலாய் விரித்து. 4

# 15

## இனிது ஆளும்

ஐயமே பிச்சை அருந்தவர்க்கு ஊண் ஆடை
ஐயமே இன்றி அறிந்தீந்தான் — வையமும்
வானும் வரிசையால் தான்ஆளும் நாளுமே
ஈனமே இன்றி இனிது. 5

—கணிமேதையார்

## குறிப்புரை

1. நிறை – மன அடக்கம், நீர்மை – நல்லியல்பு, பொறை – பொறுமை (பொறுத்துக் கொள்ளுதல்), புலாற்கண் மறையுடைமை – ஊன் உண்ண மறுத்தல்.

2. நா இல்லார் – ஊமைகள், யாரையும் பால் இல்லார் – ஒருவரையும் தமக்குச் சார்பாகக் கொள்ளாதவர், பற்றிய நூல் இல்லார் – ஆழ்ந்த நூலறிவு இல்லாதவர், ஆழப்படும் – உண்டபின் வயிற்றில் தங்கும், ஊண் அமைத்தார் – உணவைப் படைத்தவர், வீழப்படுவார் – விரும்பப்படுவார்.

3. சீற்றம் பேணாமை – கோபத்தை விரும்பாமை, அருமைநூல் – அரிய நூலறிவு, சால்பு – பெருந்தன்மை, கேடு – பொருள் அழிவு, சலித்து – தேர்ந்தெடுக்கப்பட்டாற்போல.

4. உயிர் அடுத்த – உயிர்களைச் சார்ந்த (உடல்), தொழில் பகரின் – தொழில்களைச் சொல்லுமிடத்து, எடுத்தல் – உறுப்புக்களை எடுத்தல், முடக்கல் – அவற்றை முடக்குதல், நிலை–நிலைக்கச் செய்தல், வேறு தொழிலாய் – வெவ்வேறு தொழிலாய்.

5. ஐயம் – இரப்பவர்க்கு இடுவது, பிச்சை – துறவோர் முதலியோர்க்கு (இரக்காமலே) இடுவது, ஈனம் இன்றி – குறைவில்லாமல்.

## பயிற்சி

1. மன்னன் எனத் தக்கானிடம் அமைய வேண்டுவன யாவை?
2. இமையவரால் விரும்பப்படுவார் யாவர்?
3. சாபம் போலச் சார்வன எவை? எப்போது?
4. ஆறு தொழில் என்று ஆன்றோர் கூறுவன எவை?
5. வையமும் வானும் ஆள்பவன் யாவன்?

## 3. சிறுபஞ்ச மூலம்

நூல்: இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. சிறு - சிறிய, பஞ்சம் - ஐந்து, மூலம் - வேர். சிறிய ஐந்து வேர்களாலான மருந்து உடலுக்கு நன்மை தருவதுபோல ஐந்து நீதிகளைக் கொண்ட ஒவ்வொரு பாட்டும் அறிவுக்கு நன்மருந்தாகி நலம் பயக்கும் என்பதாகும். ஐந்து வேர்களாவன: சிறுமல்லி வேர், பெருமல்லி வேர், சிறு வழுதுணை வேர், சிறு நெருஞ்சி வேர், கண்டங்கத்திரி வேர்.

### அமிர்தம் ஐந்து

கற்புடைய பெண்அமிர்து கற்றடங்கி னான்அமிர்து
நற்புடைய நாடமிர்து நாட்டுக்கு — நற்புடைய
மேகமே சேர்கொடி வேந்தமிர்து சேவகனும்
ஆகவே செய்யின் அமிர்து. 1

### வனப்பு ஐந்து

கண்வனப்புக் கண்ணோட்டம் கால்வனப்புச் செல்லாமை
எண்வனப்பு இத்துணையாம் என்றுரைத்தல்—பண்வனப்புக்
கோட்டார்நன் றென்றல் கிளர்வேந்தன் தன்னாடு
வாட்டான்நன் றென்றல் வனப்பு. 2

### கூற்றம் ஐந்து

சிலம்பிக்குத் தன்சினை கூற்றம்; நீள் கோடு
விலங்கிற்குக் கூற்றம்; மயிர்தான்—வலம்படா
மாவிற்குக் கூற்றமாம; ஞெண்டிற்குத் தன்பார்ப்பு;
நாவிற்கு நன்றல் வசை. 3

### நன்மை ஐந்து

பொய்யாமை நன்று; பொருள் நன்று; உயிர்நோவக்
கொல்லாமை நன்று; கொழிக்குங்கால்—பல்லார்முன்
பேணமை பேணுந் தகைய; சிறிதெனினும்
மாணமை மாண்டார் மனம். 4

## கேடு ஐந்து

பொச்சாப்பு கேடு பொருட்செருக்குத் தான்கேடு
முற்றுமை கேடு முறண்கேடு—தெற்றத்
தொழில்மகன் தன்னொடு மாறுயின் என்றும்
உழுமகற்குக் கேடென்று உரை.

—காரியாசான்

## குறிப்புரை

1. பெண் அமிர்து — தன் கணவனுக்கு அமிர்தம் போன்றவள், கற்றடங்கியவன் உலகத்தார்க்கு அமிர்தம் போல்வான், நற்பு உடைய—நன்மையுள்ள, நன்மையுள்ள நாடு அரசனுக்கு அமிர்தம் போலாகும். நாட்டுக்கு அரசன் அமிர்தம் போலாவான். மேகமே சேர் கொடி வேந்து—மேகத்தை அளாவும் கொடியுடைய வேந்தன், சேவகன் — பணி புரிவோன், ஆகவே செய்யின் — நல்லனவற்றைச் செய்யின், வேந்தனுக்கு நல்லன செய்யும் பணியாள் அமிர்தம் போல்வான்.

2. வனப்பு—அழகு, கண்ணோட்டம்—அருள், இரக்கம், செல்லாமை—பிறரிடம் இரக்கப் போவாமை, எண் வனப்பு—ஆராய்ச்சிக்கு அழகு, இத்துணையாம் எனல்—பொருளை அறுதியிட்டு முடிவு செய்தல், பண்—இசை, கிளர்—புகழ் விளங்கும், வாட்டான்—வருத்தான்.

3. சிலம்பி—சிலந்திப் பூச்சி, சினை—கருவாகிய முட்டை, நீள் கோடு—நீண்ட கொம்பு, வலம்படா—வெற்றியுறாத, மா—கவரிமான், ஞெண்டு—நண்டு, பார்ப்பு—குஞ்சு, வசை—பழிச்சொல்.

4. பொருள் — தன் முயற்சியால் ஈட்டும் பொருள், கோழிக் குங்கால்—ஆராயுமிடத்து, பேணும் தகைய — தான் விரும்பும் தன்மையவற்றை, மாண்டார் — மாட்சிமைப்பட்டவர் (துறவோர்) மாணுமை-இல்வாழ்கைக்கு ஒருப்படாமை.

5. பொச்சாப்பு — மறதி, முற்றுமை—அறிவு முதிராமை, முரண்—பிறரோடு மாறுபாடுதல், தொழில் மகன — வேலை செய்பவன், உழுமகன்—உழவன்.

## பயிற்சி

1. யார் யாருக்கு எது எது அமிர்தமாகும்?
2. எது எதற்கு எது எது வனப்பாகும்?
3. கூற்றங்கள் ஐந்து யாவை?
4. ஐந்து நன்மைகள் யாவை?
5. கேடுகள் ஐந்து யாவை?

## 4. முதுமொழிக் காஞ்சி

நூல்: இதுவும் பதினெண் கீழ்க்கணக்கு நூல்களுள் ஒன்று. முதிய மொழிகளால் காஞ்சித் திணையை விளக்குவது ஆகும். முதிய மொழி – அறிவோர் கூறும் அறிவுரைகள், காஞ்சி-நிலையாமை; அதாவது, உலகத்துப் பொருள்களின் நிலையாமையைக் கூறி, அறம் தவறாது கடனாற்ற வேண்டும் எனக் கூறுவதாகும்.

ஆசிரியர்: மதுரைக் கூடலூர் கிழார். இவர் ஐங்குறு நூறு என்னும் நூலைத் தொகுத்தவர். புறநானூறு, குறுந்தொகை இவற்றிலும் இவர் பாடல்கள் உண்டு.

இளமையிற் சிறந்தன்று மெய்பிணி இன்மை.
சொற்சோர்வு உடைமையின் எச்சோர்வும் அறிப.
வறியோன் வள்ளியன் அன்மை பழியார்.
அறிவிலி துணைப்பாடு தனிமையில் துவ்வாது.
நேரா நெஞ்சத்தோன் நட்டோன் அல்லன்.
இசையிற் பெரியதோர் எச்சம் இல்லை.
உறுவினை காய்வோன் உயர்வு வேண்டல்பொய்.
குறளை வெய்யோர்க்கு மறைவிரி எளிது.
மூதிர்வுடை யோன்மேனி அணிநல் கூர்ந்தன்று.
ஊங்கல் வேண்டுவோன் உயர்மொழி தண்டான்.

—மதுரைக் கூடலூர் கிழார்

### குறிப்புரை

1. சிறந்தன்று - சிறந்தது.
2. வள்ளியன் - வள்ளல் தன்மையுடையவன்.
3. துணைப்பாடு - துணையாகக் கொள்ளுதல், துவ்வாது - வேறுகாது.
4. நேரா - ஒன்றுபட்டுக் கலவாத.
5. இசை - புகழ், எச்சம் - எஞ்சி நிற்பது.
6. உறுவினை - தான் செய்ய வேண்டிய செயல்கள், காய்வோன்- வெறுப்பவன்.

8. குறளை — கோள் சொற்கள், வெய்யோர் — விரும்புகிறவர், மறை — மறைவான செய்திகள் (இரகசியம்), விரி—வெளிப் படுத்தல்.

9. மேனி—உடல், நல்கூர்ந்தன்று-வறுமையுறும், சிறப்பிழக்கும்.

10. ஓங்கல்—உயர்வு, உயர்மொழி - பிறரை உயர்த்திக் கூறும் மொழி, தண்டான் - சொல்லத் தவறுன்.

## பயிற்சி

1. இளமையிற் சிறந்தது எது?
2. ஒருவனுடைய சோர்வுகளை எல்லாம் அறிவது எதனுல்?
3. நட்டோன் அல்லாதவன் யார்?
4. மறை விரித்துரைப்பது யாருக்கு எளிது?
5. ஓங்கல் வேண்டுபவன் செய்யவேண்டுவது யாது?

# III. தொடர்நிலைச் செய்யுட்பகுதி

## 1. பெருங்கதை

### அவலம் தீர்ந்த காதை

நூல் : உதயணன் என்னும் அரசனுடைய வரலாற்றைக் கூறுவது இந்நூல். மாக்கதை என்றும், கொங்குவேள் மாக்கதை என்றும், இந்நூலுக்கு வேறு பெயர்கள் உண்டு. வடநூல் ஒன்றைத் தழுவி இந்நூல் எழுதப் பட்டது என்பர். பழங்காலத் தமிழ் இலக்கிய இலக்கண உரையாசிரியர் பலரால் இந்நூல் எடுத்தாளப்பட்டது. இது தொடர் நிலைச் செய்யுள் (காப்பியம்) ஆகும். இந்நூல் உஞ்சைக் காண்டம், இலாவாண காண்டம், மகத காண்டம், நரவாண காண்டம், துறவுக் காண்டம் என ஆறு பிரிவுகளைக் கொண்டது. ஒவ்வொரு காண்டமும் பல உட்பிரிவுகளைக் கொண்டது. கீழ்வரும் பாடப்பகுதி இலாவாண காண்டத்தில் உள்ளது.

ஆசிரியர் : கொங்கு வேளிர் : வேளாளர் மரபினர்; கொங்கு நாட்டில் உள்ள விசயமங்கலம் என்னும் ஊரில் பிறந்தவர்; சைன சமயத்தவர்; காலம் கி. பி. 5 அல்லது 7 ஆம் நூற்றாண்டு என்பர்.

(உதயணனுடைய தோழனான உருமண்ணுவா என்பவன் உதயணனுடைய பிறப்பு வரலாறு முதலியவற்றைக் கூறுதல்.)

இன்றே யன்றியுந் தொன்றுவழி வந்த
குன்றாக் கற்பினெங் கோப்பெருங் கிழவோள்
நித்திலம் பொதிந்த இப்பி போலத்
திருவயிற்று அகவயின் உறுவொளி யுரூஅ
நின்னைத் தாங்கிய நன்னா ளமயத்துக்
கண்ணிழல் ஞாறிய காமர் பள்ளியுள்
வெண்ணிலா முற்றத்து விரும்பி யசைதலின்
ஒள்ளொளி அரத்தம் ஊனென நசைஇப்
பல்வலிப் பறவை பற்றுபு பரிந்து

விபுலம் என்னும் வியன்பெருங் குன்றத்து
அருகரை அருகர் ஆய்நலங் கவினிய
ஆலங் கானத்து அணியொடு பொழிந்த
ஞாலங் காவல் நஞ்சென நீக்கிப்
பாய்பரி இவுளி ஏயர் பெருமகன்

தன்கட் கொற்றம் எல்லாந் தன்மகன்
வென்றித் தானை விக்கிரற் கருளி
மருவில் நெஞ்சமொடு மாதவந் தாங்கி
உறுபெருங் காட்சி ஓங்கிய படிவத்து
அறம்புரி தந்தை பள்ளியது அருகர்ப்

பறந்துசெல் சிம்புள் பையென வைத்தலும்
கயலேர் கண்ணி துயிலேற் றெழவே
உயிர்போ யுருமையின் உறுபுட் போக
அச்ச வகையினும் அந்தரச் செலவினும்
பொற்றொடி மாதர் பொறைநோய் கூர

எல்லாக் கோளு நல்வழி நோக்கத்
திருமணி விளக்கந் திசைநின் றழலப்
பெருமணிப் பாவையிற் பிறந்தனை கிடந்தோய்!
திருமெய் தழுஇ யருமைத் தாக
நிகழ்ந்ததை அறியாள் கவன்றனள் இரங்க

ஆத்திரை போந்த அருந்தவன் கண்டுதன்
ஆத்த காதன்மகள் ஆவ தறிந்துசென்று
அஞ்சல் ஓம்பென நெஞ்சகம் புகலப்
பள்ளிக் கொண்டுபுக்கு உள்ளழி வோம்பி
அதிரா ஞாலத் தரசுவீற் றிருந்த

கதையுரைக் கெல்லாம் காரண னுதலிற்
புதையிரு ளகற்றும் பொங்கொளி மண்டிலம்
உதயம் இவர்தர உதித்தோன் மற்றிவன்
உதயணன் ஆகெனப் பெயர்முதற் கொளீஇ

## குறிப்புரை

1. தொன்று வழி வந்த—பழைய அரச மரபில் தோன்றிய

2. கோப்பெருங்கிழவோள்—மிருகாபதி (உதயணன் தாய்)

3. நித்திலம்—முத்து. இப்பி—சிப்பி, நித்திலம்—உதயணனுக்கும், இப்பி மிருகாபதிக்கும் உவமை.

4. வயிற்று அகவயன்—வயிற்றுள். அறுஅ — நீங்காது.

6. கண் நிழல்—கண்ணாடியின் நிழல், ஞாறிய—தோன்றிய, காமர்—அழகிய பள்ளி—படுக்கை.

7. வெண்ணிலா முற்றம்—வெண்ணிலா ஒளி வீசுகின்ற மாடியின் மேல் உள்ள 'நிலா முற்றம்' அசைதலின்—துயிலுதலின்.

8. ஒள்ஒளி—சிறந்த ஒளி, அரத்தம்—சிறப்பு (சிவந்த ஆடை) மிருகாபதி உடலின்மேல் போர்த்துக்கொண்டிருந்த சிவப்பு நிற ஆடை, ஊன்—தசை, நசைஇ—விரும்பி.

9. பல்வலிப் பறவை—மிகுந்த வல்லமையுள்ள சிம்புள் எனும் பறவை, பற்றுபு பரிந்து—பற்றிச் சென்று.

10. விபுலம்—விபுலகிரி என்னும் மலை.

11. வரை—பக்கமலை, அருகர்—அருகில்.

12. ஆலங்கானம்—மிருகாபதியின் தந்தை தவஞ் செய்துகொண்டிருந்த ஓர் இடம், அணியொடு பொலிந்த—அழகுடன் விளங்கிய.

13. ஞாலங்காவல்—அரசாட்சி, நஞ்சு என—கொடியது என.

14. பாய்பரி—பாய்ந்து செல்லும் வேகமுடைய, இவுளி—குதிரை, ஏயர் பெருமகன்—ஏயர் குலத்து அரசன் (மிருகாபதியின் தந்தை)

15. கொற்றம்—அரசுரிமை.

16. விக்கிரன்—ஏயர் பெருமகனின் மகன் (மிருகாபதியின் தமையன்)

17. மறுஇல்—குற்றம் இல்லாத.

19. அறம்புரி—தவ ஒழுக்கம் மேற்கொண்ட, பள்ளி—தவப்பள்ளி.

21. கயல் ஏர்-கயல்மீனைஒத்த, கண்ணி-கண்ணையுடைய மிருகாபதி, துயிலேற்று எழ—துயில் விழித்து எழ.

22. உயிர் போய் உறுமையின்—மிருகாபதி உயிரோடு இருத்தலின், புள்—பறவை (சிம்புள்)

23. அந்தரச் செலவு—ஆகாயத்தில் வந்தது.

24. பொறை நோய் கூர—கருவுற்ற வேதனை மிக.

25. கோள்—கோள்கள் (கிரகங்கள்)

26. மணி விளக்கம்—மாணிக்கமாகிய விளக்கு, மிழல—ஒளி விட,

27. பெருமணிப் பாவையின்—பெரிய மாணிக்கப் பாவையைப்போல; பிறந்தனை கிடந்தோய்—பிறந்துகிடைந்தாய்

28. தழீஇய—தழுவ.

29. கவன்றனள்—கவலையுற்று.

30. ஆத்திரை—யாத்திரை; அருந்தவன்—மிருகாபதியின் தந்தையாகிய முனிவன்.

31. ஆத்த—அன்பால் பிணிக்கப்பட்ட; சென்று—அவனிடம் சென்று.

32. அஞ்சல் ஓம்பு—அஞ்சுவதை நீக்குவாயாக (அஞ்சாதே); நெஞ்சகம் புகல—நெஞ்சார விரும்ப.

33. பள்ளி—இருப்பிடம் (முனிவரது இருப்பிடம்): உள்ளழிவு—துன்பம்; ஓம்பி—போக்கி.

34. அதிரா ஞாலம்—கலங்காத இவ்வுலகம்.

35. கதையுரைக்கெல்லாம் காரணன் ஆதலின்—எல்லாக் கதைகளுக்கும் இவன் (உதயணன்) காரணனாய் இருத்தலின்.

36. மண்டிலம்—சூரிய மண்டிலம்.

37. உதயம்—உதயகிரி; இதர்தர—ஏற (சூரியன் உதிக்க.)

38. பெயர் முதற்கொளீஇ—பெயர்கூறி, 'சூரியன் உதயமாகையில் பிறந்ததால் இவன் பெயர் உதயணன்' என்று கூறினர்.

## பயிற்சி

1. பெருங்கதை—நூற்குறிப்பு எழுதுக.
2. இந்நூலாசிரியர் யார்?
3. உதயணன் தாய் யார்?
4. உதயணன் தாயைத் தூக்கிச் சென்ற பறவை யாது? அது ஏன் அவளைத் தூக்கிச் சென்றது?
5. நும் பாடப் பகுதிக் கதையை, நும் நடையில் எழுதுக.
6. பொருள் தருக:—

   இப்பி, ஞாறிய, அரத்தம், இவுளி, புள், பொறைநோய்

# 2. வில்லிபாரதம்

## நிரை மீட்சிச் சருக்கம்

**வில்லி பாரதம்:** இது வில்லிப்புத்தூர் ஆழ்வாரால் இயற்றப் பட்டது. முதன் முதலில் வடமொழியில் வேதவியாசரால் எழுதப் பட்ட வியாச பாரதம் என்னும் நூலைத் தழுவி, வில்லி பாரதம் இயற்றப்பட்டது.

**ஆசிரியர்:** வில்லிபுத்தூர்ஆழ்வார். இவர் சனியூரில் வீரராக வாச்சாரியாருக்குப் புதல்வராய் பிறந்தார். இவரை ஆதரித்தவன், வக்கபாகையை ஆண்ட வரபதி ஆட்கொண்டான் என்னும் சிற்றரசன் ஆவன். இவரது காலம் ஏறத்தாழ 450 ஆண்டுகளுக்கு முன்னது ஆகும்.

**நிரை மீட்சிச் சருக்கம்:** பாண்டவர் விராட தேசத்தில் மறைந்து (அஞ்ஞாதவாசம்) வாழ்ந்தனர். அப்போது துரியோத னாதியர், விராட அரசனுடைய பசுக் கூட்டங்களைக் கவர்ந்து போயினர். இது அருச்சுனன் அவர்களோடு போரிட்டு அப்பசுக் கூட்டங்களை மீட்டு வந்த வரலாற்றைக் கூறும் பிரிவு. (நிரை– பசுக்கூட்டம்) இச்சருக்கம் விராட பருவத்தில் உள்ளது.

இப்போரில் தன்னை எதிர்த்த துரோணர் முதலியவர்களை அருச்சுனன் முறியடித்த செய்திகள் கீழ்வரும் பகுதியில் கூறப்படு கின்றன.

### துரோணர் அருச்சுனனை எதிர்த்தல்

தாளிணை இறைஞ்சிய தனஞ்ச யன்தொடும்
வாளிகண் டுளமிக மகிழ்ச்சி கூறவும்
மீளிமை யுடையஅவ் வீரன் மீதெழுந்
தூளிசெய் தேரினைத் துரோணன் உந்தினான். 1

### அருச்சுனன் துரோணரை வணங்குதல்

உந்துதேர் முனியை அந்த உதிட்டிரன் இளவல் நோக்கிச்
சிந்தையில் அன்பு கூரச் சேவடி பணிந்து போற்றி,
'அந்தணர் அரசே! உன்றன் அருளினால் அடவி நீங்கி
வந்தனம்!' என்று சிற்சில் வாசகம் இயம்பு வானே; 2

யாதுமொன் யறியா என்னை
'இவனலா(து) இலே'என் றிந்த
மேதினி மதிக்கு மாறு
வில்முதல் கலைகள் யாவும்
தீதறத் தந்த உண்மைத்
தெய்வம்நீ என்றால் பஞ்ச
பாதகந் தன்னில் ஒன்றுள்
பதயுகம் பிழைப்ப தையா! 3

### அருச்சுனன் 'போர் புரியேன்!' எனல்

'மன்னொடு சூழ நின்ற
மாகணம் உயர்த்த கோவை
மின்னொடும் உருமே றென்ன
வெகுண்டமர் புரிவ தல்லால்,
நின்னொடுங் கிருப னொடும்
நின்மக னொடும் முந்தை
தன்னொடும் புரியேன் வெம்போர்!
தக்கதோ? சரதம் பாவம்!' 4

### துரோணர், 'போர் புரிய வேண்டும்', எனல்

அம்முனி தன்னோ டிவ்வா(று) அருச்சுனன் புகல வல்வில்
கைமுனி வனும்'செஞ் சோற்றுக் கடன் கழித் திடுதல்
வேண்டும்;
தெம்முனை மதியா வீர! தேவர்தம் பகையை வென்ற
வெம்முனை காணு மாறுன் வில்வளைத் திடுக!" என்றான். 5

### துரோணரும் அருச்சுனனும் போர் செய்தல்

குருவுமக் குருவைத் தப்பாக் குருகுலக் கோவும் தங்கள்
அருவரைத் தோளில் நாணி அறைதரப் பிறைவில் வாங்கிக்
கருவுயிர்த் தெழுந்த கால மழைமுகில் கால்கொண்டென்ன
ஒருவருக் கொருவர் வாளி ஓரொரு கோடி யெய்தார். 6

## துரோணர் தோற்றல்

ஏறுதேர் முறிய வேதம் எழுதிய துவசம் வீழத்
தாறுபாய் புரவி நான்கும் சாரதி தலையுஞ் சிந்தக்
கூறுபோர் நாணி யோடு குனிசிலை துணியப் பின்னர்
ஆறுகோல் தொடுப்ப வெள்கி ஆரியன் முதுகிட்டானே. 7

[துரோணர் மகன் அசுவத்தாமன் அருச்சுனனை எதிர்த்துத் தோற்ருன். கிருபரும் மற்றும் சில அரசரும் அருச்சுனனை எதிர்க்க மாட்டாது அஞ்சி ஓடினர்.]

## வீடுமர் முதலியோர் அருச்சுனனை வளைத்தல்

வென்னிடும் அளவில் நின்ற வீடுமன் விதுரன் வண்டு
தென்னிடும் அலங்கல் மாலைச் சுயோதனன் சிந்து ராயன்
துன்னிடு நிருபர் சூழச் சூழ்திசை நான்கும் வந்து
முன்னிடு தேரோன் தன்னை முனையுற வளைந்துகொண்டார். 8

[அருச்சுனன் அவர்களைத் தோற்று ஓடும்படி செய்து துரியோதனனேடு போரிட்டான்.]

## துரியோதனனது முடியை வீழ்த்தல்

கொடிமதிற் பாகை வேந்தன் கொங்கர்கோன் புரிவிக்காலால்
வடதிசை அரசர் தங்கள் மாமணி மகுடம் போல
அடலுடை விசயன் ஒற்றை அம்பினல் மீண்டுஞ் சென்று
படவர வுயர்த்த கோவைப் பண்ணினுன் மகுட பங்கம். 9

'மறைந்துறை காலம் முடியுமுன் இவர்கள் வெளிப் பட்டார்கள்,' என்ற துரியோதனனுக்கு வீடுமர் கூறுதல்

வல்லினில் அழிந்து நின்முன்
மன்னவை தன்னின் அன்று
சொல்லிய காலஞ் செல்லா
முனனிவர் தோற்றஞ் செய்தார்;

புல்லிய கானில் இன்னம்
    போகநீ புகறி.' என்று
வெல்படை வேந்தன் சொல்ல,
    வீடுமன் மீண்டுஞ் சொல்வான்; 10

செந்நெலே கன்னல் காட்டச்
    சோர்ந்தயல் செறுவில் நின்ற
கன்னலே கமுகு காட்டுங்
    கங்கைநீர் நாட! கேண்மோ:
இன்னலே உழந்தோர் காலம்
    இந்துவின் இயக்கந் தன்னால்
நென்னலே சென்ற தென்றுன்
    நெஞ்சினில் அழுக்கிலாதான். 11

## துரியோதனன் ஊருக்குத் திரும்புதல்

அரவினை உயர்ந்த கோமான்
    அவ்வுரை கேட்ட போழ்தே
பரவையின் இரவி கண்ட
    பனிமதி போல மாழ்கி
'வரவர அறிதும்!' என்று
    மாபெருஞ் சேனை யோடும்
இரவிடை யாருந் துஞ்ச
    எயில்வளை நகரி புக்கான். 12

## குறிப்புரை

1. தனஞ்சயன்—அருச்சுனன், வாளி—அம்பு, மீளிமை—வீரம், தூளி—தூசு

2. உதிட்டிரன் இளவல்—தருமன் தம்பி (அருச்சுனன்), அடவி—காடு.

3. பத யுகம்—இரண்டு திருவடிகள், பிழைப்பது—வணங்கத் தவறுதல்

4. மாசுணம்—பாம்பு, மாசுணம் உயர்த்த கோ—அரவக்கொடி யுடைய துரியோதனன்.

5. வல்வில் கைம் முனிவன்—வில் வித்தையில் வல்ல துரோணர்.

6. அறைதர—ஒலிக்க

7. துவசம் — கொடி, சிலை — வில், துணிய — துண்டிக்க, வெள்கி—வெட்கமுற்று.

8. வென்னிடும் அளவு—தோற்கும் அளவு.

9. அடலுடை—வலிமையுடைய.

10. புகறி — (புகல்+த்+இ) சொல்வாயாக.

11. கன்னல்—கரும்பு. சேறு—வயல், கமுகு—பாக்கு, இந்து—சந்திரன், நென்னல்—நேற்று.

12. பரவை—கடல், இரவி—சூரியன், மாழ்கி—மயங்கி, வருந்தி, எயில்—மதில்.

பயிற்சி

1. பாரத ஆசிரியர் வரலாறு எழுதுக.

2. துரோணரை அருச்சுனன் என்ன கூறி, எவ்வாறு வணங்கினான்?

3. 'போர் புரியோன்'! என்ற அருச்சுனனுக்குத் துரோணர் கூறியது யாது?

4. துரோணர் தோற்ற செயல் எவ்வாறு சிறப்பிக்கப்படுகிறது?

5. கங்கை நாட்டு வளம் எவ்வாறு புனைந்துரைக்கப்பட்டுள்ளது?

## 3. பெரிய புராணம்

### எரிபத்த நாயனர்

**நூல்:** இது செயற்கரிய செய்த பெரியார்களின் வரலாற்றைக் கூறும் நூல்: சைவத் திருமுறை பன்னிரண்டனுள் பன்னிரண்டாம் திருமுறையாகும்: சிறந்த காவிய நலம் வாய்ந்தது. திருத்தொண்டர் புராணம் என்பது ஆசிரியர் இதற்கு இட்ட பெயர். இது 'முதல் நூல்' வகையைச் சாரும். புராணம் என்பது பழமையான பல கதைகளை விரித்துக் கூறும் நூலுக்குப் பெயர்.

**ஆசிரியர்:** சேக்கிழார். இவர் தொண்டை நாட்டில் குன்றத்தூரில் சைவ வேளாளர் மரபில் தோன்றியவர்; இரண்டாம் குலோததுங்கனுக்கு முதல் அமைச்சராய் இருந்தவர்; அவன் வேண்டுகோளுக்கிணங்கியே இந்நூலைப் பாடினர். தில்லையில் இறைவன் 'உலகெலாம்' என்று அடியெடுத்துக் கொடுக்க, அதைத் தொடர்ந்து இவர் இந்நூலைப் பாடினர் என்பர். காலம் கி. பி. 12-ஆம் நூற்றண்டு. இவர் பெருமைகளைக் குறித்துத் திரிசிரபுரம் மகாவித்துவான் மீனுட்சி சுந்தரம் பிள்ளை 'சேக்கிழார் பிள்ளைத் தமிழ்' என்னும் நூல் பாடியுள்ளார்.

### சோழர் சிறப்பு

பொன்மலைப் புலிநின் ருேங்கப்
　　புதுமலை இடித்துப் போற்றும்
அந்நெறி வழியே யாக
　　அயல்வழி அடைத்த சோழன்
மன்னிய அநபா யன்சீர்
　　மரபில்மா நகர மாகும்
தொன்னெடுங் கருவூர் என்னும்
　　சுடர்மணி வீதி மூதூர்

## ஆனிலைக் கோயில்

மன்னிய சிறப்பின் மிக்க
வளநகர் அதனில் மல்கும்
பொன்னியல் புரிசை சூழ்ந்து
சுரர்களும் போற்றும் பொற்பால்
துன்னிய அன்பின் மிக்க
தொண்டர்தம் சிந்தை நீங்கா
அந்நிலை அரனர் வாழ்வ(து)
ஆனிலை என்னுங் கோயில். 2

## எறிபத்தர் தொண்டு

பொருள்திரு மறைகள் தந்த
புனிதரை இனிதக் கோயில்
மருள்துறை மாறும் ஆற்றல்
வழிபடுந் தொழில ராகி
இருட்கடு ஒடுங்கு கண்டத்(து)
இறையவர்க் குரிமை பூண்டார்க்(கு)
அருட்பெருந் தொண்டு செய்வார்
அவர்எறி பத்தர் ஆவார். 3

## சிவகாமியாண்டார் தொண்டு

அண்ணலார் நிகழும் நாளில்
ஆனிலை அடிக ளார்க்குத்
திண்ணிய அன்பு கூர்ந்த
சிவகாமி யாண்டார் என்னும்
புண்ணிய முனிவ னர்தாம்
பூப்பறித்(து) அலங்கல் சாத்தி
உண்ணிறை காத லோடும்
ஒழுகுவார் ஒருநாள் முன்போல் 4

வைகறை உணர்ந்து போந்து
புனல்மூழ்கி வாயுங்கட்டி
மொய்ம்மலர் நெருங்குவாச
நந்தன வனத்து முன்னிக்
கையினில் தெரிந்து நல்ல
கமழ்முகை அலரும் வேளைத்
தெய்வநா யகர்க்குச் சாத்தும்
திருப்பள்ளித் தாமம் கொய்து 5

## பட்டத்து யானை பூவினைச் சிந்தல்

மற்றவர் அணைய, இப்பால்
வளநகர் அதனில் மன்னும்
கொற்றவர் வளவர் தங்கள்
குலப்புகழ்ச் சோழ னார்தம்
பற்றலர் முனைகள் சாய்க்கும்
பட்டவர்த் தனமாம் பண்பு
பெற்றவெங் களிறு கோலம்
பெருகுமா நவமி முன்னாள் 6

வென்றிமால் யானை தன்னை
மேல்கொண்ட பாக ரோடும்
சென்றொரு தெருவில் முட்டிச்
சிவகாமி யார்முன் செல்ல
வன்றனித் தண்டில் தூங்கும்
மலர்கொள்பூக் கூடை தன்னைப்
பின்றொடர்ந்(து) ஓடிச் சென்று
பிடித்துமுன் பறித்துச் சிந்த 7

## சிவகாமியாண்டார் அலறல்

அப்பொழு தனைய ஒட்டா(து)
அடர்களி(று) அகன்று போக

மெய்ப்பெருந் தொண்டர் முப்பால்
விரைந்துபின் செல்ல மாட்டார்
தப்பினர் விழுந்து கையால்
தரையடித்(து) எழுந்து நின்று
செப்பருந் துயரம் நீடிச்
செயிர்த்துமுன் 'சிவதா' என்பார். 8

## எறிபத்தர் சீற்றம்

என்றவர் உரைத்த மாற்றம்
எறிபத்தர் எதிரே வாரா
நின்றவர் கேளா, மூளும்
நெருப்புயிர்த் தழன்று பொங்கி,
'மன்றவர் அடியார்க் கென்றும்
வழிப்பகை களிறே அன்றே?
கொன்றது வீழ்ப்பன்!' என்று
கொலைமழு எடுத்து வந்தார். 9

'இங்கிது பிழைப்ப தெங்கே
இனி'என எரிவாய் சிந்தும்
அங்கையில் மழுவும் தாமும்
அனலும்வெங் காலும் என்னப்
பொங்கிய விசையில் சென்று
பொருகரி தொடர்ந்து பற்றும்
செங்கண்வாள் அரியில் கூடிக்
கிடைத்தனர் சீற்றம் மிக்கார். 10

## தும்பிக்கையை வெட்டுதல்

பாய்தலும் மிசைகொண் டுய்க்கும்
பாகரைக் கொண்டு சீறிக்
காய்தழல் உமிழ்கண் வேழம்
திரிந்துமேற் கதுவ அச்சம்

தாய்தலை அன்பின் முன்பு
    நிற்குமோ! தகைந்து பாய்ந்து
தோய்தனித் தடக்கை வீழ
    மழுவினால் துணித்தார் தொண்டர். 11

### சோழன் அறிந்து புறப்படுதல்

பண்ணுறும் உறுப்பு நான்கில்
    பரந்தெழு சேனை எல்லாம்
மண்ணிடை இறுகால் மேல்மேல்
    வந்தெழுந் ததுபோல் தோன்றத்
தண்ணளிக் கவிகை மன்னன்
    தானைபின் தொடரத் தானோர்
    அண்ணலம் புரவி மேற்கொண்(டு)
அரசமா வீதி சென்றான். 12

### சோழன் வினவுதல்

பொன்தவழ் அருவிக் குன்றம்
    எனப்புரள் களிற்றின் முன்பு
நின்றவர் மன்றுள் என்றும்
    நிறுத்தமே பயிலும் வெற்றிக்
குன்றவர் அடியார் ஆனார்
    கொன்றவர் இவரென் றோரான்
'வென்றவர் யாவர்?' என்றான்
    வெடிபட முழங்கும் சொல்லான். 13

### நடந்ததைக் கூறுதல்

அரசனுங் கருளிச் செய்ய
    அருகுசென் றணைந்து பாகர்,
'விரைசெய்தார் மாலை யோய்! நின்
    விறற்களிற் றெதிரே நிற்கும்

திரைசெய்நீர் உலகில் மன்னர்
யாருளர்? தீங்கு செய்தார்
பரசுமுன் கொண்டு நின்ற
இவர்',எனப் பணிந்து சொன்னார். 14

## சோழன் குதிரையினின்றும் இறங்கல்

'குழையணி காதி னனுக்(கு)
அன்பராம் குணத்தின் மிக்கார்
பிழைபடிகன் அன்றிக் கொல்லார்;
பிழைத்த(து)உண் டென்'(று)உட் கொண்டு
மழைமத யானைச் சேனை
வரைவினை மாற்றி மற்ற
உழைவயப் புறவி மேல்நின்(று)
இழிந்தனன் உலக மன்னன் 15

## எறிபத்தர் விடை

மன்னவன் தன்னை நோக்கி
வானவர் ஈசர் நேசர்,
'சென்னி! இத் துங்க வேழம்
சிவகாமி யாண்டார் கொய்து
பன்னகா பரணர்ச் சாத்தக்
கொடுவரும் பள்ளித் தாமம்
தன்னைமுன் பறித்துச் சிந்தத்
தசைப்படத் துணிந்து வீழ்த்தேன்'. 16

## சோழன் உடைவாள் அளித்தல்

அங்கணனர் அடியார் தம்மைச்
செய்தஇவ் வபரா தத்துக்(கு)
இங்கிது தன்னால் போதா(து);
என்னையுங் கொல்ல வேண்டும்!

மங்கல மழுவால் கொல்கை
வழுக்கம்அன்(று): இதுஆம்', என்று
செங்கையால் உடையவாள் வாங்கிக்
கொடுத்தனன் தீர்வு நேர்வான். 17

## எறிபத்தர் வாளை வாங்குதல்

வெந்தழல் சுடர்வாள் நீட்டும்
வேந்தனை நோக்கி, 'கெட்டேன்!
அந்தமிழ் புகழான் அன்புக்(கு)
அளவின்மை கண்டேன்!' என்று
தந்தவாள் வாங்க மாட்டார்,
தன்னைத்தான் துறக்கும்' என்று
சிந்தையால் உணர்வுற் றஞ்சி
வாங்கினார் தீங்கு தீர்ப்பார். 18

## மன்னன் மகிழ்தல்

வாங்கிய தொண்டர் முன்பு
மன்னனார் தொழுது நின்றே
'ஈங்கெனை வாளி னாற்கொன்(று)
என்பிழை தீர்க்க வேண்டி
ஓங்கிய உதவி செய்யப்
பெற்றனன் இவர்பால்!' என்றே
ஆங்கவர் உவப்பக் கண்ட
எறிபத்தர் அதனுக் கஞ்சி 19

## எறிபத்தர் உயிர்விடத் துணிதல்

'வன்பெறுங் களிறு பாகர்
மடியவும் உடைவா ளைத்தந்(து)
'ஒன்பெரும் பிழையி னாலே
என்னையும் கொல்லும்!' என்னும்

அன்பனார் தமக்குத் தீங்கு
நினைந்தனன்!' என்று கொண்டு,
'முன்(பு)எனது உயிர்செ குத்து
முப்பதே முடிவெ'ன் றெண்ணி 20

## அரசன் தடுத்தல்

புரிந்தவர் கொடுத்த வாளை
அன்பர்தம் கழுத்தில் பூட்டி
அரிந்திட லுற்ற போதில்
அரசனும், 'பெரியோர் செய்கை
இருந்தவா றிதுவென்? கெட்டேன!'
என்றெதிர் கடிதிற் சென்று
பெருந்தடந் தோளால் கூடிப்
பிடித்தனன் வாளுங் கையும். 21

## விண்ணொலி (அசரீரி) கேட்டல்

வளவனார் விடாது பற்ற
மாதவர் வருந்து கின்ற
அளவிலாப் பரிவில் வந்த
இடுக்கணை அகற்ற வேண்டிக்
களமணி களத்துச் செய்ய
கண்ணுதல் அருளால் வாக்குக்
கிளரொளி விசும்பின் மேல்வந்(து)
எழுந்தது பலரும் கேட்ப. 22

## யானையும் பாகரும் உயிர்த்து எழுதல்

தொழுந்தகை அன்பின் மிக்கீர்!
தொண்டனை மண்மேல் காட்டச்
செழுந்திரு மலரை இன்று
சினக்கரி சிந்தத் திங்கட்

கொழுந்தணி வேணிக் கூத்தர்
அருளினால் கூடிற்(று) என்றங்(கு)
எழுந்தது; பாக ரோடும்
யானையும் எழுந்த தன்றே. 23

## குறிப்புரை

1. பொன்மலை—இமயமலை, தொல் நெடு—பழமையான பெரிய.
2. புரிசை—மதில், சுரர்—தேவர், அரனார்—சிவபெருமான்
3. மருள்துறை—அறிவு மயக்கும் நெறிகள், இருள் கடு—கரிய நஞ்சு.
4. அலங்கல்—மாலை. உள் நிறை—மனம் நிறைந்த.
5. வைகறை — விடியற்பொழுது. புனல்—தண்ணீர், முன்னி—சேர்ந்து, முகை—மொட்டு.
6. கொற்றவர்—அரசர், வளவர்—சோழர், பற்றலர்—பகைவர், முனை—சேனை.
7. மால்—பெரிய.
8. செயிர்த்து—கோபங்கொண்டு.
9. மழு—மழுவாயுதம்.
10. அரி—சிங்கம்.
11. மிசை—மேலே, கதுவ—பற்ற, துணித்தார்—துண்டித்தார்.
12. கவிகை—குடை, தானை—படை, புரவி—குதிரை.
13. நிருத்தம்—நடனம்.
14. விரை—மணம், பரசு—மழு.
15. உழை—பக்கம், வயம்—வெற்றி.
16. சென்னி—சோழன், பன்னகஆபரணர்—பாம்பை அணியாகக் கொண்ட சிவபெருமான், தாமம்—மாலை
17. தீர்வு—முடிவு(நீதி).
20. செகுத்து—வெற்றி, அழித்து.
22. விசும்பில்—விண்ணில்.
23. கரி—யானை. திங்கள் கொழுந்து — பிறைச்சந்திரன் வேணி—சடை.

## பயிற்சி

1. கருவூர்க்கோயிலின் பெயர் என்ன ?
2. சிவகாமியாண்டார் செய்து வந்த தொண்டு யாது ?
3. பட்டத்து யானையின் செயலையும், சிவகாமியாண்டார் நிலையையும் எழுது.
4. யானையின் செயல் கண்ட எறிபத்தர் என்ன செய்தார் ?
5. சோழனிடம் எறிபத்தர் கூறிய விடை யாது ?
6. உடைவாளைப் பெற்ற எறிபத்தர் கூறிய விடை யாது ?
7. விண்ணொலி கூறியது யாது ?
8. இடங்கூறி விளக்குக :—
"பெரியோர் செய்கை இருந்தவாறிதுவென் ? கெட்டேன் !"

# 4. மணிமேகலை

## சிறை செய் காதை

நூல்: இந்நூல் ஐம்பெரும் காப்பியங்களில் ஒன்று சிலப்பதிகாரத்தோடு ஒருங்கு வைத்து எண்ணப்படும் சிறப்புடையது: கோவலனுக்கும் மாதவிக்கும் பிறந்த மகளாகிய மணிமேகலை என்பாளின் வரலாறு கூறுவது.

ஆசிரியர் இந்நூலுக்கு இட்டப்பெயர் 'மணிமேகலை துறவு' என்பதாம.

ஆசிரியர்: மதுரைக் கூலவாணிகன் சீத்தலைச் சாத்தனர். சீத்தலை என்பது காரணப் பெயர் என்பர். இவர் பலவகைத் தானியங்கள் விற்கும் தொழிலை மேற்கொண்டிருந்தவர். புத்த சமயத்தவர்; இளங்கோவடிகளின் சமகாலப் புலவர். இவர்காலம் கி. பி. இரண்டாம் நூற்றாண்டு.

பாடப் பகுதி: சோழன் மகன் உதயகுமாரன் வாளால் வெட்டப்பட்டான். அதற்குக் காரணமான மணிமேகலை சிறை செய்யப்பட்ட கதையைக் கூறுவது சிறைசெய்த காதை'.

தருமதத்தன் என்பவனல் காதலிக்கப்பட்ட விசாகை என்பவள் தலையில் ககந்தன் எனும் அரசனின் மூத்த மகன் பூச்சூட்ட விரும்பிக் கையைத் தூக்கினன். தூக்கின கை தூக்கியபடியே நின்றது. அதுகேட்ட அரசன் தன் மகனை வாளால் வெட்டினன். இச்செய்தி கீழே சொல்லப்படுகிறது.

## தருமதத்தனும் விசாகையும் மணவினைக்கு ஒத்தனர் என்று ஊரார் உரைத்தனர்

'தரும தத்தனும் தன்மா மன்மகள்
பெருமதர் மழைக்கண் விசாகையும் பேணித்
தெய்வங் காட்டுந் திப்பிய ஓவியக்
கைவினை கடந்த கண்கவர் வனப்பினர்;

5. மைத்துனன் முறைமையால் யாழோர் மணவினைக்கு
ஒத்தனள்', என்றே ஊர்முழு(து) அலர்எழப்

**விசாகை உலக அறவிக்குச் சென்று தெய்வப் பாவையை வேண்டுதல்**

புணையா ஓவியம் புறம்போந் தென்ன
மணையகம் நீங்கி வானுதல் விசாகை
உலக அறவியின் ஊடுசென் றேறி.
'இலக்கொளிக் கந்தின் எழுதிய பாவாய்!
உலகர் பெரும்பழி ஒழிப்பாய் நீ!' என,

**'விசாகை கற்புடையாள்', எனப் பாவை உரைத்தல்**

'மாநக ருள்ளீர்! மழைதரும் இவள்',என
நாவுடைப் பாவை நங்கையை எடுத்தலும்,

**விசாகை கன்னி மாடத்தைச் சேர்தல்**

தெய்வங் காட்டித் தெளித்திலே னாயின்
பையல் ஊரோ மனமா(சு) ஒழியாது;
மைத்துனன் மணையாள் மறுபிறப் பாகுவேன்;
இப்பிறப் பிவனொடுங் கூடேன்!, என்றே
நற்றாய் தனக்கு நற்றிறஞ் சாற்றி
மற்றவள் கன்னி மாடத் தடைந்த பின்

**தருமதத்தனும் அவன் பெற்றோரும் மதுரை அடைதல்**

தரும தத்தனுந் தந்தையுந் தாயாரும்
பெருநகர் தன்னைப் பிறக்கிட் டேகித்
'தாழ்தரு துன்பந்தலையெடுத் தாய்'என
நாவுடைப் பாவையை நலம்பல ஏத்தி
மிக்கோர் உறையும் விழுப்பெருஞ் செல்வத்துத்
தக்கண மதுரை தான்சென் றடைந்தபின்

**'விசாகையை அல்லது வேறு ஒருவரை விரும்பேன்!' என்று தருமதத்தன் விரதங் கொள்ளுதல்**

தரும தத்தனுந் தன் 'மா மன்மகள்
விரிதரு பூங்குழல் விசாகையை அல்லது
பெண்டிரைப் பேணேன்! இப்பிறப்(பு) ஒழிகெனக்
கொண்ட விரதம் தன்னுட் கூறி

## தருமதத்தன் வாணிபஞ் செய்து பொருளீட்டிப் பட்டம் பெறுதல்

வாணிக மரபின் வருபொருள் ஈட்டி
நீள் நிதிச் செல்வனாய் நீள்நில வேந்தனின்
எட்டிப் பூப்பெற்(று) இருமுப் பதிற்றியாண்(டு)
ஒட்டிய செல்வத துயர்ந்தோன் ஆயினன்;

## இல்வாழ்க்கை ஏற்றாறு தருமதத்தனுக்கு அந்தணாளன் உரைத்தலும் தருமதத்தன் காவிரிப்பூம்பட்டினம் அடைதலும்

அந்த ணாளன் ஒருவன் சென்றீங்(கு)
என்செய் தனையோ இருநிதிச் செல்வ!
'பத்தினி இல்லோர் பலவறஞ் செய்யினும்
புத்தேள் உலகம் புகாஅர்', என்பது
கேட்டும் அறிதியோ? கேட்டனை யாயின்
நீட்டித் திராது நின்னகர் அடைகெனத்
தக்கண மதுரை தான்வறி தாக
இப்பதிப் புகுந்தனன் இருநில வேந்தே!

## விசாகை தருமதத்தனுக்கு அறங்கூறல்

மற்றவன் இவ்வூர் வந்தமை கேட்டுப்
பொற்றொடி விசாகையும் பல்லோர நாப்பண்
அல்லவை கடிந்த அவன் பாற் சென்று
'நம்முள் நாம் அறிந்திலம்; நம்மை முனாஅள்
மமமர் செய்த வனபபியாங் கொளித்தன!
ஆறைந் திரட்டி யாண்டுனக்(கு) ஆய(து); என்
நாறைங் கூந்தலும் நரைவிரா வுற்றன;
இளமையுவ காமமும் யாஙகொளித் தனவோ!
உளனில் லாள! எனக்கீங் குறையாய்;
இப்பிறப் பாயின்யான் நினடி அடையேன்:
அப்பிறப்(பு) யான்நின் அடித்தொழில் கேட்குவன்;
இளமையும் நில்லா; யாக்கையும் நிலையா;
வளவிய வான்பெருஞ் செலவமும் நில்லா;

புத்தே ளுலகம் புதல்வருந் தாரார்;
மிக்க அறமே விழுந்துணை யாவது;
தானஞ் செய்',எனத் தரும தத்தனும்
மாமன் மகன்பால் வான்பொருள் காட்டி
ஆங்கவன் அவளுடன் செய்த நல்லறம்
ஓங்கிரு வானத்து மீனினும் பலவால்;

### வீதியிற் சென்ற விசாகை கூந்தலில் கொடியோன் ஒருவன் மாலை சூட்ட முயலுதல்

குமரி மூத்தஅக் கொடுங்குழை நல்லாள்
அமரன் அருளால் அகநகர் இடூஉம்
படுபழி நீங்கிப் பல்லோர் நாப்பண்
கொடிமிடை வீதியின் வருவோள் குழன்மேல்
மருதி பொருட்டான் மடிந்தோன் தம்முன்
சுருகிய நெஞ்சினன் காமங் காழ்கொளச்
சுரியிரும் பித்தை சூழ்ந்துபுறந் தாழ்ந்த
விரிபூ மாலை விரும்பினன் வாங்கித்
'தொல்லோர் கூறிய மணமீ தாம்' என
எல்லவிழ் தாரோன் இடுவான் வேண்டி

### மாலைசூட்ட அக்கொடியோன் உயர்த்திய கைகள் கீழிறங்காமல் அப்படியே நிற்றல்

மாலை வாங்க ஏறிய செங்கை
நீலக் குஞ்சி நீங்கா தாகலின்
ஏறிய செங்கை இழிந்தில(து) இந்தக்

### அக்கொடியவனை அவன் தந்தை ககந்த மன்னன் வெட்டி வீழ்த்தல்

காரிகை பொருட்டெனக் ககந்தன் கேட்டுக்
கடுஞ்சினந் திருகி மகன்துயர் நோக்கான்
மைந்தன் தன்னை வாளால் எறிந்தனன்.

# குறிப்புரை

2. மதர் - களிப்பு, மழை - குளிர்ச்சி.

3. திப்பிய - தெய்வத் தன்மை பொருந்திய

5. யாழோர் மணவினை - களவுப் புணர்ச்சி (கந்தர்வ மணம்)

6. அலர்—பழிச்சொல்.

7. புனையா - வண்ணம் திட்டப்படாத, அழகு செய்யாத.

9. அறவி - அறச்செயல் நிகழும் இடம்.

10. கந்து—தூண்.

12. மழைதரும்—மழை பெய்யச் செய்யும் கற்புடையவள்,

13. நாவுடைப் பாவை—பேசும் திறன்பெற்ற கந்திற் பாவை.

15. மையல் - மயக்கம்.

21. பிறக்கிட்டு ஏகி—பின்னொழியச் சென்று

25. தக்கண மதுரை - தென்மதுரை.

32. எட்டி - வணிகரில் சிறந்தவர்க்கு அரசன் வழங்கும் பட்டம், பூ-பொன்னாலான அடையாளப் பூ.

33. இருமுப்பதிற்றியாண்டு - அறுபது ஆண்டுகள்.

37. புத்தேள் உலகம்-தேவர் உலகம்.

44. நாப்பண் - நடுவில்

47. மர்மம்—மயக்கம்.

48. ஆறைந்து இரட்டி யாண்டு - அறுபது ஆண்டுகள்.

49 நாறு ஐந்து கூந்தல் - நாறைங் கூந்தல் - மணம் பொருந்திய ஐந்து வகையாக முடிக்கப்பட்ட கூந்தல், விராவுற்றன - கலந்தன.

55. வளவிய - சிறந்த, வளமான.

62. குமரி மூத்த - குமரியாக இருந்து மூப்படைந்த, கொடுங் குழை - வளைந்த காதணி.

65. கொடிமிடை - கொடிகள் நெருங்கிய

66. மருதி பொருட்டால் மடிந்தேன்: மருதி என்னும் பெண்ணைப் பார்த்து 'நீ வா' எனக்கூறியதால், தன் தந்தையால் வெட்டுண்டவன்; ககந்துனுடைய இரண்டாம் மகன், தம்முன் - தமையன்.

67. காழ் கொள - முற்ற, நிறைய (காழ் - வயிரம்).

68. சுரி இரும்பித்தை—சுருண்ட கரிய கூந்தல்.

69. விரும்பினன் வாங்கி—விரும்பி வாங்கி.

71. எல் – ஒளி.

72. ஏறிய—உயர்ந்த.

63. நீலக்குஞ்சி - கருநிறமுடைய கூந்தல்.

74. இழிந்திலது - இறங்கவில்லை.

75. எறிந்தனன் - வெட்டி வீழ்த்தினன்.

## பயிற்சி

1. மணிமேகலை ஆசிரியர் குறிப்புத் தருக.
2. ஊர் மக்கள் உரைத்த அலர்மொழிகள் யாவை?
3. கந்திற்பாவையிடம் விசாகை வேண்டியது என்ன?
4. நற்றாயிடம் விசாகை உரைத்தவை யாவை?
5. தருமதத்தன் தனக்குள் கூறிக்கொண்டவை யாவை?
6. அந்தணாளன் தருமதத்தனிடம் இயம்பியவை யாவை?
7. மருதிபொருட்டான் மடிந்தோன் யாவன்?
8. உவமையை விளக்குக :—
   'புனையா ஓவியம் புறம்போந்தென்ன'
9. இடங்கூறி விளக்குக :—
   'தாழ்தரு துன்பம் தலையெடுத்தாய்!'
10. 'ஏறிய செங்கை இழிந்திலது'.—இதில் வரும் கதையை எழுதுக.

# 5. பாஞ்சாலி சபதம்

## துகிலுரிதல் சுருக்கம்

**நூல் :** பாண்டவர் வரலாற்றைக் கூறும் பாரத நூலில், பாண்டவர் மனைவியான பாஞ்சாலி, "துரியோதனுதியர்களைக் கொன்ற பின்பே கூந்தல் முடிப்பேன்!" என்று சூளுரைத்த செய்தி கூறப்படுகிறது. அச்செய்தியை அடிப்படையாகக் கொண்டு, சுப்பிரமணிய பாரதியாரால் புதுமை நலந்தோன்ற எழுதப்பட்டது பாஞ்சாலி சபதம் ஆகும். பாரதியாரால் எழுதப் பெற்ற கவிதைகள், சிறு நூல்கள் ஆகியவற்றுள் இந்நூல் சிறப்புடையதாகும். பாஞ்சால நாட்டு மன்னன் மகள் பாஞ்சாலி. இவள் திரௌபதி என்றும் வழங்கப்படுவாள். துருபத மன்னன் மகள் திரௌபதி.

**ஆசிரியர் :** கவிஞர் சுப்பிரமணிய பாரதியார். இவர் தேசியக் கவி என்று வழங்கப்பட்டார். இவரது வரலாற்றுக் குறிப்பை வாழ்த்துப் பகுதியில் காண்க.

**பாடப்பகுதி :** துரியோதனனுடன் பாண்டவர் ஆடிய சூதில், பாண்டவர் பாஞ்சாலியைப் பணயமாக வைத்துத் தோற்றனர். அதனால், தான் வென்ற பாஞ்சாலியை அழைத்து வருமாறு துரியோதனன் விதுரனிடம் கூறுவதும், விதுரன் மறுத்து அறிவுரை கூறுவதும் பிறகு தேர்ப்பாகனை அனுப்புவதும், பாஞ்சாலி அவனை வினவுதலும், தேர்ப்பாகன் திரும்பி வருதலும் ஆகிய செய்திகள் இப்பகுதியில் கூறப்படுகின்றன.

### சூதில் வென்ற துரியோதனன் திரௌபதியை அரசவைக்கு அழைத்து வருமாறு விதுரனிடம் கூறுதல்

'செல்வாய் விதுரா! நீ சிந்தித்திருப்பதேன்?
வில்வாள நுதலினள் மிக்க எழிலுடையாள்,
இன்னே நாம் சூதில் எடுத்த விலைமகள்பால்
சென்று விளைவெல்லாம் செவ்வனே தானுணர்த்தி,
'மன்றினிடை உள்ளான்நின் மைத்துனன் நின் ஓர் தலைவன்
நின்னை அழைக்கின்றான் நீள்மனையில் ஏவலுக்கே'
என்ன உரைத்தவளை இங்குக்கொணர்வாய்' என்றான்.

## விதுரன் அறிவுரை கூறுதல்

துரியோ தனன்இச் சுடுசொற்கள் கூறிடவும்
பெரியோன் விதுரன் பெரிதுஞ் சினங்கொண்டு,
'மூட மகனே! மொழியொணா வார்த்தையினைக்
கேடு வரல்அறியாய் கீழ்மையினாற் சொல்லிவிட்டாய்;
புள்ளிச் சிறுமான் புலியைப்போய்ப் பாய்வதுபோல்
பிள்ளைத் தவளை பெரும்பாம்பை மோதுதல்போல்

ஐவர் சினத்தின் அழலை வளர்க்கின்றாய்.
தெய்வத் தவத்தியைச் சீர்குலையப் பேசுகிறாய்;
நின்னுடைய நன்மைக்கிந் நீதியெலாஞ் சொல்லுகிறேன்;
என்னுடைய சொல்வேறு எவர்பொருட்டும் இல்லையடா!
பாண்டவர்தாம் நாளைப் பழியிதனைத் தீர்த்திடுவார்;

மாண்டு தரைமேல் மகனே கிடைப்பாய்நீ;
தன்னழிவு நாடுந் தறுகண்மை என்னேடா!
முன்னமொரு வேனன் முடிந்தகதை கேட்டிலையோ?
நல்லோர் தமதுள்ளம் நையச் செயல்செய்தான்
பொல்லாத வேனன் புழுவைப்போல் மாய்ந்திட்டான்;

நெஞ்சஞ் சுடவுரைத்தல் நேர்மையெனக் கொண்டாயோ?
மஞ்சனே? அச்சொல் மருமத்தே பாய்வதன்றோ?
கெட்டார்தம் வாயில் எளிதே கிளைத்துவிடும்;
பட்டார்தம் நெஞ்சில் பலநாள் அகலாது;
வெந்நரகு சேர்த்துவிடும் வித்தை தடுத்துவிடும்;

மன்னவனே! நொந்தார் மனஞ்சுடவே சொல்லுஞ்சொல்
சொல்லிவிட்டேன் பின்னொருகால் சொல்லேன்;
[கவுரவர்காள்!
புல்லியர்கட்(கு) இன்பம் புவித்தலத்தில் வாராது;
பேராசை கொண்டு பிழைச்செயல்கள் செய்கின்றீர்;
வாராத வன்கொடுமை மாவிபத்து வந்துவிடும்;

பாண்டவர்தம் பாதம் பணிந்தவர்பாற் கொண்டதெலாம்
மீண்டவர்க்கே ஈந்து விட்டு விநயமுடன்.
'ஆண்டவரே! யாங்கள் அறியாமை யால்செய்த

நீண்ட பழி இதனை நீர்பொறுப்பீர்!' என்றுரைத்து
மற்றவரைத் தங்கள் வளநகர்க்கே சொல்லவிடீர்;
குற்றந் தவிர்க்கும் நெறி இதனைக் கொள்ளீரேல்
மாபா ரதப்போர் வரும்; நீர் அழிந்திடுவீர்;
பூபால ரே!' என்றப் புண்ணியனும் கூறினான்.

### துரியோதனன் சீற்றங்கொண்டு உரைத்தல்

சொல்லிதனைக் கேட்டுத் துரியோ தனமூடன்
வல்லிடிபோல் 'சீச்சீ மடயா! கெடுகநீ!
எப்போதும் எம்மைச் சபித்தல் இயல்புனக்கே!
இப்போதுன சொல்லை எவருஞ் செவிக்கொளார்!

### துரியோதனன் தேர்ப்பாகனுக்குக் கட்டளையிடல்

யாரடா தேர்ப்பாகன் நீபோய்க் கணமிரண்டில்
'பாரதற்கு வேந்தன் பணித்தான்' எனக்கூறிப்
பாண்டவர்தந் தேவிதனைப் பார்வேந்தர் மன்றினிலே
ஈண்டழைத்து வா!' என்(று) இயம்பினான்;
தேர்ப்பாகன் சென்று பாஞ்சாலியை அழைத்தல்
—ஆங்கேதேர்ப்
பாகன் விரைபோய்ப் பாஞ்சாலி வாழ்மனையில்
சோகம் ததும்பித் துடித்த குரலுடனே,
'அம்மனே போற்றி! அறங்காப்பாய்! தாள்போற்றி!
வெம்மை யுடைய விதியால் உதிட்டிரனார்
மாமன் சகுனியொடு மாயச்சூ தாடியதில்
பூமி யிழந்து பொருளிழந்து தம்பியரைத்
தோற்றுத் தமதுசுந்தரமும் வைத்திழந்தார்;
சாற்றிப் பணயமெனத் தாயே! உனைவைத்தார்;
சொல்லவுமே நாவு துணியவில்லை! தோற்றிட்டார்!
எல்லாருங் கூடி இருக்கும் சபைதனிலே
நின்னை அழைத்துவர நேமித்தான் எம்மரசன்',
என்ன உரைத்திடலும், யார்சொன்ன வார்த்தையடா!
சூதர் சபைதனிலே தொல்சீர் மறக்குலத்து
மாதர் வருதல் மரபோடா! யார்பணியால்
என்னை அழைக்கின்றாய்?' என்றாள்; அதற்கவனும்
'மன்னன் சுயோதனன்றன் வார்த்தையினால்' என்றிட்டான்.

## பாஞ்சாலி வினாதல்

'நல்லது; நீசென்று நடந்தகதை கேட்டுவா;
வல்ல சகுனிக்கு மாண்பிழந்த நாயகர் தாம்
என்னைமுன்னே கூறி இழந்தாரா? தம்மையே
முன்னம் இழந்து முடித்தென்னைத் தோற்றாரா?
சென்று சபையில் இச்செய்தி தெரிந்துவா'.
என்றவளுங் கூறி இவன்போ கியபின்னர்த்
தன்னந் தனியே தவிக்கும் மனத்தாளாய்
வண்ணங் குலைந்து மலர்விழிகள் நீர்சொரிய
உள்ளத்தை அச்சம் உலைவுறுத்தப் பேய்கண்ட
பிள்ளையென வீற்றிருந்தாள்; பின்னந்தத் தேர்ப்பாகன்

## தேர்ப்பாகன் திரும்பி வந்துரைத்தல்

மன்னன் சபைசென்று, 'வாள் வேந்தே! ஆங்கந்தப்
பென்னரசி தாள்பணித்து 'போதருவீ' எனறிட்டேன்;
என்னை முதல்வைத்(து) இழந்தபின்பு தம்மைஎன்
மன்னர் இழந்தாரா? மாறித் தமைத்தோற்ற
பின்னரெனைத் தோற்றாரா? என்றேநும் பேரவையை
மின்னற் கொடியார் வினவிவரத் தாம்பணித்தார்;
வந்துவிட்டேன்', என்றுரைத்தான்; மாண்புயர்ந்த பாண்டவர்தாம்
நொந்துபோய் ஒன்றும் நுவலா திருந்துவிட்டார்;
மற்றும் சபைதனிலே வந்திருந்த மன்னரெல்லாம்
முற்றும் உரையிழந்து மூங்கையர்போல் வீற்றிருந்தார்.

### குறிப்புரை

1. நுதலினாள் - நெற்றியையுடைய பாஞ்சாலி.

3. பாஞ்சாலர் முடிவேந்தர் - பாஞ்சால நாட்டு மன்னன் துருபதன்.

4. விலைமகள் - சூதில் விலையாக(பணயமாக)ப் பெற்றவள்.

7. ஏவல் - குற்றவேல் பணி.

12. கீழ்மை – இழிகுணம்.

15. சினத்தின் அழல் – கோபத்தீ.

21. தறுகண்மை – அஞ்சாமை, வீரம்.

22. தீயொழுக்கத்தால் முனிவர்களின் சாபம் ஏற்று இறந்தான் வேனன்; இவன் அங்கனுக்குச் சுநிதையிடம் பிறந்தவன்.

26. மஞ்சனே – மைந்தனே, வலியவனே.

27. கிளைத்துவிடும் – தளிர்த்துவிடும்.

32. புல்லியர் – அற்பர்.

42. பூபாலர் – பூவுலகை ஆளும் அரசர்.

44. வல்இடி – கொடிய இடி.

53. அம்மனே – அம்மையே.

58. சாற்றி – சொல்லி.

61. நேமித்தான் – ஆணையிட்டான்.

66. சுயோதனன் – துரியோதனன்.

74. வண்ணம் – அழகு.

86. மூங்கையர் – ஊமையர்.

## பயிற்சி

1. பாஞ்சாலி சபதம் இயற்றிய ஆசிரியர் குறிப்பு வரைக.

2. பாஞ்சாலியை அழைத்து வருமாறு விதுரனிடம் துரியோதனன் கூறியவற்றை எழுதுக.

3. துரியோதனனுக்கு விதுரன் கூறிய அறிவுரைகளைத் தொகுத்து எழுதுக.

4. ஐவருடைய கோபத்துக்குத் துரியோதனன் ஆளாவதற்குக் காட்டப்படும் உவமைகள் என்ன?

5. பாஞ்சாலியைப் பாண்டவரிடம் ஒப்புவித்துவிட்டு, மேலும் என்ன சொல்லவேண்டும் என விதுரன் துரியோதனனிடம் கூறினன்?

6. விதுரன் சொல் கேட்ட துரியோதனன் கூரியது யாது?

7. தேர்ப்பாகன் பாஞ்சாலியிடம் கூறியன யாவை?

8. தேர்ப்பாகனைப் பாஞ்சாலி யாது கேட்டாள்?

9. தேர்ப்பாகன் சென்ற பின் பாஞ்சாலியடைந்த நிலையை விளக்குக.

10. இடஞ்சுட்டி விளக்குக.
'முன்னே பாஞ்சாலன் முடிவேந்தன் ஆவிமகள்'

11. 'பேய் கண்ட பிள்ளையென' — உவமேயத்துடன் பொருத்தி விளக்குக.

## 6. தேம்பாவணி

நூல் :— தேம்பாவணி, தேம்பாத - வாடாத, அணி - மாலை வாடாத மாலை போன்றது இந்நூல்.

இந்நூல், சூதேய நாட்டில் பிறந்த வளன் எனும் சூசையப்பர் பெருமையைக் கூறுவது. இந்நூலில் பெரும் பிரிவு காண்டம் என்றும், உட்பிரிவுபடலம் என்றும் பெயர் பெறும். இதில் மூன்று காண்டங்களும், முப்பது படலங்களும் உள்ளன.

ஆசிரியர் :— வீரமாமுனிவர். இவரது இயற்பெயர் கான்ஸ்டன்டைன் ஜோசப் பெஸ்கி' என்பது இத்தாலிய நாட்டில் காஸ்டிகிலியோனே எனும் ஊரில், கி. பி. 1680-ல் பிறந்தவர், கிறித்துவ மதத்தைப் பரப்ப 1706-ல் இந்தியாவுக்கு வந்தார்; திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள வடக்கன்குளம் எனும் ஊரில் தங்கித் தமிழ் கற்றுப் புலவராய்த் திகழ்ந்தார்; சுப்பிர தீபுக் கவிராயரிடம் தமிழ் பயின்றார்; தமிழில் பல நூல்கள் இயற்றியுள்ளார்.

பாடப்பகுதி :— அகஸ்தஸ் ராயன் ஆணைப்படி பெயரும் வரியும் கொடுக்கப் பெத்தலேம் நகரம் வந்த சூசைக்கும் கருவுற்றிருந்த மரி அம்மைக்கும் அந்நகரத்தார் இடங்கொடாமையால், வருந்திய அவர்கள். ஒரு கற் குகையை அடைந்தார்கள். அங்கு இயேசுநாதர் பிறந்தார்,

### இயேசுநாதர் பிறந்த நாள்

மாத மார்கழி வைகல் ஐயைந்தாய்
ஏதி லாநிச கிருத்தை மூவைந்தாய்
ஆதி நாளென ஆதி நாதனைக்
காதல் நாயகி களிப்பின் நல்கினள். 1

### தேவ தூதர் குழந்தையை ஏந்தல்

சொக்க ளாவுருத் தோன்றிய தோன்றலை
மிக்க யேலொடு காபிரி யேல்விழைந்(து)
ஒக்க ஏந்தினர் - ஒக்கவும் தாய்முனா
மக்கள் நாதனை மாண்பெழக் காட்டினர். 2

## தாயும் தேவதூதரும் குழந்தையை வணங்குதல்

காந்தள் நேரிய செங்கரத்[து] ஏந்தினள்
ஏந்த மார்பில் இறுகவும் சேர்த்தனள்
வாய்ந்த பூம்பதம் நீவி வணங்கினள்
ஆய்ந்த நூல்கடந் தாருணர்வு எய்தினுள் 3

## குழந்தையைக் காணுமாறு சூசையை மரியாள் அழைக்க, சூசை குழந்தையைக் கண்டு கையில் ஏந்தி மகிழ்தல்

இந்து நேர்நுதல் மீன்கள் நேர்விழி
இண்டை நேர்முக நீமையால்
கந்த நேர்நளிர் தாது நேருடல்
காட்டு நாதனை அம்புயச்
சந்தம் நேரிய கன்னி நேர்கையில்
தாம நேரிய முத்தெனச்
சிந்து நேர்நயம் மூழ்கு சீர்மையில்
தேற நோக்கினன சூசையே. 4



கைத்த லத்தில் எடுத்து மார்பொடு
காதல் ஓங்க அணைத்தலும்
முத்த மிட்டலும் நோக்கில் தீட்டலும்
முற்ற நீரில் நனைத்தலும்
சித்த முற்றலும் நாண்ம லர்க்கழல்
சென்னி யின்மிசை வைத்தலும்
இத்தி றத்திலும உள்ம கிழ்ந்துறும்
இன்பம் எல்லையும் இல்லையே. 5

## குழந்தையைச் சூசை பாராட்டுதல்

களித்த நாளில் அரும்புந்தென்
காலே இனிதீங[கு] அரும்புதியே!
துளித்த நானத் தேனரும்பத்
துணர்நாண் மலர்காள் அரும்புதிரே!
விளிதத நாகு மாங்குயில்காள்
விளைத்தென பாவை அரும்புதிரே!
அளித்த நாதன் நாண்கனிய
அன்பு துயிலாய்த் துயில்கின்றுன். 6

கண்பட்[டு] உறங்கக் கண்டேனு
கருணு கரனே! களிக்கடலே!
புண்பட்[டு] உலையும் நெஞ்சிற்கோர்
பெருவா மருந்தே! அருளன்பே!
மண்பட்[டு] அலையும் கடலன்ன
மருள்வன் நெஞ்சிற்[கு] உயிர்நிலையே!
விண்பட்[டு] உயர்ந்த செல்வரசே!
எம்மேல் இரங்கும் தயையிதுவோ?' 7

என்ருன் அழுதான் உள்ளுருகி
இன்பக் கடலாழ்ந் தன்ருழ்ந்தான்
குன்ரு இறையோன தயைக்கடலுள்
குளித்தான் நீந்திக் கரைகாணுன்
சென்ருன என்ன மெய்ம்மறந்தே
சிறிதோர் கால்நின்[று] உணர்ந்தவைவான்
நின்ரூ கண்டுள் அதிசயப்ப
நிகரில் அன்பால மீண்டுரைப்பான்: 8

அறந்தாய் தந்தை சுற்ற முமற்
றனைத்தும் நீயே; கதிநீயே;
பிறந்தாய் உலகிற்[கு] உயிரன்னுய்!
பிறந்தெம் துயரும் எம்பகையும்
துறந்தாய்; எங்கள் சிறைதீர்த்தாய்
துகள்பூட் டியவீட் டுயர்வாயில்
திறந்தாய்; இவையா வரும்அறியத்
திறன்செய்[து] அருள்செய்[து] இறங்காயோ?' 9

## குழந்தை கண் விழித்தல்

துஞ்சுந் தன்மைத்[து] எவ்வுலகும்
துணையற் ருள்வோன் அவைகேட்டு
விஞ்சுந் தன்மைத்[து] ஓங்கவளன்
விளவே விளக்கும் விழிவிழித்தான்;
எஞ்சுந் தன்மை உலகுணர்த்த
இயைந்த தன்மை உலகுணர்த்த
அஞ்சுந் தன்மைத்[து] எதிர் இறைஞ்சும்
அமரர்க் குறையா[து] ஏவவிட்டான். 10

## குறிப்புரை

1. வைகல்—நாள் (தேதி) ஐ × ஐந்து = இருபத்தைந்து, இருத்தை — நாழிகை, ஆதிநாள் — ஞாயிற்றுக் கிழமை, கலகினுள்—பெற்றுள்.

2. சொக்கு — அழகு அளா — கலந்த, மிக்கேயல், காபிரி யேல்—தேவ தூதர்கள்.

3. காந்தன் — கார்த்திகைப் பூ, நீவி — தடவி, உணர்வு — ஞானம்.

4. இந்து—பிரைச் சந்திரன், மீன் — விண்மீன், இண்டை — தாமரை, கந்தம் நேர் - மணம் நிறைத்த, நளிர்-குளிர்ந்த, தாது—மகரந்தம் (மலர்), அம்புயம்—தாமரை, தாமம் நேரிய—மாலையில் பொருந்திய சிந்து—(இன்பக்) கடல்.

5. நோக்கில் திட்டலும் — கண்ணில் ஒற்றி, சித்தம் முற்றலும் — மனம் ஓங்கி.

6. தென்கால் —தென்றல் காற்று அநுப்புதி — வீசுவாயா, நானத்தேன் — வாசனைத் தேன், துணர் — கொத்து நாகு — இளமை, பாவை — இசைப் பாட்டினை, அன்பு துயிலா — அன்பு குறையாமல்.

7. கண்பட்டு —கண் மூடி, பொருவா-ஒவ்வாத, எண்பட்டு- எண்ண முடியாது மேம்பட்டு, மனப்பட்டு— மண்ணுலகைச் சூழ்ந்து

8. ஆழ்ந்தன்று ஆழ்ந்தான்-ஆழ்ந்து மூழ்கினுன், ஓர் கால்- நேரம், பொழுது.

9. துகள் பூட்டிய — பாவம் அடைத்த, திறன் செய்து— வல்லமை கொண்டு.

10. துஞ்சும்—தூங்கும்.

## பயிற்சி

1. இயேசு நாதர் என்று பிறந்தார் ?

2. குழந்தையைப் பாராட்டிச் சூசை துதித்ததை எழுதுக.

3. உவமையை விளக்குக :— 'தாழும் நேரிய முத்தென'

4. தேம் ரவணி -— பெயர்க் காரணமும், நூலாசிரியர் குறிப்பும் வரைக.

# IV. பல்சுவைப் பகுதி

## 1. வருணனை

### கண் விழிக்கும்

குளிரும் தென்றல் அசைந்தசைந்து
    குலவி மகிழ்ந்து தவழ்ந்திடவே
மிளிரும் உதயச் செவ்வண்ணம்
    விரைந்து கிழக்கில் பெருகிடவே
ஒளிரும் சிறைமென் புள்ளினங்கள்
    ஒன்றாய் இசைகள் பாடிடவே
தளிரும் இலையும் வளர்காவில்
    தண்ணார் மலர்கள் கண்விழிக்கும்.

சூளாமணி] [தோலா மொழித் தேவர்

### குறிப்புரை

சூளாமணி ஐஞ்சிறு காப்பியங்களுள் ஒன்று இந்நூலாசிரியர் தோலா மொழித் தேவர். இவர் கி. பி. 10-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் வாழ்ந்தவர். கார்வெட்டி நகரத் தலைவனான விசயன் என்னும் அரசன் இவரை ஆதரித்தனன்.

குலவி—விளங்கி, மிளிரும்—விளங்கும், செவ்வண்ணம்—செந்நிறம், புள்ளினம்—பறவைக்கூட்டம், கா—சோலை, தண் ஆர்—குளிர்ச்சி பொருந்திய, கண் விழிக்கும்—மலரும்.

### நாணி இறைஞ்சும்

கொடுவரி தாக்கி வென்ற வருத்தமொடு
நெடுவரை மருங்கின் துஞ்சும் யானை
நனவிற் றாண் செய்தது மனத்த தாகலின்
கனவிற் கண்டு கதுமென வெரீஇப்
புதுவ தாக மலர்ந்த வேங்கையை

அதுவென உணர்ந்ததன் அணிநல முருகிப்
பேணா முன்பிற்றன சினந்தணிந் தம்மரங்
காணும் பொழுதின் நோக்கல் செலலாது
நாணி இறைஞ்சு நன்மலை நன்னுடை

கலித்தொகை] [கபிலர்

குறிப்புரை

கலித்தொகை: இது எட்டுத் தொகை நூல்களுள் ஒன்று இது குறிஞ்சி பாலை, முல்லை, மருதம், நெய்தல் என்னும் ஐந்து திணைப் பகுதிகளைக் கொண்டது

கொடுவரி – வளைந்த வரிக் கோடுகளை உடைய புலி. நெடு வரை – பெரிய மலை மருங்கு பக்கம் துஞ்சும் - தூங்கும் நனவில்தான் செய்தது புலியைக் கொன்ற செயல் கது என - விரைவாக. வெரீஇ – அஞ்சி வேங்கை - வேங்கைப்பூ. அது என - புலி என்று அணிநலன் அழகு நலம் முருக்கி அழுத்தி பேணா - அசையாத நோக்கல் செல்லாது - பார்க்க விருபபாது நாணி - வெட்க மடைந்து. இறைஞ்சும் – தலைகவிழும்

நடந்தாய் வாழி!

மருங்கு வண்டு சிறந்தார்ப்ப
மணிப்பூ ஆடை அதுபோர்த்துக்
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்தாய் வாழி காவேரி!
கருங்க யற்கண் விழித்தொல்கி
நடந்த வெல்லாம் நின்கணவன்
திருந்து செங்கோல் வளையாமை
அறிந்தேன் வாழி காவேரி!

சிலப்பதிகாரம்] [இளங்கோவடிகள்

குறிப்புரை

சிலப்பதிகாரம் ஐம்பெரும் காப்பியங்களுள் ஒன்று.

மருங்கு – பக்கம். கயல் கண் மீன்களை ஒத்த கண்கள், ஒல்கி – அசைந்து

## பயிற்சி

1. சூளாமணி ஆசிரியர் வரலாற்றுக் குறிப்புத் தருக.
2. மலர்கள் கண் விழித்தது எங்ஙனம் வருணிக்கப் படுகிறது?
3. கலித்தொகை எந்நூல் வகையைச் சார்ந்தது?
4. களிறு நாணி இறைஞ்சக் காரணம் என்ன?
5. காவிரியின் நடை இளங்கோவடிகளால் எவ்வாறு சிறப்பித்துச் சொல்லப்படுகிறது?

## 2. சீட்டுக் கவி

செய்யுள் வடிவில் எழுதப்படும் கடிதத்திற்குச் **சீட்டுக் கவி** என்பது பெயர். முற்காலத்தில் புலவர்கள் பிறருக்குத் தெரிவிக்க விரும்பிய செய்தியைக் கவியாகவே புனைந்தார்கள்.

கீழ்வரும் சீட்டுக் கவி மதுரையில் கோயில்கொண்ட சோமசுந்தரப் பெருமாள்; பாணபத்திரன் என்னும் தன் அடியவனுக்கு உதவுமாறு, சேர மன்னனுக்கு எழுதி யனுப்பியதாகும்.

### சிவன் விடுத்த சீட்டுக்கவி

மதிமலி புரிசை மாடக் கூடல்
பதிமிசை நிலவும் பானிற வரிச்சிற(கு)
அன்னம் பயில்பொழில் ஆலவாயில்
மன்னிய சிவன்யான் மொழிந்திடு மாற்றம்
பருவக் கொண்மூப் படியெனப் பாவலர்க்(கு)
ஒருமையின் உரிமையின் உதவி அணிதிகழ்
குருமா மணிதிகழ் குலவிய குடைக்கீழ்ச்
செருமா உகைக்கும் சேரலன் காண்க;
பண்பால் யாழ்பயில் பாண பத்திரன்
தன்போல் என்பால் அன்பன் தன்பால்
காண்பது கருதிப் போந்தனன்
மாண்பொருள் கொடுத்து வரவிடுப் பதுவே.

## குறிப்புரை

மதி – சந்திரன், மலி – பொருந்திய, புரிசை – மதில், கூடல் – மதுரை நகரம். பால் நிறம் – பால் போன்ற வெண்ணிறம். வரி – கோடு, பயில் – தங்கிய. மாற்றம் – சொல். கொண்மூ – மேகம், படி – ஒப்பு. குரு – நிறம். குலவிய – விளக்கமான. செரு – போர், மா – குதிரை. உகைக்கும் – செலுத்தும். சேரலன் – சேரமான் பெருமாள் நாயனார். தன்போல் – அவனைப் போல, வரவிடுப்பது – அனுப்பி வைப்பாயாக.

## 3. சிலேடை

சிலேடை என்பது ஒருசொல் அல்லது சொற்றொடர் இரண்டு அல்லது பல பொருள்களைத் தருமாறு அமைத்துப் பாடப்படுவது அது செம்மொழிச் சிலேடை, பிரிமொழிச் சிலேடை என இரு வகைப்படும்.

### மயிலுக்கும் கரும்புக்கும் சிலேடை

மேனியெலாம் கண்ணுறலால் வேள்விரும்பும் தன்மையினல்
ஆனபசுந் தோகையினல் ஆடலினல்-மீனவன்நேர்
மானபரா! நெல்லைநகர் வாழுமுத்துச் சாமி மன்னு!
கானமயில் ஒப்பாம் கரும்பு.

—அழகிய சொக்கநாதர்.

### நெல்லைச் சிலேடை வெண்பா

ஆர்மிழியுண் போருந்தோப் பாக்குநரும் நீத்தோரும்
நேர்பழங்க ணட்டிடும் நெல்லையே–சூர்படுத்தோன்
மாதுருக்கங் காதரனர் மாதுருக்கங் காதரனர்
மாதுருக்கங் காதரனர் வாழ்வு.

—வெ. ப. சுப்பிரமணிய முதலியார்

1 இப்பாட்டை இயற்றியவர் அழகிய சொக்கநாதர் எனும் கவிராயர், இவர் நெல்லையில் வாழ்ந்த முத்துச்சாமி என்னும் வள்ளலால் ஆதரிக்கப்பட்டவர்.

மயில்: மேனியெல்லாம் கண் - உடல் முழுவதும் கண்கள், வேள் - முருகன்; பசந்தோகை விரித்தாடுதல்

கரும்பு: மேனியில் கணு: வேள் - மன்மதன் (மன்மதனுக்கு வில் கரும்பு). தோகை அசைந்தாடுதல்

மீனவன் நேர் - பாண்டியனை ஒத்த

2 இப்பாட்டை இயற்றியவர் வெள்ளகால் சுப்பிரமணிய முதலியார் ஆவர்.

1 ஆர் பிழியுண்போர் பழங்கள் நட்டிடுவர்:

ஆர் - நிறைந்த பிழி - கள் பழங்கள் பழமையான முற்றிய கள் நட்டிடுவர் - விரும்புவர்

2. தோப்பு ஆக்குநர் பழங்கள் நட்டிடுவர்:

தோப்பு ஆக்குநர் - தோப்பு உண்டாக்குபவர், பழங்கள் - பழம் தரும் மரங்களை, நட்டிடுவர் - நடுவார்கள்.

3. நீத்தோர் பழங்கண் அட்டிடுவர்:

நீத்தோர் - துறவிகள், பழங்கண் - துன்பம், அட்டிடுவர் - நீக்குவர்.

1. சூர்படுத்தோன் மாதருக்கு அங்கு ஆதரனூர்:

சூர்படுத்தோன் - சூரபன்மனைக் கொன்ற முருகன், மாதுருக்கு - தாயான உமைக்கு, ஆதரனூர் இருப்பிடமாக உள்ளவர்.

2. மாது உரு கங்காதரனூர்:

மாது - உமையை உரு - தமது பாதி உருவிலே கொண்ட கங்கா தரனூர் - கங்கையை முடியிலே கொண்டவர்.

3. மா துருக்கம் காது அரனூர்:

மா - பெரிய துருக்கம் - அரண்களை, காது - அழித்த, அரனூர் - சிவபெருமான்.

## பயிற்சி

1. சீட்டுக்கவியாவது யாது ?
2. சிவபெருமான் யாருக்கு ஓலை அனுப்பினார் ?
3. அதில் அவர் வேண்டியது யாது ?
4. சிலேடையாவது யாது ?
5. மயிலுக்கும் பாம்புக்கும் கூறப்பட்ட சிலேடை யாது?
6. நெல்லைச் சிலேடை வெண்பாவைப் பாடியவர் யார்?
7. "ஆர்பிழி ... நெல்லையே"—இவ்வடிவுக்குச் சிலேடைப் பொருள் எழுதுக.
8. "சூர்படுத்தோன்......கங்காதரனார்" இவ்வடிக்குச் சிலேடைப் பொருள் எழுதுக.

## சிறு நூல்கள்

### (அ) பிள்ளைத் தமிழ்

#### வருகைப் பருவம்

வாரா திருந்தால் இனிநானுன்
    வடிவேல் விழிக்கு மையெழுதேன் ;
மதிவான் நுதற்குத் திலகமிடேன்;
    மணியால் இழைத்த பணிபுனையேன்;
பேரா தரத்தி னெடுபழக்கம்
    பேசேன்; சிறிதும் முகம்பாரேன்
பிறங்கு சுவைப்பால் இனிதூட்டேன;
    பிரிய முடனொக் கலையில்வைத்துத்
தேரார் வீதி வளங்காட்டேன்
    செய்ய கனிவாய் முத்தமிடேன்
திகழு மணித்தொட் டிலில்ஏற்றித்
    திருக்கண் வளரச் சீராட்டேன்;
தாரார் இமவான் தடமார்பில்
    தவழும் குழந்தாய்! வருகவே!
சாலிப் பதிவாழ் காந்திமதித்
    தாயே! வருக வருகவே!

காந்திமதியம்மை பிள்ளைத் தமிழ்] [அழகிய சொக்கநாதர்

## குறிப்புரை

பிள்ளைத் தமிழ் என்பது தமிழில் வழங்கும் தொண்ணூற்றாறு வகைச் சிறு நூல்களுள் ஒன்று; கடவுள், பெரியோர், சான்றோர் ஆகியோரைக் குழந்தையாக உருவகித்துப் பாடுவது. இது பத்துப் பருவங்களாக அமைத்துப் பாடப்படும். இது ஆண்பால் பிள்ளைத் தமிழ், பெண்பால் பிள்ளைத் தமிழ் என இரு வகைப்படும்.

ஆண்பால் பிள்ளைத் தமிழுக்குரிய பருவங்களாவன: காப்பு, செங்கீரை, தால், சப்பாணி, முத்தம், வாரானை (வருகை), அம்புலி சிற்றில், சிறுதேர், சிறுபறை.

பெண்பால் பிள்ளைத் தமிழ், முன்கூறிய பருவங்களுள் முதல் ஏழு பருவங்களோடு கழங்கு, நீராடல், ஊசல் என்ற மூன்றும் சேர்த்துப் பாடுவது

இப்பாட்டு, திருநெல்வேலியில் கோவில் கொண்டுள்ள காந்திமதி யம்மையைப் பற்றிப் பாடப்பட்டதாகும்.

வருகைப் பருவமானது, தளர் நடை பயிலும் பருவத்தில் உள்ள குழந்தையைப் பார்த்து வருக வருக என்று தாய் கைகாட்டி அழைப்பதாக அமைத்துப் பாடுவது.

நுதல்-நெற்றி, திலகம்-பொட்டு, பேராதரம்-பேரன்பு, ஒக்கலை-இடுப்பு, தார்-மாலை, இமவான்-இமயவேந்தன், சாலிப்பதி-திருநெல்வேலி.

### (ஆ) பரணி

#### கலிங்கத்துப்பரணி

போர்

(கலிங்கப் போர்க்களத்தில் வீரர், குதிரை, யானை, தேர் ஆகிய படைகள் போரிட்ட செயல் கூறப்படுகிறது.)

#### படைகளும் குதிரைகளும்

எறிகட லொடுகடல் கிடைத்தபோல்
இருபடை களும்எதிர் கிடைக்கவே
மறிதிரை யொடுதிரை மலைத்தபோல்
வருபரி யொடுபரி மலைக்கவே

## யானைப்படையும் தேர்ப்படையும்

கனவரை யொடுவரை முனைத்தபோல்
கடகரி யொடுகரி முனைக்கவே
இனமுகில் முகிலொடும் எதிர்த்தபோல்
இரதமும் இரதமும் எதிர்க்கவே

## அரசர்களும் அரசர்களும்

பொருபுலி புலியொடு சிலைத்தபோல்
பொருபட ரொடுபடர் சிலைக்கவே
அரியொடு அரியினம் அடர்ப்பபோல்
அரசரும் அரசரும் அடர்க்கவே

## இரத்த வெள்ளம்

குருதியின் நதிவெளி பரக்கவே
குடரினம் நுரையென மிதக்கவே
கரிதுணி படும்உடல் அடுக்கியே
கரையென இருபுடை கிடைக்கவே

கலிங்கத்துப்பரணி] [சயங்கொண்டார்

## குறிப்புரை

**பரணி :** தொண்ணூற்றாறு சிறு நூல் வகைகளுள் ஒன்று. இது போர்க்களத்தில் ஆயிரம் யானைகளைக் கொன்று, வெற்றி பெற்ற வீரனைச் சிறப்பித்துப் பாடுவதாகும்.

இது குலோத்துங்கச் சோழன் கலிங்க நாட்டின் மீது படையெடுத்துச் சென்று வெற்றி பெற்ற கலிங்கப் போரைக் குறித்துப் பாடப்பட்டது.

**ஆசிரியர் :** சயங்கொண்டார் : தீபங்குடி என்னும் ஊரில் பிறந்தவர்; இ. பி 12-ஆம் நூற்றாண்டில் வாழ்ந்தவர். 'பரணிக்கோர் சயங்கொண்டான்' எனச் சிறப்பிக்கப்பட்டவர்.

எறி - அலை வீசும் மறி - மடிந்து வரும், மலைத்த - போர் செய்தன, கனவரை- மேகம் தவழும் மலை. முனைக்க - எதிர்க்க. சிலைத்த-எதிர்த்துப் போரிட்டன, பொருபடர்-போரிடும் படைவீரர். அடர்க்க-போரிட, புடை-பக்கம்.

## குறிப்புரை

## (இ) பள்ளு

### ஆற்று வரவு (குறிஞ்சி)

வானக் குரிசில் வள்ளலாய்—வரைக்
கோனைப் பரிசு கொள்ளலாய்

வழங்கும் ஆறும் புறப்பட்டே-புனல்
முழங்கும் ஆறும் திறப்பட்டே

தானக் களிறு மடிந்திடக்—கொலை
ஏனக் கழிறு படிந்திடத்

தழையின் ஆரம் உந்தியும்—பசுங்
கழையின் ஆரம் சிந்தியும்

கானக் குளவி அலையவே—மது
பானக் குளவி கலையவே

காட்டுச் சாதி வேரிற்போய்க்—குற
மோட்டுச் சாதி ஊரிற்போய்ச்

சேனைப் புரவி அழகனார்—மரு
கோனைப் பரவி அழகுபூந்

தினையை வனத்தில் உதிர்த்துப்—பாலை
அனைய வனத்தில் எதிர்ந்ததே.

—முக்கூடற்பள்ளு

## குறிப்புரை

பள்ளு: இது பள்ளர் வாழ்வை விளக்குவதற்காகப் பாடப் படுவது. பள்ளர் - உழவர். இது திருமுக்கூடல் என்னும் ஊரில் எழுந்தருளியுள்ள அழகர் என்னும் திருமால்மீது பாடப்பெற்றது. முக்கூடல் என்பது திருநெல்வேலி மாவட்டத்தில் உள்ள ஒரு சிற்றூர்.

ஆற்றுநீர் வரும்போது குறிஞ்சி நிலத்தில் பாயும் அழகைக் குறிப்பது இச்செய்யுள்.

இதைப் பாடிய ஆசிரியர் பெயர் தெரிந்திலது.

வானக்குரிசில்—இந்திரன் (இந்திரனால் மழை பெய்விக்கப் படுகிறது என்பது நம்பிக்கை). வரைக்கோன்—மலையாகிய தலைவன், புனல் — தண்ணீர், தானம் — மதம், ஏனக்களிறு—ஆண் பன்றி, களிறு — யானை. தழையின் ஆரம்—சந்தனம். கழை — மூங்கில், கழையின் ஆரம்—முத்து, கானக்குளவி—மரமல்லிகை, மது—தேன். தேனைக் குடிக்கும் குளவி—வண்டு, சாதி—சாதி மல்லிகை, குறச்சாதி, வனம்—காடு, தினைப்புனம்.

இப்பாடலில் சிலேடைப் பொருள் அமைந்திருப்பதைக் காண்க.

## பயிற்சி

1. குறிப்பு வரைக :—
   பிள்ளைத் தமிழ், பரணி, பள்ளு.
2. தன்னிடம் வராவிட்டால் தான் என்னென்ன செய்யமாட்டாள் எனத் தாய் கூறுகின்றாள் ?
3. கலிங்கத்துப்பரணி—பொருள் தருக.
4. கலிங்கத்துப்பரணி பாடியவர் யார் ?
5. அரசர்களும் அரசர்களும் போரிட்ட செயல் எவ்வாறு கூறப்படுகிறது ?
6. இரத்த வெள்ளம் சிறப்பிக்கப்படுவது எங்ஙனம் ?
7. ஆற்று வெள்ளம் வருவது எவ்வாறு சிறப்பித்துக் கூறப்படுறது ?
8. பொருள் தருக :— ஒக்கலை, பேராதரம், கனவரை, ஏனக்களிறு, கழை.

## 5. வழிபாட்டுப் பாடல்கள்

### விளம்புமா விளம்பே

ஒளிவளர் விளக்கே! உலப்பிலா ஒன்றே!
    உணர்வுசூழ் கடந்தோர் உணர்வே!
தெளிவளர் பளிங்கின் திரள்மணிக் குன்றே!
    சித்தத்துள் தித்திக்கும் தேனே!
அளிவளர் உள்ளத்து ஆனந்தக் கனியே!
    அம்பலம் ஆடரங் காக
வெளிவளர் தெய்வக் கூத்துகந் தாயைத்
    தொண்டனேன் விளம்புமா விளம்பே. 1

திருவிசைப்பா] [திருமாளிகைத் தேவர்

### சிந்தித்து ஏத்துவாம்

வானமும் பூமியும் மகிழ்கொண் டோங்கிட
ஞானமும் நன்மையும் நனிசிறந்திட
ஊனமும் பாவமும் ஒழியத் தோன்றிய
தீனரட் சகன்பதம் சிந்தித் தேத்துவோம் 2

இரட்சணிய யாத்திரிகம்] [கிருஷ்ணப் பிள்ளை

### போற்றி போற்றி

அரபிய நாட்டில் தோன்றி
    ஆண்டவன் ஒருவன் என்னும்
மரபினை வாழச் செய்த
    மகமது நபியே! போற்றி!
தரையினில் பொதுமை மல்கிச்
    சகோதர நேயம் ஓங்கக்
கரவிலா மறையைத் தந்த
    கருணையே! போற்றி போற்றி! 3

பொதுமை வேட்டல்] [திரு. வி. கல்யாணசுந்தரனர்

## குறிப்புரை

1. திருவிசைப்பா: இது சைவத் திருமுறைகள் பன்னிரண்டனுள் ஒன்பதாம் திருமுறையாம்.

உலப்பு இலா—அழிவு இல்லாத; சித்தம்—அறிவு; அளி—அன்பு; விளம்புமா—புகழ்ந்து உரைக்குமாறு.

2. இரட்சணிய யாத்திரிகம்; கிறிஸ்தவ மதநூல்
நனி—மிகவும், தின ரட்சகன்—ஏழைகளைக் காப்பவன்

3. பொதுமை வேட்டல் — உலகில் பொது சமயக் கோட்பாட்டை விரும்புதல்.

மல்கி — நிறைந்து; நேயம் — அன்பு; கரவு இலா — மறைவு இல்லாத.

## வினாக்கள்

1. திருமாளிகைத்தேவர் இறைவனை எவ்வாறு விளக்கினார்?
2. தினரட்சகன் எவ்வாறு தோன்றினான்?
3. மகமது நபியைத் திரு. வி. க. போற்றுவது எங்ஙனம்?
4. திருவிசைப்பா எத்தனையாவது திருமுறை?

# உரைநடைப் பகுதி

## 1. திருக்குறள் — உலகப் பொது நூல்

தமிழ்ப் பெரியார் திரு. வி. கலியாணசுந்தரனாரவர்கள்

[திரு. வி. க. இந்த நூற்றாண்டில் வாழ்ந்த பெரும் புலவர் 'தமிழ்த் தென்றல்' என்று வழங்கப்பட்டவர்; நூல் பல இயற்றியவர்; சமரச சன்மார்க்க நெறி நின்றவர்.]

'ஒன்றே குலமும்; ஒருவனே தேவனும்'; — திருமூலர்.

### திருவள்ளுவர்

திருவள்ளுவர் பிறப்பு வளர்ப்பு முதலியவற்றைப் பற்றிய உண்மை வரலாறு நமக்குக் கிடைக்கவில்லை. அவரது வரலாறு பலவாறு பகரப்படுகின்றது. இந்நாளில் வழங்கி வரும் அவர் தம் வரலாறுகளெல்லாம் புனைந்துரைகளே. திருவள்ளுவர் தமிழ் நாட்டிற் பிறந்து வளர்ந்தவர் என்பதும், இல்வாழ்க்கையில் நின்று ஒழுகினவர் என்பதும், தெய்வப் புலவர் என்பதும், அறவோர் என்பதும் அவர் அருளிய நூலால் இனிது விளங்குகின்றன.

### நாடும் நூலும்:

திருவள்ளுவர் தமிழ்நாட்டில் தோன்றியவர்; திருக்குறள் என்ற நூலை யாத்தவர். இங்கே அவர் தோன்றிய நாட்டிற்குச் சிறப்பளிப்பதா? அல்லது அவர் யாத்த நூலுக்குச் சிறப்பளிப்பதா? நூலுக்குச் சிறப்பளிப்பதே சால்பு. ஏன்? திருக்குறள் தமிழ்நாட்டுக்குமட்டும் பயன்படுவதாய் அமையவில்லை. அஃது உலகுக்குப் பயன்படுவதாய் அமைந்துள்ளது. நாட்டினும் உலகம் பெரிதன்றோ?

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை ஈன்ற பெருமை தமிழ்நாட்டுக்கு உண்டு. இது குறித்துத் தமிழ் மக்கள் இறும்பூதெய்தலாம்; இறுமாப்படையலாம். ஆனால், திருவள்ளுவரைத் தமிழ்நாட்டளவில் கட்டுப்படுத்தலாகாது. அது தளையாகும்; சிறையாகும்.

உலகுக்கென்று ஒரு நூலை அளித்த ஒருவரை உலகவர் என்று கோடலே சிறப்பு. 'வள்ளுவன் தன்னை உலகினுக்கே தந்து- வான்புகழ் கொண்ட தமிழ்நாடு' என்று பாரதியார் பாடியதும் ஈண்டுக் கருதற்பாலது.

**உலக நூல்:—**

திருவள்ளுவர் நூல் அறத்துப்பால் பொருட்பால், காமத்துப் பால் என்ற முப்பாலால் ஆக்கப்பட்டது. அறமும் பொருளும் காதலும் ஒரு வகுப்பார்க்கோ, ஒரு மதத்தார்க்கோ ஒரு நிறத் தார்க்கோ, ஒரு மொழியார்க்கே, ஒரு நாட்டார்க்கோ, உரியன அல்ல. அவை மன்பதைக்கு — உலகுக்குப் — பொது திருக்குறளில் — எழுவாய் முதல் இறுவாய் வரை — உலகு என்னும் சொல்லும், பொதுமைப் பொருள் உணர்த்தும் சொற் களும் சொற்றொடர்களும் தக்க இடங்களில் திகழ்கின்றன. இன்னோரன்ன குறிப்புகள் திருக்குறள் உலக நூல் என்பதை வலியுறுத்துவன.

**தமிழ் நாடும் உலகமும்:—**

திருவள்ளுவர் தமிழ்நாட்டிற் பிறந்து வளர்ந்த காலத்தில் தமிழ்நாடு உலகுடன் தொடர்பு கொண்டிருந்ததா? இல்லை, பெரிதும் இல்லை. அக்காலத்தில் தமிழகத்தில் அவர் வாயிலாக உலக நூல் எவ்வாறு மலர்ந்தது?

நாம் வாழும் இவ்வுலகம் தோன்றிச் சுமார் இருநூறு கோடி ஆண்டுகளாயின. முதல் ஒரு நூறு கோடி ஆண்டு இவ்வுலகம் அழற்பிழம்பாய், அனலாவியை உமிழ்ந்து கிடந்தது. பின்னே அது படிப்படியே தணியத் தொடங்கிற்று. அனல் தணிந்து தணிந்து, இதுபோழ்து ஏறக்குறைய நாற்பது கல் தொலைவில் கனன்று கொண்டிருக்கின்றது. தணிவு உற உற, ஆங்காங்கே அனல் நின்று நின்று வெம்மை அலைகளைக் கொழித்துச் சென்றது. அலைகள் யாண்டும் ஒரே விதமாகக் கொழிக்கவில்லை; சில இடங்களில் வன்மையாய், சில இடங்களில் மென்மையாய், சில இடங்களில் இடைமையாய்க் கொழிக்கலாயின. வன்மை மென்மை இடைமைக்கேற்ற வண்ணம் நிலத்தில் தட்ப வெப்பம் தவழும்.

அனல் மூதல் முதல் தணியத் தொடங்கிய இடம் தமிழ்நாடு. இஃது ஆராய்ச்சியாளர் கண்ட உண்மை. தமிழ் நாட்டின் தட்ப வெப்ப நிலேயோ வன்மையதும் அன்று; மென்மையதும் அன்று; இடைமையது. தமிழ் நாட்டின் முதன்மைத் தணிவும் தட்ப வெப்ப நிலேயும் அதைப் பல வழியிலும் பண்படுத்தின. அதனுல் தமிழ் நாட்டின் பண்பாடு தொன்மையதாயிற்று. முதன்மையும் தொன்மையும் வாய்ந்த பண்பாட்டில் உலக வாழ்க்கைக் கூறுகள் கருக்கொண்டன; கருக்கொள்ளல் இயல்பு. அக்கரு தெய்வப் புலவராகிய திருவள்ளுவருக்குப் புலனுயிற்று. ஆகவே, அவர்பால் உலக நூல் ஒன்று மலர்ந்ததெனக.

## திருக்குறளின் உயிர்ப்பு :

திருக்குறளின் உள்ளக் கிடக்கையைப் பலபடக் கூறலாம். அவற்றுள் உயிர்ப்பாய் ஒளிர்வது ஒன்று. அஃது 'உலகம் ஒரு குலம்', என்பது.

'உலகம் ஒரு குலம்', என்பது பழந்தமிழர் பண்பாட்டினின்றும் முகிழ்ந்த ஒரு பெருங்குறிக்கோள். அக்குறிக்கோள் திருவள்ளுவருள் படிந்து நின்று வளர்ந்து ஒரு சீரிய உலக நூலாயிற்று. அந்நூலின் உள்ளுறை நுண்ணியதாய்ப் பல பேரறிஞரிடம் புகுந்து புகுந்து பல மொழிகளில் பரிணமித்தது. இவ்வாறு திருவள்ளுவர் கருத்துப் பெருகிப் பெருகி, இந்நாளில் விஞ்ஞானத்தில் விராவி மார்க்ஸியமாகவும், தெய்வீகத்திற் கலந்து காந்தியமாகவும் பரவியுள்ளது. விஞ்ஞான மார்க்ஸியமும், தெய்வீகக் காந்தியமும் ஒன்றிய ஒரு கொள்கையே இக்கால உலகை ஒருமைப் படுத்தும் ஆற்றல் வாய்ந்தது. இதை உணர்ந்து தொண்டாற்ற நம் நாடு முற்பட்டால் உலகம் நலம் பெறும்.

## அன்பு வித்து :

'உலகம் ஒரு குலமாதல் வேண்டும்'. என்று பேசுதல் எளிது; எழுதுதல் எளிது. பேச்சும் எழுத்தும் செயலாதல் வேண்டும். செயலே எழுப்ப வல்ல ஒரு கருவி வேண்டும். கருவி உளதா? உளது. அஃது எது? அஃது அன்பு. உலகை ஒரு குலமாக்குதற்கென்று அன்பு இயற்கையில்

அமைந்துள்ளது. அவ்வன்பே வித்து. 'அன்பின் வழியது உயர்நிலை; அஃதிலார்க்கு—என்பு தோல் போர்த்த உடம்பு', என்பது திருவள்ளுவர் வாய்மை.

### மக்கட்பிறவி:

அன்பு விரைந்து பெருகும் வாய்ப்பு மக்கட்பிறவிக்கு உண்டு. அதனால், அப்பிறவி விழுமியதென்று ஆன்றோரால் போற்றப் பெற்றது. மக்கட்பிறவி விழுமியதே. எப்பொழுது? அப்பிறவி தன் மாட்டுக் கெழுமியுள்ள அன்பு வளர்ச்சிக்கு உரிய வாய்ப்பை நன்முறையில் பயன்படுத்தினால், அது விழுமியதாகும். இல்லையேல், அது விழுமியதாகாது.

### வாழ்க்கைக் கலை:

அன்பு வழி வாழ்க்கையே பண்பும் பயனும் உடையதாகும். பண்பும் பயனும் உடைய வாழ்க்கையே ஒரு கலை. அவ் வாழ்க்கைக் கலை அன்பிலே வளர்ந்து உருக் கொள்வதென் பதை மறத்தலாகாது. வாழ்க்கைக் கலையே மற்றைக் கலைகளின் தாயகம்.

### திருவள்ளுவர் நெறி:

வாழ்க்கைக் கலையை உலகுக்கு உதவினோர் பலர். அருள் குறிக்கத்தக்க பண்டைச் சான்றோர் ஆதிமனு, அரிஸ் டாட்டல், திருவள்ளுவர் முதலியோர். ஆதி மனு நெறி செவ்வனே செழித்து வந்தது. இடைநாளில் மனு என்ப பெயரால் தோன்றிய சிலர் பழைய செந்நெறிக்குக் கேடு சூழ்ந்தனர். அவரால் பிறப்பில் உயர்வு தாழ்வு, பெண்ணடிமை, தீண்டாமை, கண்மூடிவழக்கங்கள் முதலியன கற்பிக்கப் பெற்றன. அவை தூறுகளாய்ச் செந் நெறியை மறைத்தன. இவ்வாறு ஆதி மனுநெறி குலைந்தது. அரிஸ்டாட்டல் வழியில் பொருமை, நாட்டாசை, சுரண்டல், இகல், போர், கொலை முதலிய கொடுமைகள் மலியலாயின. இம்மலிவால் அரிஸ்டாட்டல் வழி இரத்த ஆறுகியது, திருவள்ளுவர் நெறியோ, அறத்தை அடிப்படையாகக் கொண்டது. அறத்தில் மாசு படிதல் அரிதன்றோ? அதனால்,

திருவள்ளுவர் நெறி சிதைவுபடவில்லை. அறத்தை அடிப்படையாகக் கொண்ட எதுவும் சிதைவுபடாது.

## அறத்தின் இயல்:

திருவள்ளுவர், அறத்தை 'மனத்துக்கண் மாசிலனாதல்; அனைத்தறன்; என்றும், 'அழுக்காரவாவெகுளி இன்னாச் சொல் நான்கும்—இழுக்கா இயன்ற தறம்', என்றும் விளக்கியுள்ளார். இஃது ஊன்றி ஊன்றி முன்னத்தக்கது மனத்தின் முழுத் தூய்மையே அறம் என்பது திருவள்ளுவர் கருத்து.

## முறைகள்:

மனத்துக்கண் மாசிலா அறநிலையை எய்துதற்குத் திருவள்ளுவர் வகுத்த முறைகள் போற்றுதற்குரியன. இல்வாழ்க்கை, வாழ்க்கைத் துணை நலம், மக்கட்பேறு, அன்பு முதலிய அதிகார வைப்பு முறைகளை நோக்குக. அவற்றை நோக்க நோக்கத் திருவள்ளுவர் கோலிய அறநெறி புலப்படும்.

## அன்பும் அறமும்:

இல்வாழ்க்கையாலும், அதன் சார்புகளாலும் அன்பு எழுகிறது. அன்பு மனமாசைக் கழுவும் கருவியாகிறது. மனமாசற்ற நிலையே அறம் என்பது. அறத்தை விளங்கவைப்பது அன்பு. இதற்கு விரிவுரை வேண்டுவதில்லை. திருவள்ளுவர் கண்ட நெறி அன்பால் தெளிவுறும் அறத்தை அடிப்படையாகக் கொண்டது. இதை உளங்கொண்டு திருவள்ளுவர் அருளிய வாழ்க்கைக் கலையில் ஆழ்ந்து திளைத்தால், அது அன்புக்கலை — அறக்கலை — என்பது உறுதிப்படும்' அக்கலை. உலகை ஒரு குலமாக்கும் தகைமையது என்பது சொல்லவும் வேண்டுமோ?

## திருக்குறள் ஒரு சுரங்கம்:

திருக்குறள் ஒரு சுரங்கம். அஃது அவ்வக்கால உலகைப் புரக்கும் பொருள்களை அவ்வப்போது வழங்கும் பெற்றியது. அதினின்றும் இதுகாறும் அறிஞரால் எடுக்கப்பட்ட பொருள்கள் சிலவே; மிகச் சிலவே. இவ்வேளையில் திரண்டு வரும் புது உலகமும், இனித் திரளப்போகும் பல வகை உலகங்களும் ஏற்கத் தக்க பொருள்கள் இன்னும்

திருக்குறளில் மிகைந்து கிடக்கின்றன. திருக்குறட் சுரங்கம் வற்றாதது.

## குறிப்புக்கள்

ஆசிரியர் குறிப்பு: இக்கட்டுரை டாக்டர் மு. வரதராசனார் எழுதிய 'திருக்குறள் அல்லது வாழ்க்கை விளக்கம்' என்னும் நூலின் அணிந்துரையில் ஒரு பகுதியாகும்.

## அருஞ் சொற்பொருள்

புனைந்துரை – கற்பனை, யாத்த – இயற்றிய, இறும்பூது – வியப்பு, தளை – விலங்கு, வான் புகழ் – மேலான புகழ், முப்பால் – மூன்று பகுதிகள், மன்பதை-குடிமக்கள், எழுவாய்-தொடக்கம், வாயிலாக-மூலமாக, அழற்பிழம்பு-நெருப்புருண்டை, தட்பவெப்பம்-சீதோஷ்ணம் தொன்மை-பழமை; உள்ளுறை-உட்பொருள், பரிணமித்தல்-ஒன்றிலிருந்து ஒன்றாகப் பெருகுதல்; விரவி-கலந்து, மார்க்ஸியம்-காரல் மார்க்ஸ் என்னும் பெரியாரின் கொள்கைகள், வித்து-விதை, கெழுமியுள்ள-பொருந்தியுள்ள, தூறு-புதர், மலியலாயின – நிறைந்தன. அழுக்காறு – பொறாமை, முன்னத் தக்கது – நினைக்கத் தக்கது கோலிய – அமைத்த, பெற்றியது-தன்மையது.

## வினாக்கள்

1. நூலுக்குச் சிறப்பளிப்பது ஏன்?

2. உலக நூலாம் திருக்குறள் திருவள்ளுவர்பால் மலர்ந்தது எங்ஙனம்?

3. திருக்குறளின் உயிர்ப்பாய் ஒளிர்வது எது?

4. வாழ்க்கைக் கலையை விளக்குக.

5. அறத்தின் இயல் யாது?

## 2. பண்டைத் தமிழர் வாணிகம்

டாக்டர் அ. சிதம்பரநாதன், எம். ஏ. பி. எச்டி; எம். எல். சி.

[இக்கட்டுரை ஆசிரியர் ஆங்கிலமும் அருந்தமிழும் கற்ற அறிஞர் பெருமகனர். இவர் அண்ணமலைப் பல்கலைக் கழகத்தில் தமிழ்த்துறை தலைவராய்ப் பல ஆண்டுகள் பணியாற்றியவர்; நாவன்மையும் பாவன்மையும் உடையவர்; பல அழகிய ஆய்வு நூல்களை வெளியிட்டவர்; செந்தமிழ்க் காவலர் என்று புலவர்களால் பட்டமளித்துப் போற்றப் பட்டவர்; மேனட்டுக் கல்வி முறையை நேரிடையாகக் கண்டுவந்தவர்; இப்போது சென்னைச் சட்டமன்ற உறுப்பினராய் பணியாற்றி வருபவர்.]

பழந்தமிழர் எகிப்து. பாபிலோனியா, கால்டியா முதலான புராதன நாகரிகத் தேயங்களோடு பல்லாயிரம் ஆண்டுகட்கு முன்னர் வாணிகம் நடத்தி வந்தார்கள் என்பதற்குப் பல சான்றுகள் தென்பட்டுள்ளன. இன்றைக்குச் சற்றேறத்தாழ மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன்னல் தமிழ்ச் சொல்லாகிய 'தோகை' என்பதைத் 'தூகியம்' எனத் திரித்து ஹீபுரு மொழி நூலில் வழங்கினர். ஆதலால், தமிழ் நாட்டிற்கும் மேலை ஆசியாக் கண்டத்திற்கும் வாணிகத் தொடர்பு உண்டு என்பது உறுதி செய்யப்படுகிறது ஐரோப்பாக் கண்டத்திலும் தமிழர் வாணிகம் அந்நாளில் பரவியதுண்டு. திப்பிலி, அரிசி, இஞ்சி வேர் முதலான தமிழ்ச் சொற்கள் உருவு திரித்து கிரேக்க மொழியில் காணப்படுகின்ற காரணத்தால், கிரேக்கருக்கும் பழந்தமிழருக்கும் வாணிகப் போக்குவரத்து உண்டு என்பது வெளியாகின்றது. தமிழ்நாட்டில் பருத்திப் பெண்டிர் செய்த பாலாடையன்ன மேலாடைகள் உரோமாபுரி வரையில் அனுப்பப்பட்டன என்று அறிகிறோம். இத்தாலி தேசத்துப் பழம்பெண்டிர் கி. பி. முதல் நூற்றாண்டில் நம்நாட்டிலிருந்து சென்ற மிக மெல்லிய நுண்ணுடையை உடுத்திருந்ததற்காக அவ்வூர்மக்களிற் சிலர், நமது நாட்டின் பணத்தை இம் மகளிர் வெட்கமின்றி அணியும் இம்மெல்லிய ஆடையால் பிற நாட்டிற்குக் கொள்ளை கொள்ளையாக அனுப்புகிறார்களே!' என வருந்தி உரைத்தார்கள் என்ற செய்தி அந்நாட்டு வரலாற்றில் குறிக்கப்பட்டுள்ளது.

பழந்தமிழர் வாணிகம் பற்றிய செய்திகள் பிறநாடுகளிலிருந்து அறியப்படுவன இவ்வாறு இருப்பன ஆக, நம் மொழியின்கண் உள்ள பழைய நூல்கள் கூறுவன யாவை என்று சுருக்கமாகக் காண்போம்.

தமிழர் நேர்மை என்பதையே வாணிகத்திற் சிறந்த குறிக்கோளாகக் கொண்டனர். 'குறையச் சொல்லி நிறைய அள' என்பது தமிழர் குருதியில் ஊறியதொரு பழமொழி கொள்வதற்கு என்று ஒரு படியும் கொடுப்பதற்கு என்று வேறு ஒருபடியும் வைத்துக் கொள்ளக்கூடாது என்பது அவர் கண்டது. அதைக் கருதியே திருவள்ளுவரும், "வாணிகம் செய்வார்க்கு வாணிகம் பேணிப் பிறவுந் தமபோற் செயின்", என்றார். காவிரி புகும் பட்டினத்தில் 1800 ஆண்டுகளுக்கு முன் வாழ்ந்த தமிழ் வணிகர்—தாம் கொள் முதல் செய்யும் பொருளைத் தாம் கொடுக்கும் பொருளின் மேலாக மாற்றிக் கொள்ளுதலில்லை என்றும், தாம் விற்கும் பொருளையும் வாங்குகின்ற பொருளிற்குக் குறைவாகக் கொடுத்தல் இல்லை என்றும் அறிகின்றோம். பட்டினப்பாலை என்னும் பழம்பாட்டினுள் இதனையே,

"தமவும் பிறவும் ஒப்ப நாடிக்
கொள்வதூஉம் மிகைகொளாது
கொடுப்பதூஉம் குறைகொடாது"

என்றவாறு உருத்திரங்கண்ணனர் என்ற புலவர் குறிப்பிட்டார். எனவே, 'நேர்மை' என்னும் அடிப்படையின்மீது பழந்தமிழர் வாணிகம் நடந்தது என்பது வெளிப்படை.

இனி, அக்காலத்தில் சோழர் தலைநகராகிய காவிரிபுகும் பட்டினத்தில் வாணிகம் எத்துணைச் செழித்திருந்தது என்பது பின் வரும் செய்தியால் அறியத்தகும் காவிரி புகும் பட்டினத்தின் கண்ணே சுங்கம் வாங்குவோர் பலர் அரசரால் நியமிக்கப்பட்டிருந்தனர். கப்பலில் ஏற்றும் பொருள்களையும் கப்பலிலிருந்து இறக்கும் பொருள்களையும் மதித்து அவர்கள் சுங்கம் வாங்கினர்கள், சுங்கம் வசூலிக்கப்பட்ட பொருள்களை அதற்கு அறிகுறியாகப் புலிப்பொறியினால் பொறித்தனுப்பினர்கள். புலியுள்ள முத்திரை சோழநாட்டரசரால் பார்க்கப் பட்டது என்பதைக் காட்டுதற்கு அறிகுறி, அப்பிடிப் புலிப்

பொறியால் பொறிக்கப்படுவதற்குப் பல பண்டங்கள் வரம்பில்லாமல் வந்து காவிரி புகும் பட்டினத்துறையில் நெருங்கிக் கிடந்தன என்பது சொல்லப்பட்டுள்ளது. கீழ்க்காணும் பட்டினப் பாலை அடிகள் அச்செய்தியை உணர்த்துவன;

"நீரினின்று நிலத்துஏற்றவும்
நிலத்தினின்று நீர்ப்பரப்பவும்
அளந்தறியாப் பலபண்டம்
வரம்பறியாமை வந்தீண்டி"

அப்பட்டிணத்திலே வாணிகத்திற்காக வந்த பொருள்கள் பலப்பல. குதிரைகளும் மிளகுப் பொதிகளும் கடல் வழியாக வந்து இறங்கின. மேரு மலையிலிருந்து மாணிக்கமும் சாம்பூனதம் என்னும் பொன்னும் வந்தன. மேற்கு மலைப்பகுதிகளிலிருந்து சந்தனக் கட்டைகளும் அகிற் கட்டைகளும் வந்து நிரம்பின. கொற்கையிலிருந்து முத்தும், கீழ்த்திசைக் கடலிலிருந்து பவளமும் வந்தன, கங்கை, காவிரி முதலிய ஆறுகளின் பக்கத்தே விளைந்த பொருளெல்லாம் கடைகளில் விற்கப்பட்டன. யாழ்ப்பாணத்திலிருந்து சில நல்ல உணவுப் பொருள்கள் வந்திருந்தன. பர்மா, மலேயா' சீனம் முதலான நாடுகளிலிருந்து கருப்பூரம், பனிநீர், குங்குமம் முதலான பல பொருள்கள் வந்தன. இவையெல்லாம் பலப்பலவாக வந்தமையால், 'நிலத்தின் முதுகுகூட நெளிந்து போகுமோ!' என்று ஐயுறவேண்டி இருந்தது எனப் புலவர் உருத்திரங்கண்ணனார் குறிப்பிட்டுள்ளார். இக்காலத்தில் அப்பட்டினம் இப்பெருமையெல்லாம் அற்றதாய்ச் சிற்றூராய்க் காணப்படுகிறது.

## அருஞ்சொற்பொருள்

புராதனம் – பழமை, மிகை – மிகுதி, நாடி – ஆராய்ந்து. தமவும் – தம்முடைய பொருள்களும்.

## வினாக்கள்

1. பழந்தமிழர் வாணிகம் பார்முழுதும் சீர்பெற்றிருந்தது என்பதற்குச் சான்று தருக.

2. பாலாவியன்ன மேலாடைகளை நம்மவர் செய்தனர் என்பதற்குரிய சான்று யாது?

3. வாணிக முறை குறித்து வள்ளுவர் கூறியவை யாவை?

4. தமிழ் வணிகரின் சிறப்பு யாது? அதை ஆசிரியர் எவ்வாறு குறிப்பிட்டுள்ளார்?

5. பூம்புகார்ப் பட்டினத்தில் வாணிகம் வளம் பெற்றிருந்தது என்பதை ஆசிரியர் சிதம்பரநாதனார் யாங்ஙனம் விளக்கியுள்ளார்?

6. பட்டினப்பாலை கூறும் வணிகரது இயல்பு யாது?

## பயிற்சி

1. குறிப்பு எழுதுக:—
தூகியம், புலிப்பொறி, கால்டியா.

2. வாக்கியத்தில் அமைக்க:—
வாணிகத் தொடர்பு நுண்ணுடை, சுருக்கமாக.

3. தமிழர் வாணிகங் குறித்து நீங்களறியும் பிற செய்திகளை எழுதுக

## 3. நகைச்சுவை

டாக்டர். ரா. பி. சேதுப்பிள்ளை அவர்கள், பி ஏ., பி. எல்.,

[இவர் சென்னைப் பல்கலைக் கழகத் தமிழ்த் துறைத் தலைவர்; ஆராய்ச்சியாளர்; பல நூல்களின் ஆசிரியர்; நாவலர்; சொல்லின் செல்வர்' என்னும் பட்டம் பெற்றவர்.]

இவ்வுலகம் ஒரு நாடகசாலை. இந்நாடகசாலையில் அரசராய் வருவார் சிலர்; வீரராய் விளங்குவார் சிலர், காதலராய்த் தோன்றுவார் சிலர்; விகடராய் வருவார் சிலர்; கூத்துக்கேற்ற கோமாளியைக் கண்டால் எல்லோர்க்கும் ஆனந்தம்! அவர் பேச்சைக் கேட்டால் பிள்ளைகள் விழுந்து விழுந்து சிரிப்பார்கள்; பெரியோர்கள் அக்கம் பக்கம் பார்த்து அடக்கமாகச் சிரிப்பார்கள். மாதர்கள் மறைவாகச் சிரிப்பார்கள். இப்படி எல்லோரும் ஏன் சிரிக்கிறார்கள்? விகடர் சொல்லும் சொல்லில் அமைந்த சுவை எல்லோரையும் சிரிக்கச் செய்கின்றது. இச்சுவையைத்தான் நகைச்சுவை என்பர். நகைச்சுவை ஏச்சிலும் தோன்றும், பேச்சிலும் தோன்றும்; கற்றவர் கவியிலும் பிறக்கும், மற்றவர் உரையிலும் பிறக்கும். முதலில் ஏச்சிலே பிறக்கும் சுவையைச் சிறிது பார்ப்போம்.

முக்கூடல் என்ற ஊரிலே ஒரு பள்ளன்; அவனுக்கு மனைவியர் இருவர். மூத்தவள் முக்கூடற்பள்ளி; இளையாள் மருதூர்ப்பள்ளி. மூத்தாள் பெருமாளைச் சேவிப்பவள்; இளையவள் சிவனடியாள். இவ்விருவரிடையே ஏச்சும் பேச்சும் இல்லாத நாள் இல்லை. ஏசுவதற்கு வேறொன்றும் தோன்றாவிட்டால், இவர்கள் கும்பிடும் சாமிகளைக் கூசாமல் ஏசுவார்கள். சிவனும், பெருமாளும் இப் பள்ளிகள் வாயில் அகப்பட்டுப் படும் பாட்டைப் பார்ப்போம்; "பிச்சைக்காரச் சாமியைக் கும்பிடும் மருதூராளுக்குப் பேச்சென்ன பேச்சு!" என்று தொடங்கினாள் மூத்தாள்; "பிச்சை எடுத்தான் உங்கள் சாமி; பின்னும் பசி தீர வழியின்றி நஞ்சைத் தின்றான். சாமியைப் பார் சாமியை!"

'நாட்டுக்குள் இரந்தும்பசிக் காற்ற மாட்டாமல் — வாரி
நஞ்சையெல்லாம் உண்டான் உங்கள் நாதன் அல்லோடி!

என்று பழித்தாள் மூத்தாள். இளையாள் அவளுக்கு இளைத்தவளா? பெருமாள் குட்டை உடைத்து விட்டாள்.

"மாட்டுப்பிற கேதிரிந்தும் சோற்றுக் கில்லாமல் வெறும்
மண்ணையுண்டான் உங்கள் முகில் வண்ணன் அல்லோடி!"

உங்கள் சாமி சேதி தெரியாதோ? மாட்டை ஓட்டி ஓட்டி ஓட்டி மேய்த்தான்; பின்னும் சோற்றுக்கில்லை; மண்ணை வாரித் தின்றான்", என்றாள் இளைய பள்ளி.

இப்படி உண்டிக்குத் திண்டாடிய சாமிகளுக்கு ஒரு வண்டி யாவது உண்டோ? அதேது?

"ஏறஒரு வாகனமுந் தானும் இல்லாமல்—மாட்டில்
ஏறித்தி ரிந்தான் உங்கள் ஈசன் அல்லோடி!"

என்று இடித்துரைத்தாள் மூத்த பள்ளி. "அப்படியா செய்தி! அந்த மாடு கூடக் கிடைக்காமல் பருந்தின் மேலேறிப் பறக்கிறானே உங்கள் பெருமாள்!" என்றாள் இளைய பள்ளி.

"வீறுசொன்ன தென்னமாடு தானும் இல்லாமல்—பட்சி
மீதில்ஏறிக் கொண்டான் உங்கள் கீதனல்லோடி!"

என்று பழித்தாள்.

இவ்விரு பள்ளியருக்கும் வாய்த்த கணவன் அழகக் குடும்பன் அவன் பெருமாள் அடியான் அதைப் பிடித்துக் கொண்டாள் மூத்த பள்ளி.

"பெருமாள டியானுக்குப் பெண்டி ருந்துமே—எங்கள்
பெருமானை நீபழித்துப்பேச லாமோடி!"

என்றாள். ஒருவாறு அன்று சண்டை ஓய்ந்தது.

இனி, ஒரு குறவனுக்கும் ஒரு குறத்திக்கும் இடையே நடந்த பேச்சைப் பார்ப்போம்; குற்றால மலையில் வேட்டையாடப் போனான் சிங்கன் என்ற ஒரு குறவன். அவனுக்கு மனைவியாய் வாய்த்த சிங்கி என்ற குறத்தி குறிசொல்லப் புறப்பட்டுச் சென்றாள் வேட்டையாடி வளமான பறவைகளைப் பிடித்துக் கொண்டு வீட்டுக்கு வந்தான் சிங்கன்; சிங்கியைக் காணவில்லை; மயங்கினான்; தயங்கினான்.

"மேடை மயிலுக்குக் கண்ணியை வைத்துநான்
மாடப் புருவுக்குப் போனேன்
மாடப்புருவும் மயிலும் பிடித்தேன்
வேடிக்கைச் சிங்கியைக் காணேன்!"

என்று இங்குமங்கும் பார்த்தான்; மனந்துடித்தான்; பல்லைக் கடித்தான்; 'வரட்டும் சொல்லுகிறேன்!' என்று வழி பார்த்திருந்தான். குறி சொல்லப் போன சிங்கி பட்டு உடுத்துப் பணி பூண்டு சிங்காரமாய் வந்து சேர்ந்தாள். அவள் கோலத்தைக் கண்டான் சிங்கன். கோபமெல்லாம் எங்கேயோ பறந்து போய் விட்டது.

"இத்தனை நாளாக என்னுடன் சொல்லாமல்
எங்கே நடந்தாய்நீ சிங்கி?"

என்று மெத்தக் கனிவாக அவன் வினவினன்.

"கொத்தார் குழலார்க்கு வித்தார மாகக்
குறிசொல்லப் போனேனடா சிங்கா!"

என்றாள் சிங்கி.

அவள் மூக்கில் அணிந்திருந்த மூக்குத்தி அவனுக்கு மிக்க புதுமையாய் இருந்தது. அது புன்னைப் பூவின் அரும்பு போலத் தோன்றிற்று.

"வன்னக் குமிழிலே புன்னை யரும்பேது சிங்கி?"

என்று கேட்டான் சிங்கன். முத்துப் பதித்த மூக்குத்தியைக் கண்டறியாத சிங்கனை முகமலர்ந்து நோக்கி,

மூந்நீர்ச் சலாபத்து முத்துமூக் குத்திகாண் சிங்கா!"

என்றாள் சிங்கி. மெல்லிய பட்டைச் சுற்றிச் சுற்றிக் கட்டியிருந்தாள் அக்குறவஞ்சி. அதைக் கண்ட சிங்கன்,

"இல்லாத சுற்றெல்லாம் எங்கே படித்தாய்நீ சிங்கி!"
என்று வியந்தான், அது கேட்ட காதலி.

"நாட்டில், நல்லாரைக் காண்பவர்க்கு எல்லாம்
வருமடா சிங்கா!"

என்று நல்ல பாடம் கற்பித்தாள்.

இப்படியே குழந்தைகள் போடும் விளையாட்டுச் சண்டைகளும் விநோதமாக இருக்கும். பெரிய இடத்துப் பிள்ளைகளாகிய விநாயகனும், முருகனும் ஒருநாள் சண்டை போட்டுக் கொண்டார்கள். கண்ணைக் கசக்கி அழுது சிணுங்கிக் கொண்டு விநாயகன் அப்பாவிடம் சென்றான்; "பார், அப்பா! தம்பி என காதைப் பிடித்துக் கிள்ளி விட்டான்!" என்று தன் பெரிய காதைத் தொட்டுக் காட்டினான். "முருகா, நீ ஏன் அப்படி அண்ணன் காதைக் கிள்ளினாய்?" என்று கேட்டார் தந்தையார். "அண்ணன் மட்டும் என் கண்ணை ஆறு, ஏழு என்று எண்ணலாமோ?" என்று பன்னிரண்டு கண்ணுடைய பிள்ளை எதிர்க் கேள்வி கேட்டான். "விநாயகா, நீ ஏனடா அப்படி விகடம் செய்தாய்?" என்று வினவினார் தந்தையார். "அவன் என் துப்பிக்கையைப் பிடித்து முழம் போட்டு அளந்தானப்பா!" என்றான் மூத்த பிள்ளை. குறும்பு செய்த முருகன் சிரித்துக்கொண்டு நின்றான். இங்கும் அங்கும் பார்த்தார் பரமசிவனார். ஒரு பிள்ளையையும் குறை சொல்லத் தோன்றவில்லை; பெற்றவளை நோக்கி, "உன் அருமைப் பிள்ளைகளைப் பார்!" என்று ஏளனம் பேசினார். இதைப் பார்த்துக் கொண்டிருந்த சிவனடியார் ஒருவர் இப்பிள்ளைச் சண்டையைப் பெரிய பாட்டாகப் பாடிவிட்டார்.

'அரனவன் இடத்திலே ஐங்கரன் வந்துதான்
'ஐய! என் செவியை மிகவும்
அறுமுகன் கிள்ளினான்!' என்றே சிணுங்கிடவும்
அத்தன்வே லவனைநோக்கி

விரைவுடன் வினவவே, 'அண்ணன்என் சென்னியில்
விளங்குகண் எண்ணினன்!'என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்து,'நீ அப்படி
விகடமேன் செய்தாய்?'என,

'மருவும்என் கைந்நீள முழமளந் தான்',என்ன,
மயிலவன் நகைத்துநிற்க,
மலையரைன் உதவவரும் உவமையளை நோக்கி,'நின்
மைந்தரைப் பாராய்!'எனக்

கருதரிய கடலாடை உலகுபல அண்டம்
கருப்பமாய்ப் பெற்றகன்னி
கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள்
களிப்புடன் உமைக்காக்கவே!'

என்பது அவர் பாடிய பாட்டு.

இனி, காதல் மணம் புரிந்துகொண்ட ஒரு கற்புடையாள் பேச்சைப் பார்ப்போம். மதுரையில் திருமலை நாயக்கர் அழகான மாளிகை கட்டி, அதன் சுவர்களில் பேர் போன வித்தகரைக் கொண்டு சித்திரம் எழுதுவித்தார். அதைக் காண ஆசைப்பட்ட கணவன் ஒருவன், ''சித்திர மாளிகைக்கு வருகிறாயா?'' என்று தன் காதலியை அழைத்தான். ''அங்கே என்ன விசித்திரமான சித்திரம் எழுதுகிறான்?'' என்று வினவினாள் மனைவி. ''அழகு வாய்ந்த ஆண் பெண் இருவரின் வடிவங்களை எழுதுகிறானும். கண்ணையும் மனத்தையும் கவர்கின்றனவாம் அவ்வுருவங்கள்,'' என்றான் கணவன். அப்படியானால், நான் வரமாட்டேன். நீங்களும் போகலாகாது,'' என்று மங்கை அழுத்தமாகப் பேசினாள்: ''ஏன் அப்படிச் சொல்கிறாய்?'' என்று வியப்புடன் வினவினான் காதலன். ''அங்கு வரைந்துள்ள சித்திரம் ஆண் உருவமாய் இருந்தால் நான் பார்க்கமாட்டேன்; பெண் உருவமாய் இருந்தால் நீங்கள் பார்க்க நான் சகிக்க மாட்டேன்,'' என்ற பதில் வந்தது. இக்கருத்தமைத்து வேதநாயகம் பாடியுள்ளார்.

''ஓவியர் நீள் சுவர்எழுதும் ஓவியத்தைக் கண்ணுறுவான்
தேவியையான் அழைத்திட, ஆண் சித்திரமேல் நான்பாரேன்;
பாவையர்தம் உருவெனில்நீர் பார்க்கமனம் பொறேன்' என்றாள்;
காவிவிழி மங்கைஇவள் கற்புவெற்பின் வற்புளதால்.'

என்றார் கவிஞர்.

இனிப் புலவர்கள் பேசும் முறையில் அமைந்த நகைச் சுவையைப் பார்ப்போம். இரண்டு புலவர்கள் ஒருவரை விட்டு ஒருவர் பிரியாமல் இருந்தார்கள். ஒருவர் முடவர் மற்றவர் குருடர். குருடர் தோளில் முடவர் ஏறிக்கொண்டு ஊர் ஊராகச் சென்று இருவரும் கவி பாடிப் பிழைத்தனர். ஒருநாள் இவர்கள் சொக்கலிங்கர் கோவில் பொற்றாமரைக் குளத்தில் இறங்கிப் படியிலே ஆடையை துவைத்துக் கொண்டிருந்தார்கள். முடவர் கரையிலிருந்தார். ஓர் ஆடையைத் துவைத்து ஒரு பக்கமாக ஒதுக்கி வைத்து, மறு ஆடையைத் தப்பிக் கொண்டிருந்தார் குருடர். ஒதுக்கி வைத்த ஆடை தண்ணீரில் நழுவி விழுந்து, மெல்ல மிதந்து போய்க்கொண்டிருந்தது. கரையிலிருந்த முடவர் பார்த்தார்; சிரித்தார்; ஆடை தப்பிப் போவது சரிதான் என்று

அவருக்குத் தோன்றியது "இதுவரை நாம் அதைத் தப்பினோம்; இப்போது அது நம்மைத் தப்புகிறது.

"அப்பிலே தோய்த்திட்டு அடுத்தடுத்து நாம்அதனைத்
தப்பினல் நம்மைஅது தப்பாதோ?

என்றார் முடவர். அதுகேட்ட குருடர் ஆடை தண்ணீரில் விழுந்து விட்டதென்பதை அறிந்தார். ஆனல், எப்படிக் கண்டு எடுப்பார்? "போனல் போகட்டும்; பழைய ஆடை போனல் புதிய ஆடை தருவார் பரமசிவம். இக்கலிங்கம் போனல் சொக்கலிங்கம் தருவார்!" என்று நயமிப் பதில் உரைத்தார்;

—"இப்புவியில்

இக்கலிங்கம் போனலென்? ஏகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை!"

என்றார்.

இனி, இராவணன் தங்கையாகிய சூர்ப்பநகை பஞ்சவடிச் சாலையில் இராம இலட்சுமணர்களைக் கண்டு காதல் கொண்டாள்; அவர்களை அடைவதற்குச் சீதை இடையூறாய் இருந்தாள் என்று எண்ணிச் சமயம் பார்த்து அவளை அப்புறப்படுத்த முயன்றாள். அப்போது மறைவில் இருந்த இலக்குவன் வெளிப்பட்டு, அரக்கியின் மூக்கை அறுத்தான். மானம் ஒழிந்தாலும் சூர்ப்பநகையின் மையல் ஒழிந்தபாடில்லை. அறுந்த புண் ஆறுவதற்கு முன்னே மலர்ந்த முகத்தோடு வீரரிடம் வந்தாள்; அவர்கள் முன்னே நாணிக் கோணி நின்று கொண்டு பேசத் தொடங்கினாள்: வீரரே, என் மூக்கை ஒட்ட அறுத்தீர்கள்; அதன் கருத்து எனக்கு நன்றாய் விளங்கி விட்டது! 'இவள் மூக்கை அறுத்து விட்டால் வெளியே எங்கும் போகமாட்டாள். வேறுள்ள ஆடவர் எவரும் இவளை விரும்பிப் பார்க்க மாட்டார்; நம்மருகே எப்போதும் இருப்பாள்', என்று ஆசையால் அறுத்தீர்கள். உங்கள் கருத்தை யறிந்தேன்; முன்னிலும் அதிகமாக உங்களிடம் காதல் கொண்டேன்", என்றாள்.

'பொன்னுருவப் பொருகழலீர்! புழைகாண
மூக்கரிவான் பொருள்வே றுண்டோ?
இன்னுருவம் இதுகொண்(டு) இங்(கு) இருந்தொழியும்
நமமருங்கே; ஏகாள் அப்பால்;

பின்னிவனை அயலொருவர் பாரார்'என்
றேஅரிந்தீர்; பிழைசெய் தீரோ!
அன்னதனை அறிந்தன்றோ அன்பிரட்டி
பூண்டது? நான் அறிகி லேனோ?''

என்ற கம்பர் பாட்டில் மானத்தையும் கடந்த மையலைக் கண்டு நாம் நகைக்கிறோம்.

## சொற்பொருள்

சேவிப்பவள் - வழிபடுபவள், முகில் - மேகம், வீறு - பெருமை, பெண்டிருந்தும் - மனைவியாய் இருந்தும், பணி - ஆபரணம், வண்ணம் - அழகு, முந்நீர் - கடல், சிவனடியார் ஒருவர் - இங்குச் சிவப்பிரகாசர், விகடம் - வேடிக்கை (குறும்பு), அத்தன் - சிவ பெருமான், மருவும் - பொருந்திய, மயிலவன் - முருகன், காவி - நீலோற்பலம், கலிங்கம் - ஆடை, மையல் - ஆசை.

## பயிற்சி

1. நகைச்சுவை எவ்வெவ்வாறு தோன்றுமென ஆசிரியர் கூறியுள்ளார்?
2. முக்கூடற் பள்ளிக்கும் மருதூர்ப் பள்ளிக்கும் நிகழ்ந்த உரை யாடல் விளக்கி வரைக.
3. குறவன் கேட்ட வினாக்களும் அவற்றுக்குக் குறத்தி கூறிய விடைகளும் யாவை?
4. விநாயகனுக்கும் முருகனுக்கும் இடையே நிகழ்ந்த நகைச் சுவை நிகழ்ச்சி யாது?
5. காதல் மணம் புரிந்து கொண்ட ஒரு கற்புடையாள் பேச்சிலே அமைந்த நகைச்சுவையை விளக்குக :—
6. "இக்கலிங்கம் போனால் என்? ஏகலிங்க மாமதுரைச் சொக்கலிங்கம் உண்டே துணை!"
— இடஞ்சுட்டி விளக்குக.
7. கம்பர் பாடலில் காணப்படும் நகைச்சுவையினை விளக்குக.
8. சொற்றொடர்களில் சேர்த்து எழுதுக :—
விழுத்து விழுந்து, கூசாமல், வழி பார்த்து, சிணுங்கிக் கொண்டு, அப்புறப்படுத்த.
9. பிரித்தெழுதுக :—
பசிக்காற்று, முந்நீர், மலையரையன், முழமளந்தான், இருந் தொழியும், அடுத்தடுத்து.
10. உமக்குத் தெரிந்த நகைச்சுவையமைந்த பாடல் ஒன்றைக் கூறி, அதில் உள்ள நகையையும் விளக்குக.
11. இப்பாடப் பகுதியில் இடம் பெற்ற இலக்கியங்களின் பெயர்களை எடுத்துக் கூறுக.
12. 'நகைச்சுவை' என்னும் தலைப்பில் கட்டுரையொன்று வரைக.

# 4. நல்ல நூல்

டாக்டர் மு. வரதராசனர், எம். ஏ. எம். ஓ. எல்., பிஎச். டி.

[தமிழகத்துக்கு மிக நன்கு அறிமுகமானவர் மு. வ. சென்னைப் பச்சையப்பர் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் வீற்றிருக்கிறார். பலப்பல நூல்கள் எழுதி, தமிழகத்தின் போற்றுதலைப் பெற்றுச் சீரிய தமிழ்ப்பணி புரிந்து வருகின்றார்' இவர் இன்றைய திரு. வி. க.]

புகைவண்டி நிலையத்தில் இருவர் பேசிப் பழகுகின்றனர். சிறிது நேரத்தில் வண்டி வருகிறது. இருவரும் அதில் ஏறி ஓர் இடத்தில் உட்கார்ந்து கொண்டு தொடர்ந்து பேசுகின்றனர். வண்டி நகர்கின்றது. ஐம்பது அறுபது மைல் கடந்து ஒரு நிலையத்தில் நிற்கும்போது அவர்களுள் ஒருவர் தம் பெட்டியை எடுத்துக்கொண்டு இறங்குகின்றார், சிறிதும் வருத்தம்இல்லாமல், 'நான் போய் வரட்டுமா?' என்று அந்த நண்பரை விடை கேட்கின்றார். 'சரி போய்விட்டு வாருங்கள்; இங்கேதானா உங்கள் ஊர்?' என்று வண்டியில் இருக்கும் நண்பரும் கவலையில்லாமல் விடை கொடுக்கின்றார், வண்டி புறப்படுகின்றது. இருவரும் பிரிந்து வேறு இடங்களை நாடிச் செல்கின்றனர், 'பிரிந்தோமே!' என்ற துயரம் ஒருவர் உள்ளத்திலும் இல்லை. சில நாழிகைக்குள் ஒருவர் ஒருவரைப் பற்றி நினைப்பதில்லை; அடியோடு மறந்து போகின்றனர். இதுவும் நட்புத்தான்.

நட்பில் இன்னொரு வகையுண்டு. நாள்தோறும் குறித்த நேரத்தில், பெரும்பாலும் மாலை வேளையில், நண்பர் கூடிப் பேசுவர். தம்தம் குறைகளையும் இடர்களையும் குறித்துப் பேசாமல், பெரும்பாலும் மற்றவர்களின் குற்றங்களை எடுத்துப் பேசி, எள்ளி நகையாடிப் பொழுது போக்குவார்கள். இத்தகைய பேச்சால் ஒருவரையொருவர் திருத்தவோ, உயர்த்தவோ முடியாது. ஆனாலும், அந்த வேளைக்குச் சிரித்துச் சிரித்துக் காலத்தைக் கழிக்க முயல்வார்கள். சில நாட்களில் இருவருக்குமே சோர்வு ஏற்பட்டு விடுமானால், இருவரும் சேர்ந்து, வேறொருவன் துணையை

நாடுவார்கள்; அவ்வாறு துணையாக நாடுகின்ற பொருள் பெரும்பாலும் தூண்டுதல் செய்யும் பொருளாகவோ, மயக்கம் தரும் பொருளாகவோ இருக்கும். (கள், கஞ்சா, தீயகூத்து முதலியவை இப்படி ஏற்பட்டவைகளே.) இவர்களிடத்தில் முகத்தளவில் சிரிக்கும் சிரிப்பும் வாழ்க்கையை மறக்கும் முயற்சியும் காணப்படுமே தவிரச் சீர்படுத்தும் முயற்சி காணப்படாது. இவர்கள் ஒருவரோடொருவர் பழகும் பழக்கம் பெரும்பாலும் நீடிப்பதில்லை; நீடித்தாலும் உள்ளங் கலப்பதில்லை; உள்ளன்பு வளர்வதில்லை.

அறிவுடையவர்களாய் நெறியோடு வாழ்கின்றவர்கள் தேடிக் கொள்ளும் நட்பு வேறு வகையானது. அவர்கள் கூடிப் பேசும் போதும், தனித்து எண்ணும் போதும் ஒருவர் மற்றொருவரின் நன்மையையே நாடுவார்கள்; ஒருவருக்கு ஒருவர் உதவியாக வாழ்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருப்பார்கள். சிறிது நேரம் வேடிக்கையாய்ப் பொழுது போக்குவது அவர்களுக்குக் குறிக்கோளாக இருப்பதில்லை. தாளைக் கடமை, எதிர்காலக் கடமை இன்றுள்ள இடர்ப்பாட்டை வெல்லும் முயற்சி — இவற்றைப் பேசித் துன்பத்தைப் பங்கிட்டுக் கொள்வதிலேயே அவர்கள் முந்தி நிற்பார்கள்; உண்மையான இன்பம் வாய்த்தபோது, ஆரவாரம் இல்லாமல் — பகட்டு இல்லாமல் — மகிழ்ச்சி கொண்டு கலந்து கொள்வார்கள். அந்த மகிழ்ச்சி, உண்மை மகிழ்ச்சி ஆகையால், உள்ளத்தில் ஊறி நிற்கும்; சிறிதளவே புறத்தில் புலனாகும். ஒருவர் தவறும் நிலைமை நேர்ந்தால், மற்றவர் தயங்காமல் தடுத்துத் திருத்த முனைவதும், இத்தகைய நண்பர் இயல்பாகும். அதனால், நண்பருடைய மகிழ்ச்சி குறையுமே என்றும் மனம் புண்படுமே என்றும் கவலைப்படாமல் கடிந்துரைப்பது வழக்கமாகும். இத்தகைய நண்பர்கள் உதவி செய்யும் போது விரைவது போலவே. திருத்தும் போதும் விரைவார்கள்.

முகநக நட்பது நட்பன்று; நெஞ்சத்து
அகநக நட்பது நட்பு.

நகுதற் பொருட்டன்று நட்டல், மிகுதிக்கண்
மேற்சென் றிடித்தற் பொருட்டு.

என்று திருவள்ளுவர் இச்சிறந்த நட்பைப் பற்றித் தெளிவாக விளக்கியுள்ளார்.

நட்பைப் பற்றி மேலுங் கூறும்போது, 'கற்கக் கற்க நயம் பயக்கும் நூல் போல, பழகப் பழக இனிய நன்மைமிக விளைப்பதே சிறந்த நட்பு', என்று கூறியுள்ளார்.

நவில்தோறும் நூல்நயம் போலும் பயில்தோறும்
பண்புடை யாளர் தொடர்பு.

இவ்வாறு நூலையும் நட்பையும் தொடர்புபடுத்தி விளக்கின மையால், சிறந்த நட்பைப் போல, உயர்ந்த நூல் இன்னது என்பதையும் ஆராய்ந்து அறியலாம்.

சில நூல்களை ஒரு மணி நேரம் அல்லது இரண்டு மணி நேரம் வைத்திருந்து ஒரு பகுதியைப் படித்து முடித்த பிறகு கவலையில்லாமல் மறந்து விடலாம். அவைகளை புகை வண்டியில் பயணம் செய்து நட்புக்கொள்ளப்படுகின்றவர்களைப் போன்றவைகள்.

சில நூல்கள் கற்போரைத் திருத்த முடியாது; எண்ணச் செய்யவும் முடியாது. படிக்கும் நேரத்தில் இன்பம் பயக்கும். தொடர்ந்து படித்தால் மிகுதியான பயன் காண முடியாது. அதற்கு மாருகக் கடமையை மறக்கச் செய்து மனச்சான்றையும் அடங்கச் செய்து பொழுதைப் போக்குமாறு தூண்டும்.

இன்னும் சில நூல்கள் முதல் முறையாகப் படிக்கும்போது தொல்லையாகவும் இருக்கும்; தொடர்ந்து படிக்கப் படிக்க, இன்பம் பயக்கும்; வாழ்நாளில் மறக்கமுடியாத துணையாக இருக்கும்; வழிகாட்டியாக நிற்கும்; மனச்சான்றைப் பண்படுத்தும்; வழுக்கி விழும் போதெல்லாம் காப்பாற்ற முன்வரும்; நெறி தவறும் போதெல்லாம் இடித்துரைத்துத் திருத்தும்; வாழ்நாளில் உயிரின் உணர்வு போலக் கலந்து விடும் ஆற்றல் அத்தகைய நூல்களுக்கு உண்டு.

ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியர் நூல்களைப் பற்றி வகைப்படுத்திச் சீர்தூக்கும் சொற்பொழிவு ஒன்றில் அழகான நூல் என்றும், எந்தக் காலத்துக்கும் உரிய நூல் என்றும் இருவகையாகப் பகுத்துரைக்கின்ருர் திருவள்ளுவர்

நூலை அவ்வாறு பாகுபாடு செய்யா விட்டாலும், நட்பைப் பாகு படுத்தி உரைப்பது வாயிலாக இந்தக் கருத்தைப் புலப்படுத்தி யுள்ளார்; முகம் நகப் பழகும் நட்பு என்று நட்பை இருவகை ஆக்கியுள்ளார். அதைக் கொண்டு பொழுது போக்குக்கு உரிய நூல் என்றும், வாழ்க்கைக்கு உரிய நூல் என்றும், நூலையும் பகுத்து உணரலாம். அவ்வாறு உணரும்போது, ரஸ்கின் என்னும் ஆங்கில ஆசிரியரின் கருத்தைக் காண முடிகின்றது. நல்ல நூல் எது என்பதைத் தேர்ந்தெடுக்கவும் முடிகின்றது இந்தச் சிறந்த அடிப்படையைக் கொண்டே, கல்வி என்னும் அதிகாரத்தில், கற்கும் முறையைக் கூறும்போதும் திருவள்ளுவர் கற்கத் தகுந்த நூல்களைக் கசடறக் கற்க வேண்டும் என்று கூறியுள்ளார். எல்லா நூல்களையும் கற்பதால் பயனில்லை என்று விளக்கி, கற்பதற்குரிய நல்ல நூல்களையே தேர்ந்து கற்கவேண்டும் என்று அறிவுறுத்தியுள் ளார். கண்டவரோடு எல்லாம் பழகாமல், பண்புடையாரிடம்மட்டும் நட்புக் கொள்ள வேண்டும் என்ற திருவள்ளுவர், நூல்களிலும் கண்டவற்றை எல்லாம் கற்கலாகாது என்றே அறிவுறுத்து கின்றார்.

பண்புடையாளரின் தொடர்பைவிட, உயர்ந்த நூற் பயிற்சி மிக்க நன்மை தருவதாகும். பண்புடையாளர் உலகில் கிடைத்தற்கு அரியர்; கிடைத்தாலும், இடமும் காலமும் பிரிக்கும் பிரிவுக்கு உட்பட வேண்டி நேர்கின்றது; அதனால், ஒருங்கே வாழ்ந்து பழகும் வாய்ப்பு அரிதாக உள்ளது. நல்ல நூலின் தொடர்பு என்றும் நிலையாக உள்ளது. காலமும் இடமும் நம்மிடமிருந்து அதைப் பிரித்திட முடியாது. மறப்பே பிரிவு என்னுமாறு நல்ல நூல் உள்ளத்தில் ஊறி நிற்பது; பயின்ற பிறகு எளிதில் மறக்க முடியாதது; வேண்டும் போது உள்ளத்தே ஊற்றாய்த் தோன்றி உறுதுணை செய்யவல்லது. பண்புடையாளரை இவ்வாறு நம்மை விட்டுப் பிரியாதவாறு பிணித்து வைக்க முடியாது. வாழ்க்கை அத்தகைய சிறுமை உடையதாக இருப்பதால்தான். 'கல்வியி னூங்கில்லை சிற்றுயிர்க்கு உற்ற துணை' என்றார் குமரகுருபரர்.

விஞ்ஞான வளர்ச்சியின் பயனாக, இடத்தினால் விளையும் பிரிவை இல்லையாக்கி, தொலை நாடுகளிலுள்ள நண்பரோடும்

பழக முயலலாம்; ஆயின், சில ஆண்டுகளுக்கு முன்னரோ, சில நூற்றாண்டுகளுக்கு முன்னரோ வாழ்ந்து, காலத்தால் பிரிக்கப்பட்ட சான்றோருடன் பழகுவதற்கு வழி இல்லை. நட்புலகத்தில் உள்ள இந்தக் குறையை நூறுலகம் தீர்த்து விடுகின்றது. திருவள்ளுவர், இளங்கோ முதலானவர்களுடன் தொடர்பு கொள்ளாதவாறு காலம் நம்மைப் பிரித்து வைத்த போதிலும், அவர்களின் நூல்கள் அந்த அரிய தொடர்பை ஏற்படுத்தித் தருகின்றன. திருக்குறளையும் சிலப்பதிகாரத்தையும் பயின்றவர்கள். வேண்டும் இடத்தில், வேண்டும் காலத்தில் அந்தப் பெருமக்களின் திருவுள்ளங்களோடு தொடர்பு கொள்ள முடிகிறது. ரஸ்கின் என்னும் ஆங்கில அறிஞர் கூறுமாறு, அரசர் அமைச்சர் முதலானவர்களைக் காண்பதற்கு நாம் காத்திருக்கும் நிலைபோல அல்லாமல், நாம் எளிதில் கண்டு மகிழுமாறு நமக்காக அந்தப் புலவர் பெருமக்கள் என்றும் எங்கும் கருணைகொண்டு நூல் வடிவில் காத்திருக்கின்றனர். ஆகவே, நல்ல நூல் என்பது எழுத்துச் சொற்பொருள்களால் ஆன ஏடுகள் அடங்கிய ஒன்று அன்று; நமக்குக் காட்சி அளித்துக் கருணை பொழிய என்றும் எங்கும் நமக்காகக் காத்திருக்கின்ற பெருந்தகையின் திருவுருவம் எனலாம்.

## அருஞ் சொற்பொருள்

புறத்தில் புலனாகும் – வெளியே தெரியும், முனைவதும் – முற்படுவதும்.

## வினாக்கள்

1. பிரயாண நட்பை எங்ஙனம் ஆசிரியர் விளக்குகிறார்?
2. தீய பொருள் காரணமாக ஏற்படும் நட்பு எத்தகையது?
3. அறிவுடையோர் நட்பு எத்தகையது?
4. நட்பை விளக்க ஆசிரியர் கையாண்டுள்ள குறட் செய்யுட்களை எழுதுக.
5. ஆசிரியர் நூற்களை எத்தனை வகையாகப் பிரிக்கின்றார்? அவை யாவை?

6. நல்ல நூல்கள் என்று ஆசிரியர் எவற்றைக் குறிப்பிடு கின்றார்?

7. நட்பின் வகைகளும் இயல்புகளும் தருக.

8. நூல்களின் வகைகளையும் நட்பின் வகைகளையும் ஒப்பிட்டு ஆராய்க.

## பயிற்சி

1. பிரித்தெழுதுக :— முகநக, கவலையில்லாமல், சிற்றுயிர்.

2. எதிர்ச்சொல் குறிப்பிடுக:— தொடர்ந்து, விடை, வருத்தம், பிரிந்து, சோர்வு, முந்தி.

3. இலக்கணம் கூறுக:— நட்பது, நட்பு, பிருதிக்கண்.

4. வாக்கியங்களில் அமைக்க :— அடியோடு, முனைவது, கற்கக் கற்க, மன்சான்று, இடித்துரைத்துத் திருத்தும், வகைப்படுத்தி.

# 5. பாரி மகளிர்

புலவர் ப. அரங்கசாமி

[இவர் லால்குடிக் கழக உயர்நிலைப் பள்ளியில் தலைமைத் தமிழாசிரியராய்ப் பணியாற்றுபவர்; நூல் பல எழுதியுள்ளார்; நல்ல பேச்சாளர். இவர் எழுதிய 'செந்தமிழ் வளர்த்த பைந்தமிழ்ப் பாவையர்' என்னும் நூலில் உள்ள ஒரு கட்டுரை இது.]

## பாரி :

பாரி கடையெழு வள்ளல்களுள் ஒருவன்; 'இல்லை' எனும் சொல்லறியாதவன். அவன் வேள் பாரி எனவும் வழங்கப்படுவான். அவன் பாண்டி நாட்டுப் பறம்பு மலை சூழ்ந்த 'பரம்பு நாட்டை' ஆண்டவன். பறம்புநாடு முந்நூறு ஊர்களையுடையது புதுக்கோட்டைப் பகுதியில் உள்ள பிரான்மலையே பண்டு பறம்பு மலை எனப்பட்டது.

## கொடை மடம் :

கொடை மடமாவது, கொடையளிக்குங்கால் அறியாமை உடையவனாய் இருப்பது. அதாவது, கொடை வாங்க வருவோரின் அறிவு, குணம், செயல்களைப் பற்றி ஒன்றும் அறியாதவனாகி—அறிய விரும்பாதவனாகி — வேண்டியமட்டும் வரையாது ஈயும் ஈகைக் குணமாகும். இதற்கோர் எடுத்துக்காட்டாய் விளங்கியவன் பாரி. அவன், துன்புறுவதாகக் கருதிய முல்லைக் கொடியின் துயர் நீக்கத் தனது தேரைத் தந்தவன்; பெருவீரன்; பேரருளாளன்.

## மாரியும் உண்டு :

அவனது கொடைச் சிறப்பைப் பாராட்ட விழைந்த கபிலர் அவனை இகழ்வது போலப் புகழ்கிறார்; தனது வள்ளல் தன்மையால் உலகைப் புரப்பவன் பாரி ஒருவனதான் என்று புலவர் பலர் நாவாரப் புகழ்கின்றனர். உலகைப் புரப்பவன் இவன் ஒருவன்தானா? உலகைக் காக்க மாரி(மழை)யும் இருக்கிறதே! எனக் கூறுகிறார்.

### பொருமைத் தீ :

கொடைக் குணத்தால் நாடு முழுவதும் பாரி புகழப்படுவது கண்ட மூவேந்தரையும் பொருமைத்தீப் பற்றிற்று. போரிடின் வெற்றி காண இயலாதென அவர் எண்ணினர்; எனவே, சூழ்ச்சியால் பாரியைக் கொன்றனர்.

### பாரி மகளிர் :

வேள் பாரியின் அருமைச் செல்வியர் இருவர். அவ்விருவரும் 'பாரி மகளிர்' எனவே வழங்கப்படுகின்றனர். அவர்தம் இயற் பெயர் இன்னது என்பது தெரிந்திலது; 'தமிழ் நாவலர் சரிதை' ஆசிரியர் மட்டும் அம்மகளிரை, அங்கவை-சங்கவை என்னும் பெயர்களால் குறிப்பிடுகிருர். அந் நங்கையர் புலமை நலம் வாய்க்கப் பெற்றவர். தமிழ் வேந்தர் மூவரும் அவர்களை மணக்க விரும்பிப் பெருது போயினர்.

### பாடல் :

புறநானூற்றில் பாரி மகளிரது பாட்டு ஒன்று காணப் படுகிறது. இப்பாட்டை அவ்விருவரும் ஆளுக்குப் பாதியாகப் பாடினரா, அல்லது ஒருவரே பாடினரா என்பது அறிய இயலவில்லை.

அவர்கள் பாடலில், துயரத்தின் உச்சநிலை காணப்படுகிறது.

### கபிலரும் மகளிரும் :

பாரியின் உயிரனைய நண்பராய் விளங்கிஞர் புலவர் கபிலர். பாரி இறந்த பின் திக்கற்றவராகிவிட்ட மகளிர் இருவரையும் காப்பாற்றும் பொறுப்பைக் கபிலர் ஏற்ருர். அவர்களை மணமுடிக்கு மட்டும் பாதுகாப்பான இடத்தில் வைக்க விழைந்து, அழைத்துக் கொண்டு அவர் பறம்பு நாட்டினின்றும் நீங்கி நடக்கலாஞர்.

### பிரியா விடை பெற்றுப் பேசுதல் :

பறம்பு நாட்டை விட்டுப் பிரியும் கபிலர் பிரிவாற்ருமையால் பேதுற்றுப் பறம்பை நோக்கிப் பேசுகிருர்.

"பறம்பே, முன்பு நீ வளம் நிறைந்து என்னோடு நட்புக் கொண்டிருந்தாய். இப்போது பாரி இறந்தான். யானும் உன்னை விட்டு நீங்குகிறேன். ஏன்? உன்னை மறந்ததனுல் அன்று; இம்மகளிர் மணப்பதற் கேற்ற நல்லவர்களைத் தேடவே செல்கிறேன்" இந்தக் கனிவான உரையால் நாம் அறிந்து கொள்வது யாது?

கபிலரின் நன்றி மறவாத குணம் இதனுல் நன்கு தெரிகிறதல்லவா?

## எங்கும் தோன்றும் :

பாரி மகளிரும் கபிலரும் பறம்பு மலையைக் கடந்து நெடுந் தூரம் வந்துவிட்டனர் அங்கிருந்து பார்த்த போதும் பறம்புமலை தெரிந்தது, 'நாம் இவ்வளவு தொலைவு வந்த பின்னரும் இப்பறம்பு மலை தனது தோற்றத்தை நமக்குக் காட்டிக்கொண்டிருக்கிறதே!' என்று பாரி மகளிர் பரிவோடு கூறினர். அது கேட்ட கபிலர் கூறுகிருர் :

'வளஞ்சான்ற இம்மலை இவ்விடத்தில் நின்றவர்க்கும் தெரியும். சிறிது தூரம் சென்று பார்த்தால், அங்கு நின்றவர்க்கும் தெரியும்; எங்கே நின்ருலும், அங்கெல்லாம் தெரியுமாறு இம்மலை தோன்றும் இக்கூற்றில் எவ்வளவு பரிவு காணப்படுகிறது! பாவம்!

## அருவி நினைவு :

தம் தந்தையோடு வாழ்ந்த காலத்தில் நமது மலையிலுள்ள அருவிகளின் இனிய காட்சியைக் கண்டு மகிழ்ந்த பழைய நிகழ்ச்சிகளை, அம்மகளிர் தமக்குள் கூறி வருந்தினர். அது கேட்ட கபிலர் துயரொடு சொல்கிருர்;

'முன் பாரியிருந்தபோது இக்குன்றின் ஒரு பக்கத்தில் ஒலிக்கும் அருவிகளின் இனிய காட்சி மட்டுமா தோன்றிற்று? மற்ருெரு பக்கத்தில், பாணருக்காக வழங்கப்படும் மதுவும், அருவிபோலக் கற்களை உருட்டிக்கொண்டு ஓடும் காட்சியும் அல்லவா தோன்றின!"

பழைய நினைவுகளை மறக்க இயலாத பரிதாப நிலையைக் காண்கின்ருேமே! என்செய்வது!

### குப்பை மேடும் உப்பு வண்டியும் :

கபிலரும் மகளிரும் வழி நடந்த களைப்பால் ஓரிடத்தில் அமர்ந்திருந்தனர். அருகில் ஒரு குப்பை மேடிருந்தது. உப்பு வண்டிகள் வரிசை வரிசையாகச் சென்றன. இவ்வாறு செல்வதைக் குப்பை மேட்டில் ஏறி நின்று பாரி மகளிர் பார்த்தனர். இதைக் கண்ணுற்ற கபிலர் கையற்றுத் தமக்குள் கூறுகிறார்.

'இக் குப்பை மேட்டில் நின்று உப்பு வண்டிகள் செல்வதை இம்மகளிர் இப்போது ஒவ்வொன்றாக எண்ணுகின்றனர். இது, முன்பு பறம்பு நாட்டின்மீது வரிசை வரிசையாகப் படையெடுத்து வந்த பகையரசர்களது குதிரைகளைத் தமது பரம்புமலை மீது ஏறி நின்று இவர்கள் எண்ணிய அக்காட்சியை இப்போது எனக்கு நினைவுறுத்துகிறதே! இக் கொடுங் காட்சியைக் காண என் உள்ளம் வருந்துகிறதே!'

இந்த இடத்தில் கபிலர் நொந்த உள்ளத் துடிப்பைத் திறந்து காட்டுகிறார். அக்கால நினைவு அகத்தை மகிழ்விக்கின்றது. இக்கால நிலை நெஞ்சை வாட்டுகின்றது.

### சென்ற நிலவும் இந்த நிலவும் :

கபிலர் இவ்வாறு வழிநடைத் துயரோடு பாரி மகளிரை அழைத்துச் சென்று ஒரு பாதுகாவலான இடத்தில் வைத்திருந்தார். அவர்கள் தம் நாட்டை விட்டு நீங்கி ஒரு திங்களுக்கு மேலாயிற்று. தந்தையையும் நாட்டையும் பிரிந்த துன்பம் அம் மகளிர்க்குச் சிறிதும் தணியவில்லை. ஒரு நாள் இரவு முழு வெண்ணிலவு ஒளி வீசிற்று. அதைக் கண்ட அம்மகளிர்க்குப் பழைய நினைவுகள் தோன்றிப் பெரு வருத்தத்தை உண்டாக்கின. அவ்விருவரும் உள்ளம் நைந்து கூறுகின்றனர் :

சென்ற திங்களில் எமது மலையை மூவேந்தரும் முற்றுகையிட்டிருந்தனர். அப்போது வீசிய ஒளி நிலாக் காலத்தில் எம்மோடு எம் தந்தையரும் இருந்தார்; எமது

மலையும் எம்மிடம் இருந்தது. ஆனால், ஒளி நிலா வீசும் இன்று எமது மலையும் எம்மிடம் இல்லை; எம் தந்தையாரும் எம்மை விட்டுப் பிரிந்தார்!'

அம்மகளிரின் வேதனைக் குரலையும் வெறிச்சென்ற வாழ்வையும் இப்பாட்டு எத்துணை ஆற்றலுடனும் அமைதியுடனும் வெளிப் படுத்துகின்றது!

**மணமுயற்சி :**

கபிலர் அம்மகளிர்க்கு மணமுடிக்க விரும்பித் தகுதியுடைய சிற்றரசர் பலரை அணுகினர்; மணந்து கொள்ளுமாறு அவர்களை வேண்டினர். பாரியோ; மூவேந்தர்க்கும் பகைவன்; அவன் மகளிரை மணந்து கொண்டால், அவ்வேந்தர்களால் தமக்குத் தீங்குண்டாகும். இவ்வாறு அஞ்சிய சிலர் மணம் புரிய மறுத்து விட்டனர். மறுத்தவர் சிலரைக் காணபோம்.

**விச்சிக்கோன் :**

விச்சிக்கோன் என்பவன் ஒரு மலை நாட்டுத் தலைவன்; சிறந்த வீரன். கபிலர் அவனை அணுகி' 'தலைவ, முல்லைக்குத் தேர் தந்த வள்ளல் பாரி என் இன்னுயிர் நண்பன். அவனை நீயும் அறிவாய். இம்மகளிர் இருவரும் அவன் புதல்வியர்; நினக்கேற்ற குணநலனும் குலப் பெருமையும் உடையவர். இவர்களை ஏற்று நீ மணம் புரிந்து கொள்வாயாக!' என வேண்டினர். ஆனால், விச்சிக் கோன் அவர்களை மணந்து கொள்ள மறுத்து விட்டான்.

**இருங்கோ வேள் :**

இருங்கோ வேள் : என்பவன் வேளிர் குலத் தலைவன்; ஆற்றல மிக்கவன். அவனை அடைந்து கபிலர் வேண்டுகிறார்.

வேந்தே பறம்பு நாட்டு முந்நூறு ஊர்களையும் பரிசிலர்க்கு அளித்த பாரியின் புகழை நீ அறிந்திருப்பாய். யான் அவன் தோழன் இவ்விரு மகளிரும் அவன் புதல்வியர்' இவர்கட்கு மணம் முடிக்கும் பொறுப்பு என்னைச் சார்ந்து நிற்கிறது. இவர்களை நாம் உனக்குத் தருகிறேன் ஏற்று நீ மணம் புரிந்து கொள்வாயாக!,

உருக்கமும் கடமையும் ஒருங்கு தொனிக்கும் இந்த வேண்டுகோளால் கருதிய பயன் கிடைக்கப் பெருதது வருந்துதற்குரியதே.

மலையன் :

மலையன் என்னும் மன்னனைக் கபிலர் அணுகினர். அவன் திருக்கோவிலூரைத் தலைநகராகக் கொண்டு மலை நாட்டை ஆண்டவன்; மறக்குலத்தவன். அவனிடம் பாரி மகளிரின் நல்லியல்புகளைக் கூறி, அவர்களை மணம் புரியமாறு வேண்டினர் கபிலர். அவனும் இசைந்தான்.

பாரி மகளிருக்கும் மலையனுக்கும் கபிலர் மணம் முடித்து வாழ்த்தியருளினர்.

செல்வத்திற் பிறந்த பாரி மகளிர் சீரழிந்தனர். ஆயினும், சிந்தையழிந்து சிதையா வண்ணம் அவர்களைக் காப்பாற்றிய கபிலர் பெருந்தகைமையை எவ்வளவு பாராட்டினும் தகுமே! பாராட்டுவோமே!

## அருஞ்சொற்பொருள்

பண்டு—பழைய காலம், வரையாது—அளவிடாமல், ஈயும்—கொடுக்கும், புரப்பவன்—பாதுகாப்பவன், விழைந்து—விரும்பி, பரிவு—அன்பு, தணியவில்லை—குறையவில்லை, நைந்து—வருந்தி, மூவேந்தர்—மூன்று × வேந்தர்—சேர சோழ பாண்டியர்.

## வினாக்கள்

1. பாரி என்பவன் யார்? அவனது சிறப்பியல்புகளைத் தெரிவிக்க.
2. 'கொடை மடம்' என்பது என்ன?
3. பாரி யாரால் எவ்வாறு கொல்லப்பட்டான்? ஏன்?
4. பாரி மகளிர் யாவர்? அவர் புலமை நலம் வாய்க்கப் பெற்றவர் என்பதை எதனாலறியலாம்?
5 பறம்பு நாட்டை விட்டுப் பிரியுங் கபிலர் பிரிவாற்ருமையால் கூறியது என்ன?
6. கபிலரின் நன்றி மறவாக்குணம் எவற்ருல் விளங்குகிறது?
7. பாரி மகளிரை மணந்து கொள்ள மறுத்தவர் யாவர்? ஏன் மறுத்தனர்?

## 6. தமிழன் கண்ட மலேயா

### (நகரமும் நாடும்)

திரு. அ. மு. பரமசிவானந்தம், எம். ஏ., எம். லிட்.

[இவர் சென்னைப் பச்சையப்பர் கல்லூரியின் துணைத் தமிழ்ப் பேராசிரியராய்ப் பணியாற்றுகிறார்; பல நூல்களை எழுதியுள்ளார்; இலங்கை, மலேயா முதலிய கீழ்நாடுகளுக்குச் சென்று தமிழ்ச் சுவையூட்டி வந்தவர்; சிறந்த பேச்சாளர்.]

மலாக்கா,
28—5—48.

அன்பின் அரசி,

சிங்கப்பூர்த் துறைமுகம் உலகத் துறைமுகங்களுள் மிக முக்கியமானது. மேலை நாட்டுக் கப்பல்களும், கீழை நாட்டுக் கப்பல்களும் இதைத் தொடாது போக வழியில்லை. உலகம் சுற்றிப் பெரு வாணிப வகையிலும், பிற வகையிலும் செல்லும் கலங்கள் அனைத்தும் இதைத் தொட்டே செல்லவேண்டும். நாள்தோறும் நூற்றுக்குக் குறையாத கப்பல்கள் இங்கு வந்து செல்லுமாம். மலேயா நாட்டின் தென்கோடியில் உள்ள சிங்கப்பூர் ஒரு தனித் தீவு. ஆளும் முறையிற்கூட, இன்னும் இது தனியாகவே அமைந்துள்ளது. சிறுசிறு குன்றுகள் இடை இடை விளங்க, பல பல கலங்கள் கரையிட நிற்க, மிக அழகிய இயற்கைத் தோற்றத்தோடு காட்சியளிக்கும் தீவு இது. போர்க்குரிய பெரிய கடற்படைத்தளம் இங்கு உண்டு. சாதாரண மக்கள் இறங்கும் துறைமுகத்திற்கு எதிர்ப்பக்கத்தில் பதினேழு கல் தொலைவில் தீவின் மறு புறத்தே அக்கடற் படைத்தளம் அமைகின்றது. அதை நான் காணவில்லை. சிங்கப்பூர் கடற்படைத்தளம், உலகில் சிறந்த தளம் என்பதை அனைவரும் அறிவர் அல்லரா? இத்தளம், சென்ற போரில் ஜப்பான் கை பட்டவுடன் ஆங்கிலேயர் தம் நாடே அழிந்தது என அலமந்ததை நீ அறிவாய். அன்று, நீ குழந்தை நான் இறங்குமுன் கடலிலிருந்தே பல கப்பல்கள் கரையோரங்களில் நிற்பதைக் கண்டேன். சென்னையைப் போன்று ஒரு குறித்த இடத்திலேதான் கப்பலை நிறுத்த வேண்டும் என்பதில்லை. எங்கெங்கும் இயற்கைத் தளங்கள்; பல இடங்களில் நிற்கின்றன கலங்கள்.

குழந்தாய், சிங்கப்பூர் உலகில் முக்கிய இடமானதால், இங்கு எல்லா நாட்டு மக்களும் வாழ்கின்றார்கள். எனினும், சீனர் பெரும் பாலராய் இருக்கின்றனர். அதற்கு அடுத்தபடியாக உள்ளனர் இந்தியர். சிங்கப்பூரில் பத்து இலட்சத்துக்கு மேற்பட்ட மக்கள் வாழ்கின்றார்கள். ஏறத்தாழ 60,000 தமிழர் அங்கு உள்ளனர். விளம்பரப்பலகைகளைப் பெரும்பாலும் ஆங்கிலத்திலும் சீன மொழியிலுந்தான் காண்கிறேன். சிற்சில இடங்களில் தமிழ்ப் பலகைகள் தெரிகின்றன. மகமதியரும் பெரும்பாலராய் வாழ்கின்றனர். பெருவாணிபத் தலமாதலால், எங்கும் கடைத் தெருக்கள் காட்சியளிக்கின்றன. இராப்பகல் மூடாத பல கடைகள் உண்டாம். இங்கு மக்கள் வசதிக்காகச் செல்லும் 'பஸ்' முதலியன இரவு ஒரு மணி வரையில் ஓடுமாம் இந்த நிலை, இவ்வூர் இரவிலும் ஓய்வற்ற பேரூர் என்பதை விளக்கவில்லையா?

தெருக்கள் மிகத் தூய்மையாகப் பாதுகாக்கப்படுகின்றன. மக்கள் வாழ்வும், நலத்துறை வகையில் செம்மைப்படுத்தப்பட்டுத் தான் இருக்கிறது. உயரிய கட்டடங்கள் நகரை அணி செய்கின்றன. ஓய்வற்ற உயரிய நகராய் இது அமைகின்றது. மேலை, கீழை நாடுகளை இணைக்கும் ஓர் இணைப்பிடமாய் இது அமைகின்றது என்பது பொருந்தும்.

### நகர அமைப்புக்கள்:

சிங்கப்பூர் மட்டுமல்லாது மலேயாவில் உள்ள அத்தனை ஊர்களும் மிகவும் தூய்மையாகத்தான் பாதுகாக்கப்படுமாம். நகரில் மாட்டு வண்டிகளும், குதிரை வண்டிகளும் காணப்படவில்லை. காரணம் அறிய விரும்பினேன். மோட்டார்கள் அதிகம் உள்ளமையால், பிற வண்டிகள் தேவையில்லை என்பது ஒன்று. மற்றும் நகர நலம் கெடா வகையில் பசு, எருது முதலியவற்றை ஊர்ப் புறத்தேதான் வைத்து கொள்ள வேண்டும் என்றார்கள். சில பேரூர்களில் நகர எல்லைக்கு ஐந்து கற்களுக்கு அப்பாலுங் கூடக் கால் நடைகள் இருக்குமாம். அவை உலவுவதாலும், அவற்றின் கழிவு நீர் முதலியவற்றாலும் நகர நலம் கெடும் எனபதை அறிந்து, அழகிய முறையில் அவற்றைச் சேர்க்காது காக்கிறார்கள். சொந்தப் பசு வைத்துக்கொள்ள விரும்புகின்ற

வர்களும், நகரில் வைத்துக் கொள்ளக் கூடாதாம் வெளியே வைத்துத்தான் பாலைக் கொண்டு வரவேண்டும். சென்னை நகரிலே — நமது தலைநகரிலே — மனிதன் வீட்டுக்கும் மாட்டுக் கொட்டிலுக்கும் வேறுபாடு காணாத நமக்கு, இது வியப்பாகத் தோன்றவில்லையா? இது மட்டுமின்றி, இன்னம் எத்தனையோ வகைகளில் நகரங்கள், நலத்துறை-குடிநீர், கல்வி, போக்குவரத்து ஆகிய பலவகைகளில் நம் நாட்டினும் நன்கு ஓம்பப்படுகின்றது. அவைகளைப் பற்றியெலலாம் வாய்ப்பு நேருந்தோறும் வரைவேன்

∴ ∴ ∴

மலேயா நாட்டில் சீனரே பெருவாரியாக உள்ளனர் என்று எழுதினேன் அல்லவா? அம்மக்கள் நிலை, நான் சென்ற வண்டியிலும் விளங்கிற்று பதினமருக்கு மேற்பட்ட பிரயாணிகள், செலுத்துபவர், நடத்துபவர் அனைவரிலும் நான் ஒருவன் தவிர மற்றவர் அனைவரும் சீனரே. நடத்துபவர் மட்டும் மலாய் நாட்டவர் போலத் தோன்றினர். ஆகவே, நான் யாரோடும் பேச இயலவில்லை. வெளியே உள்ள இயற்கை என்னென்ன பேசிற்றுத் தெரியுமா?

## இயற்கையோடு இயைந்த வாழ்வு:

மனிதன் முக்காலத்தே இயற்கையோடு கலந்த வாழ்க்கையைத்தான் வாழ்ந்தான். உயர்ந்த மாடமாளிகைகளும், கூட கோபுரங்களும், பின்பு அவன உள்ள உணர்ச்சிக்கு ஏற்றவாறு செயற்கை இடமாய் நின்றன. பயமற்று ஓடியாடிப் பாடுபட்டுத் தனக்கெனவே வாழாத அந்தக் காலத்தில், மனிதன் பரந்த இயற்கையினிடையில் மனமகிழ்ச்சியோடு வாழ்ந்தான். இன்று பயந்து மற்றவர் வாடத் தானே பொருள் பெருக்கி, ஒருவன் உழைக்க, அந்த உழைப்பின் பயனை ஒருவன் பெற, பெற்ற பொருளைப் பதுக்க — பத்திரப்படுத்தி வைக்க, சுவர் அமைத்துக் கம்பி அமைத்து, சிறைசசாலை போன்ற வீடமைத்துக் கொண்டான். கள்ளமற்ற உள்ளத்தோடு அனைவரையும் ஒத்து நோக்கி, இயற்கை எழிலிடை இன்பங் கண்டான் அன்றைய மனிதன். இன்றைய முதலாளி — பிறன் பொருளால் பெரியவன் ஆனவன் — பார்க்கின்றவர்களை யெல்லாம் ஐயமுற்று, ஒருவரையும் நம்பாது, கல் வீட்டையும் இரும்புப் பெட்டியையும்

நம்பிச் சிறைப்பட்டு வீட்டில் வாடுகின்றான்! குழந்தாய். இந்த உயர்ந்த கருத்தை, மலேயா நாட்டு இயற்கை நன்கு விளக்கிற்று. சாலை இருமருங்கிலும், உழைத்துப் பாடுபடும் பாட்டாளி மக்கள் சாதாரண வீடுகளை அமைத்துக்கொண்டு வாழ்கின்றார்கள். அவர்கள் வீடுகளுக்குக் காற்றோட்டப் பலகணி உண்டு. ஆனால் கள்ளர்களுக்கு அஞ்சிய கம்பிகள் இல்லை. இயற்கைச் சோலைகளின் நடுவிலே, இனிய பறவையொலிகளின் இடையிலே—இந்நாட்டுப் பழங்குடி மக்கள் — உழைப்பாளிகள் — பயமற்று. கொண்டதை மனநிறைவால் ஏற்று வாழ்க்கை நடத்து கின்றார்கள். அம்மம்ம! ஒய்வற்ற சிங்கப்பூர்த் தெருக்களுக்கும், இந்நாட்டுப் புறங்களுக்குந்தான் எத்தனை வேற்றுமை! இவற்றை யெல்லாம் எனக்கு இயற்கை அன்னை எடுத்து விளக்கிக் கொண்டே வந்தாள். நான் கண்ணும் இமைக்காது, அவள் காட்டிய காட்சி களையும் உணர்த்திய பாடங்களையும் கண்டும் அறிந்தும் வந்தேன்.

சாலையின் இருமருங்கிலும் உயர்ந்த இரப்பர்த் தோட்டங்கள் காட்சி அளித்தன. இரப்பர்த் தோட்டங்கள் சிலவற்றை நேரில் காண இருக்கிறேன். ஆதலால், அவைகளைப் பற்றி பிறகு எழுதுவேன். நாட்டுப்புறங்கள் ஒன்றன்பின் ஒன்றாக வந்து கொண்டிருந்தன. வழிநெடுகப் பாலங்கள் மரங்களால் ஆக்கப் பட்டிருந்தன. 'இத்துணைச் சிறந்த சாலைகளில் பாலங்கள் மட்டும் இந்நிலையில் ஏன் இருக்கின்றன?' என எண்ணினேன். மலாக்கா வந்தபின் அதன் வகை அறிந்தேன். ஜப்பான் படையெடுக் குங்கால், ஆங்கிலேயர் பின்வாங்கியபோது இந்தப் பாலங்களை யெல்லாம் உடைத்து விட்டார்களாம். பின்னாலேயே தொடர்ந்து வந்த ஜப்பானியர் பதிலுக்கு மரப்பாலம் அமைத்தார்களாம். பாலங்களைக் கடந்தோம்.

வீட்டமைப்பு:

குழந்தாய், வழியிடைக் கண்ட தோட்ட வீடுகளாம் நாட்டு வீடுகள் புதுவகையாய் இருந்தன. வீடுகள் எல்லாம் மரத்தால் ஆகியனவாய் இருந்தன. நிலம் பெரும்பாலும் சதுப்பாயிருந்ததால், ஆழ்ந்த கடைக்கால் இட்டு வீடு கட்ட முடியாது போலும்! அடியில் மரத் தால் ஆகிய கால்கள் நட்டு, இடத்துக்கு ஏற்றபடி

இரண்டோ, மூன்றோ, நான்கோ அடிகள் விட்டு, பின் அதே மரத்தால், தரை, சுவர் முதலான இட்டு, மேலே தகரத்தாலோ அன்றி ஓலையாலோ, கூரை வேய்ந்த வீடுகளே எங்கும் தென் பட்டன. அவை மிக எளிய வீடுகளே. சில வீடுகள் தென்னை போன்ற ஒரு வகை ஓலையால் வேயப்பட்டிருந்தன. நகரத்தில் கண்ட ஆடம்பர வாழ்க்கை இங்கெல்லாம் காணப்படவில்லை மக்கள் சாதாரண முறையிலே காணப்பட்டார்கள். இரப்பர்த் தோட்டங்களோடு சில இடங்களில் பல தென்னந் தோப்புகளும் காணப்பட்டன. மலாக்கா நெருங்க நெருங்கத்தான் தென்னந் தோப்புகள் அதிகமாய் இருந்தன. தேங்காய்கள் மிகப் பெரியன. நம் நாட்டில் இவ்வளவு பெரிய தேங்காய்களைக் காண முடியாது. இங்கு உரித்த காய்கள் அங்கு மட்டையோடு கூடிய காய்கள் அளவு இருக்கும்.

வரும் வழியில் இரண்டு இடத்தில் இரண்டு ஆறு களைக் கடந்தோம். அவற்றுக்குப் பாலங்கள் இல்லை. பெரும் படகுகளிலேதான் நாங்கள் ஏறிய பஸ் அப்படியே ஏற்றப்பட்டு மறு கரைக்குக் கொண்டு செல்லப்பட்டது. பல பெரிய சுமையுள்ள லாரிகள்கூட அப்படித்தான் கொண்டு செல்லப்பட்டன. மலாக்கா வந்தபின் அதற்குரிய காரணங்களைக் கேட்டேன். அத்துறை களில் பெரும்பாலும் மலேயா நாட்டுப் பழங்குடி மக்கள் வாழ்கின் றார்கள் என்றும், இந்த மாற்ற முறையின் மூலம் பலர் பிழைக் கின்றனர் என்றும், அவர்கள் பிழைப்புக் கெடாதபடி பாது காத்துக் கொள்ளவே அரசியலார் பாலங்கள் அமைக்காது இந்த வகை ஏற்றுமதி முலம் அவர்களுக்கு வருவாய்க்கு வழி செய் துள்ளனர் என்றும் அறிந்தேன். அவர்கள் வாழ அது சிறந்த வழியென அவர்கள் நினைத்தாலும்,என் உள்ளம் அதனைச் சரியென ஒப்பவில்லை. அந்த ஓடப்பிழைப்புற்று வாழும் அத்தனை குடும்பங்களையும் அரசாங்கம் விரும்பினால் வேறு பல வழிகளில் முன்னேற்றமுறச் செய்யலாம்; அனைவருக்கும கல்வியளித்து, அரசியல் உத்தியோகங்கள் அளிக்கலாம். அதைவிட்டுத் தாழ்ந்த நிலையிலேயே வைத்து, எளிய வாழ்க்கை வாழவேண்டும் என்று விதித்திருப்பது விசித்திரம் தான்! வழி நெடுகப் பல இயற்கைக் காட்சிகள் கண்ணையும் கருத்தையும் கவர, 160 கற்களுக்கப்பால் ஜோகூர்,

மூவார், பத்துப் பகார் முதலிய ஊர்களையெல்லாம் கடந்து மலாக்கா வந்து சேர்ந்தேன். வழியில் ஓரிடத்தில் 'சன்மார்க்கத் தமிழ்ப் பாடசாலை' என்ற ஒரு தமிழ்ப் பள்ளிக்கூடம் இருப்பதை அங்கு மாட்டப்பட்டிருந்த பலகையால் அறிந்தேன்.

## அருஞ்சொற்பொருள்

வாணிபம் — வியாபாரம், நலத்துறை — சுகாதார இலாக்கா, மருங்கு — பக்கம்.

## வினாக்கள்

1. சிங்கப்பூரைப் பற்றி ஆசிரியர் கூறுவது என்ன?

2. மலேயாவின் நகர்கள் எங்ஙனம் பாதுகாக்கப் படுகின்றன?

3. மலேயா நாட்டு இயற்கை தமக்கு விளங்கியதாக ஆசிரியர் கூறும் உயர்ந்த கருத்து யாது?

4. பாலங்கள் மட்டும் மரங்களால் அமைத்திருந்ததன் காரணம் யாது?

5. மலேயாப் பழங்குடி மக்களைப் பற்றி இக்கடிதத்தில் கூறப் பெற்றுள்ள செய்திகள் யாவை?

## பயிற்சி

நீ கண்ட சிறந்த காட்சியைப் பற்றி உன் நண்பனுக்குக் கடிதம் ஒன்று எழுதுக.



## 7. பல நாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள்

திரு. சோம. லெ. இலக்குமணச் செட்டியார், பி. ஏ.

[இவர் மேனாடுகள் பலவற்றிற்குச் சென்று வந்தவர்; பயணக் கட்டுரைகள் பல எழுதியுள்ளார் ]

"புதிதாக ஒரு நாட்டுக்குப் போகுமுன் அந்நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களை நன்றாகக் கேட்டுத் தெரிந்து கொள்." என்பது கன்பியூசியஸ் என்ற சீனப் பெரியார் வாக்கு. "ரோமர்களைப் போலவே ரோமாபுரியில் நடந்துகொள்", என்ற பழமொழியும் இவ்வாக்கைத் தழுவியதே. ஆயினும், நான் புதிய நாடுகளுக்குச் சென்ற பின்னரே, அந்தந்த நாட்டு மக்களின் பழக்க வழக்கங்களை அறிய நேர்ந்தது. அவைகளையே இக்கட்டுரையில் குறிப்பிடுவேன்.

### விருந்தோம்பும் முறை :

"உண்டிக்கழகு விருந்தோடுண்டல்", என்ற நமது பழமொழியைப் போல, "வீட்டில் ஒரு விருந்தினர் இருப்பது வீட்டில் ஒரு கடவுள் இருப்பது போலாகும்" என்று செக்கு மொழியில் ஒரு பழமொழி இருப்பதாகப் பிராட்டிஸ்லாவா நகரில் ஒரு நண்பர் கூறி, அவருடைய பங்கீட்டுக்குரிய பொருள்களை எனக்குத் தரலாம் என்று நான் தங்கியிருந்த உணவு விடுதி அதிகாரிக்குத் தெரிவித்தார்.

ஆனால், மேனாட்டவர்கள் விருந்தினர் எத்தனை பேர் என்பதையும், யார் யார் என்பதையும், எப்போது வருவர் — எத்தனை நாட்கள் தங்குவர் என்பதையும் முன்பே அறிந்துகொள்ள விரும்புகிறார்கள். முன் அறிவிப்பின்றி விருந்தினர் வருவதால் தம் திட்டங்கள் சீர்குலைந்து போகும் என்பதே அவர்கள் கருத்தாகும். மேலும், அது தனிப்பட்டவரின் உரிமையைக் கட்டுப்படுத்துவதாகு மென்றும் மேலை நாட்டவர் எண்ணுகின்றனர்.




### உரிமையைப் பேணுதல்:

மேல் நாடுகளில் ஒருவர் செயலில் மற்றொருவர் தலையிடுவதில்லை. மகன் திருமணத்தை முடிவு செய்வதில்

அவன் பெற்ரேர் தலையிடுவதில்லை. எந்தச் செயலிலும் ஒருவனுடைய திட்டததில் அவன் நண்பர்கள் குறுக்கிடுவதில்லை. கணவனுக்கு வரும் கடிதத்தை மனைவி பிரிப்பதில்லை. மனைவிக்கு வரும் கடிதத்தைக் கணவனும் பிரிப்பதில்லை.

குழந்தைகட்கு மேனுட்டார் கொடுக்கும் உரிமை எல்லையற்றது. "அமெரிக்காவைப் பற்றி எனக்கு வியப்பைத் தருவது. அங்கே பெற்ரேர் தம குழந்தைகட்குக் கீழ்படிந்து நடக்கும் முறையே ஆகும்" என்று வினசர் கோமகனுர் ஒரு முறை விளையாட்டாகச் சொன்னுர். பயணத்தினபோது குழந்தைகள் துன்பப்படாமலிருப்பதற்காக பிரிட்டனில அவர்களைச் சிறு பிரம்புக் கட்டிலில் இட்டு' அக்கட்டிலைக் கணவனும் மனைவியுமாகப் பிடித்துக் கொண்டு செல்வர்.

## தொழிற் சிறப்பு :

சில குறிப்பிட்ட தொழில்களைச் செய்வது இழிவு என்ற கேடு தரத்தக்க மனப்பான்மை வேறு நாடுகளில் இல்லை வேலை செய்வதில உயர்வு தாழ்வு இல்லை; 'எநத வேலையும் கடவுளின் தொண்டு. அது மக்களை உயர்த்துவது'. என்பதே அவர்கள் கருத்தாகும். பற்பல நாகரிக முன்னேற்றங்கள் இருந்தும், துணி துவைததல், வீட்டினைத் தூய்மை செய்தல், பற்றுத் தேய்த்தல் ஆகிய வேலைகளைப் பிறர் உதவியின்றி ஒவ்வோர் அமெரிக்கனும் தானே செய்கிருன்.

செர்மானியரும் அமெரிக்கரும் தம் வேலையைத் தளராத ஊக்கத்தோடும் நல்ல மன நிலையோடும் செய்கின்றனர். அவர்கள் வேலையில் துன்பப்படுவதாகச் சொல்லுவதில்லை. தங்கள் வேலையில் ஒரு பெருமையை உணர்கிருர்கள். அவர்கட்குத் தன்னம்பிக்கை உண்டு. 'பிறரையே நமபி வாழ்பவன் வெற்றி காண்பதில்லை என்னும் உண்மையை அவர்கள் அறிந்தவர்கள். உழைப்புக்குந் தான் பயன் என்பதை அமெரிக்கர் தம் குழந்தைகட்கு வலியுறுத்துகின்றனர். கடவுளைக் கேட்டு விரும்பும் நலன்களை அடையலாம் என்று 'சிறுவர்கட்குக் கற்பிப்பது தவறு என்பது அவர்கள் கருத்து. அமெரிக்கச் சிறுவர் சிறுமியர், தம் ஏழாம் ஆண்டு முதலே, நாள்தோறும் சிறிது நேரம் ஏதாவது

ஒரு சிறு வேலையைச் செய்து தம் சிறு செலவுகளுக்குத் தாமே பொருள் தேடிக்கொள்கின்றனர். இத்தகைய தம் வருவாயி லிருந்து, குழந்தைகள் கிறிஸ்துமஸுக்குத் தம் பெற்றோர் களுக்கு அன்பளிப்புப் பொருள்கள் வாங்கிக் கொடுக்கின்றனர். நான் பார்த்த அமெரிக்கக் குடும்பங்களிலெல்லாம் இவ்வாறு தங்கட்குத் தங்கள் குழந்தைகள் அன்பளிப்பாய்த் தந்த பொருள்களை மகிழ்ச்சியோடும் பெருமையோடும் என் நண்பர்கள் எனக்குக் காட்டினார்கள்.

## பொழுதுபோக்கு வேலைகள் :

ஐரோப்பா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா இங்கெல்லாம் வசிப்பவர் எல்லோரும் தாம் நாள்தோறும் செய்யும் வேலை களிலிருந்து மாறுதலடைய ஏதாவதொரு பொழுதுபோக்குத் தொழில் வைத்துக் கொண்டிருக்கின்றனர். இத் தொழில் களுள் தபால் முத்திரைகளைச் சேர்ப்பது எங்கும் பரவி யுள்ளது. பல நாட்டு நாணயங்களைச் சேர்ப்பவரும் உளர். பலவகைக் கற்களைச் சேர்த்தல், பெரியோர்கள் கையெழுத் துக்களைப் பெறுதல், நிழற் படங்களைத் தொகுத்தல், பல வகையான தீப்பெட்டிகளைச் சேர்த்தல், பல வகையான பீங்கான்களைச் சேர்த்தல் போன்ற பல பழக்கங்களும் உண்டு. இந்தப் பொழுதுபோக்கு வேலைகள் இப்போது பலருக்கு முழுநேர வேலையாகவும் வாழ்க்கையில் அதே ஒரு பித்துப்போலவும் ஆகிவிட்டன பலவகைக் கற்களைச் சேர்ப்பதில் அமெரிக்கருக்கு உள்ள பித்தை அறிந்த ஜப்பானியர். ஹிரோ சீமாவில் அமெரிக்கர் போட்ட அணுக்குண்டிலிருந்து சிதறிய சிறு சிறு சில்லுகளை, ஒரு சில் 5 டாலர் விகிதம் அமெரிக்கருக்கு விற்ற னராம். இதுவரை அமெரிக்கர் தாம் போட்ட அணுக்குண்டையே 5 இலட்சம் டாலருக்கு வாங்கிக் கொண்டிருப்பதாக ஒரு பத்திரிகை கேலியாக எழுதியிருந்தது.

## புது வழக்கம் :

பிறந்த நாள் விழா, திருமண ஆண்டு விழா, நண்பர்களை முதன் முதலிற் கண்ட நாள் விழா இவற்றையெல்லாம் வாழ்த்துச் செய்திகள், அன்பளிப்புக்கள் அனுப்பியும்,

விருந்து நடத்தியும் கொண்டாடுவது பல நாடுகளில் இப்போது புது வழக்கம் ஆகிவிட்டது.

## பிறர்க்கு உதவிசெய்தல்:

வாழ்க்கையில் தம்மைவிடத் தாழ்ந்த நிலையில் உள்ளவர்கட்கு உதவி செய்ய வேண்டுமென்ற நல்லெண்ணம் நம்மைப்போல எல்லா நாட்டினருக்கும் உண்டு. ஆனால் அவர்கள் தனித்தனியாக அறம் செய்யாமல் பொது நிலையங்கள் வாயிலாக இயக்க முறையில் பெரிய அளவில் திட்டமிட்டுச் சமூக நன்மைக்கான பணிகளைச் செய்கிறார்கள் இதற்குச் சில எடுத்துக் காட்டுகள கூறலாம். சுவீடன், சுவிஸ் நாட்டவர் செஞ்சிலுவைச் சங்கத்துக்குப் பெரும் பொருள் கொடுத்திருக்கின்றனர். போரால் தஞ்சம் என்று அவர்கள் நாட்டுக்கு வந்த பல நூறாயிரம் செர்மானியருக்கும் பிற நாட்டவருக்கும் அவர்கள் எல்லா உதவிகளையும் செய்தார்கள். அமெரிக்கர் ஞாயிற்றுக்கிழமை தோறும், கிருத்தவக் கோவில்களில் பொருள் சேர்த்து நூறாயிரக்கணக்கான உணவுப் பார்சல்களைப் பாழடைந்த செர்மனிக்கு ஆகாய விமானத்தின்மூலம் கொடையாக அனுப்புகிறார்கள். அமெரிக்க நாட்டு மடாதிபதிகள் பற்பல கல்லூரிகளை உலகெங்கும் நிறுவியுள்ளார்கள். ஒய். எம். சி. ஏ. என்னும் கிறித்தவ இளைஞர் சங்கம் போன்ற பல இயக்கங்கள் வாயிலாகவும் பெருந்தொண்டு செய்கின்றனர்.

## பிறரை இகழாமை:

நான் சென்ற நாடுகளில், எக்காரணத்தாலாவது ஒருவருக்கு உடலின் ஒரு பகுதி—கால், கை அல்லது வேறு உறுப்புப்—போய் விட்டால், அதற்காக அவரைப் பிறர் நேரிலோ மறைவிலோ இகழ்வதில்லை. அவர் ஊக்கமிழந்து விடும்படியாக அவரிடம் நடந்துகொள்வதில்லை. அவருடைய இழந்துபோன உடலுறுப்பைப்பற்றி ஒன்றும் பேசாமல் மற்றச் செய்திகளைப் பற்றியே அவரிடம் பேசுவார்கள் 'ஐயோ! உனக்குக் கை போய்விட்டதே! என்று அவரிடம் அழுவதில். லைபோரில் ஒன்றுக்கு மேற்பட்ட உறுப்புக்களை இழந்த பல நூறாயிரம் பேர்; எல்லா

உறுப்புக்களுமுடையவர்கள் செய்யும் வேலைகள் அனைத்தையும் விஞ்ஞான உதவியால் மகிழ்ச்சியுடனும் திறமையுடனும் செய்வதை, ஜெர்மனியிலும் அமெரிக்காவிலும் இங்கிலாந்திலும் ஒவ்வொரு நாளும் கண்டேன்.

### பெண்கள் நிலை :

ஆடவர் செய்யும் எந்த வேலையையும் பெண்டிரும் செய்கின்றனர். பெரும்பாலும் எல்லா நாடுகளிலும் பெண்களுக்குத் தக்க மதிப்புக் கொடுக்கப்படுகின்றது பெருஞ்செல்வரும் தமது அலுவலகத்திலுள்ள பணிப் பெண்களையும் மதிப்பாகவே நடத்துகின்றனர் மனம் ஒத்தாலன்றிச் செல்வம் பதவி இவை காரணமாக அங்கே திருமணம் நடைபெறுவதில்லை அம்மகளிர் வாழ்க்கை முறை பற்றிய நூல்களைக் கற்பதோடு பல இடங்கட்கும் சென்று பொது அறிவையும் வளர்த்துக் கொள்ளுகின்றனர்.

### குறைந்த உறக்கம் :

ஆண் பெண் என்ற வேறுபாடுகளை வெளி நாட்டார் ஏற்றுக்கொள்ளாதது போலவே, இரவு பகல் என்ற கடவுளின் வரையறையையும் அமெரிக்கரும் பிரெஞ்சுக்காரரும் ஏற்றுக்கொள்ளவில்லை. பகலிலேதான் செய்ய வேண்டும் என்றோ, அல்லது பகலில் செய்யக்கூடாத இரவு வேலை என்றோ எந்த வேலைக்கும் வரையறை இல்லை. "மணி. நேரம் என்பன மக்களின் கற்பனை; இரவும் பகலும் ஈசனுக்கு ஒன்றே," என்பது அவர்களின் கோட்பாடு இதனால் பிற நாட்டவர்களில் பெரும்பான்மையோர் நம்மை விடக் குறைவாகவே உறங்குகின்றனர்.

### கூட்டம் நடக்கும் முறை :

அமெரிக்காவில் கூட்டங்கள் நடக்கும் முறையும் குறிப்பிடத்தக்கது. மாலை 6 மணிக்கு ஒரு கூட்டம் தொடங்குவதாக இருந்தால், சரியாக 6 மணிக்கு அந்தக் கூட்டம நடக்கும் இடத்துக்குச் செல்லும் வழியிலுள்ள கதவுகளெல்லாம் மூடப்பட்டுவிடும. கூட்டம் முடிந்த பின்னரே

அவை மீண்டும் திறக்கப்படும். இதனால் கூட்டத்துக்கு யாரும் காலந்தாழ்த்து வருவதோ, அல்லது கூட்டம் முடியுமுன் சிலர் எழுந்து செல்வதோ அங்கே நிகழாதனவாகும்.

## பேசும் முறை :

மூன்று நான்கு பேர்கள் சந்திக்கும்போது, ஒருவர் பேசுங்கால் மற்றொருவர் குறுக்கிட்டுப் பேசுவது நாகரிகமற்றதாகக் கருதப்படுகின்றது. ஒருவர் பேசி முடிந்த பின்னரே அடுத்தவர் பேசுவர். அல்லது, இன்றியமையாமல் உடனே கூறவேண்டுவதாயிருப்பின், பேசிக்கொண்டிருப்பவரின் உடன்பாட்டைக் கேட்பது வழக்கம்.

## கல்வியில் ஆர்வம்:

கல்வியில் அமெரிக்கருக்கு உள்ள ஆர்வத்திற்குச் சான்றாகப் பின்வரும் இரண்டு நிகழ்ச்சிகளையும் கூறலாம்; தம் முன்னாள் ஆசிரியர் கல்லூரியினின்றும் ஓய்வு பெறும் நாளில் அவர்கள் அக்கல்லூரிக்குச் சென்று அந்த ஆசிரியருக்கு மரியாதை செலுத்துவார்கள். ஹார்வர்டு, கொலம்பியாப பல்கலைக் கழகப் பட்டதாரிகள் தங்கள் உயிலில் அப்பல்கலைக் கழகங்கட்காக ஒரு தொகையை ஒதுக்கி வைக்கிறார்களாம்.

பொதுவாக எல்லா மக்களும் கலையில் விருப்பமுடையவர்கள். அண்மையில் மற்றத் துறைகளில் முன்னேறியுள்ள அமெரிக்காவிலும் ஆஸ்திரேலியாவிலும் கலையுணர்ச்சி மிக விரைவாக உருவாகிக்கொண்டு வருகிறது.

## உல்லாசப் பயணம் :

மேலை நாடுகளிலுள்ள மற்றொரு பழக்கம், ஆண்டுக்கு ஒரு முறையாவது அதற்கு மேற்பட்டாவது, தத்தம் நிலைக்கு ஏற்றவாறு ஒவ்வொருவரும் சில நாட்கள் ஓய்வு எடுத்துக்கொண்டு உல்லாசமாய்ப் பயணம் செய்வதாம். பல வாரங்கட்கு முன்பே இப்பயணத்தைத் திட்டமிட்டு, இதன் செலவுக்காகச் சிறிது சிறிதாகப் பொருள் சேர்த்து அதைத் தனியே வைத்திருப்பதும் வழக்கம். மிகுதியானவர்களை ஒரு மலைக்காவது தீவுக்காவது குறைந்த செலவில் குழுவாக அழைத்துச் செல்லும் நிலையங்களும் உள்ளன.

முடிவுரை :

பொருளாதாரச் செழிப்பான நாடுகளிலெல்லாம் மக்கள் கல்வியில் ஆர்வமும் கட்டுப்பாடும் சுறுசுறுப்பும் உடையவர்களாய் இருக்கிறார்கள். ஆகையால், நாமும் பொருளாதாரத் துறையில் முன்னேற வேண்டுமானால், இப்பழக்கங்களைக் கையாளுதல் இன்றியமையாததாகும்.

## அருஞ் சொற்பொருள்

விருந்தோம்பும் முறை—விருந்தினரை உபசரிக்கும் முறை, பேணுதல்—காப்பாற்றுதல், பயணம்—பிரயாணம், மனப்பான்மை-மனத்தின் தன்மை. தளராத—தளர்ச்சி அடையாத, சில்—வட்டமான சிறு துண்டு. அலுவலகம்—வேலை செய்யும் இடம், கோட்பாடு—கொள்கை, நிலை—தகுதி, கையாளுதல்—கைக்கொள்ளுதல்.

## வினாக்கள்

1. மேனாட்டவர் விருந்தோம்பும் முறை யாது?

2. ஜெர்மனியரும் அமெரிக்கரும் தத்தம் வேலையை எவ்வாறு செய்கின்றனர்?

3. ஐரோப்பா, ஆஸ்திரேலியா, அமெரிக்கா முதலான இடங்களிலெல்லாம் மக்கள் எவ்வாறு பொழுது போக்குகிறார்கள்?

4. பல நாடுகளில் இப்பொழுது காணப்படும் புது வழக்கங்கள் எவை?

5 பிறர்க்குதவி செய்வதில் பிறநாட்டவர் கொள்ளும் முறை யாது? எடுத்துக்காட்டுடன் விளக்குக.

## பயிற்சி

1. இப்பாடத்தில் வந்துள்ள மேனாட்டுப் பழமொழிகள் யாவை?

2. பொருள் வேறுபாடு காண்க:— (1) அரம்—அறம், அரிந்து—அறிந்து

3, 'மேனாட்டு மக்களின் பழக்க வழக்கங்கள்' என்னும் பொருள் பற்றி ஒரு கட்டுரை வரைக.

4. வாக்கியங்களில் அமைக்க :— அன்பளிப்பு, அண்மை, இன்றியமையாமை நிகழ்ச்சிகள், ஒன்றுக்கு மேற்பட்ட.

## 8. பாரதியார் போற்றிய ஓவியக் கலைஞர்

பன்மொழிப் புலவர் க. அப்பாத்துரை, எம். ஏ., எல். டி.,

[பல நூல்களில் ஆசிரியரும் பன்மொழிப் புலவரும் ஆகிய இவ்வாசிரியர் எழுதிய 'ஓவியக் கலைஞர் இரவிவர்மா' என்ற நூலிலிருந்து இக் கட்டுரை எடுக்கப்பட்டது.]

"மலரினில், நீலவானில், மாதரார் முகத்தி லெல்லாம்
இலக்கிய அழகையீசன் இயற்றினன். கீர்த்தி யிந்த
உலகினில் எங்கும்வீசி ஓங்கிய இரவி வர்மன்
அலகிலா அறிவுக்கண்ணால் அனைத்தையும் நுகருமாறே"

"இயற்கையில் அழகு எங்கும் கனிந்து தவழ்கின்றது. மலரிலே அது புன்னகை பூத்துக் குலுங்குகிறது. நீல வானிலே அது களிநடம் புரிகின்றது. மாதர்தம் முகந்தோறும் அது தண்ணிலவொளி வீசுகின்றது. இங்ஙனம் இயற்கை தன் அழகு வண்ணத்தையெல்லாம் காட்டிக் காளி கூர்வது எதற்காகத் தெரியுமா?" என்று ஒரு கேள்வி கேட்கிறார் கவிஞர் பாரதியார் "உலகப் புகழ் பெற்ற கலைஞன் இரவிவர்மன், இந்த மெய்வண்ணங்களையெல்லாம் காணட்டும்; கண்டு மகிழ்ந்து, தன் மைவண்ணங்களைத் தோய்த்துக் கைவண்ணந் தீட்டிக் காட்டட்டும். இது இயற்கையின் உட்கோளாயிருக்க வேண்டும்!" என்று அவரே தம் கேள்விக்குக் கவிநயம்பட ஒரு மறுமொழியும் தந்து செல்கிறார். கவிஞர் பாரதியாரின் இத் தற்குறிப்பேற்ற அணிநயம் கலைஞரின் கலைநயத்தை எவ்வளவோ திறம்பட எடுத்துக் காட்டுகிறது காவியக் கலைஞரால் இதற்கு சீரிய பாமாலை சூட்டிப் பாராட்டப் பெற்ற ஓவியக் கலைஞர், இரவிவர்மா!

இரவிவர்மா மலையாள நாட்டில் பிறந்தவர்; மன்னர் குடிமரபில் பிறந்து வளர்ந்தவர். ஆனால், அவர் கலை வனப்பு மலையாள நாட்டெல்லையையும் மன்னர் பெருமக்கள் மரபெல்லையையும் தாண்டி, தமிழகத்தின் மக்கட் கவிஞர் பாரதியார் உள்ளத்தை அளாவிற்று. அது மட்டுமன்று; இரவிவர்மா தென்னாட்டுக்கு உரியவர்; தென்னாட்டின் தலைசிறந்த ஓவியக் கலைஞர். ஆனால், அவர் புகழொளி தென்னாடெங்கும் பரவியதுடன் நிற்க

வில்லை. வட நாட்டிலும் பொங்கி வழிந்தோடிற்று. அது கீழ்நாடு கடந்து மேலை நாடுகளிலும் பரந்தது. தென்னாட்டுக் கலைஞரெவரும் அவரைப் போல வடநாட்டில் புகழ் பரப்பவில்லை. அது போலவே கீழ்நாட்டுக் கலைஞர் எவரும் அவரளவு மேல்நாடுகளில் புகழ் பெறவில்லை.

அவர் மன்னர் மரபுக்கு உரியவராயிருந்த போதிலும் மன்னர் பெருமக்கள் மாளிகைகளிலும் பெருமக்கள் மாடங்களிலும் அவர் கலைப்படைப்புக்கள் எந்த அளவுக்கு மதிப்புப் பெற்றனவோ, அதிலும் பன்மடங்காக அவை பொதுமக்கள் இல்லங்களில் பாராட்டப் பெற்றன. பொதுமக்களும் அவற்றைப் பேரளவு விரும்பி வாங்கினர். அவரளவு மககள் உள்ளங்களில் உலவி ஊடாடி, அவர்கள் இல்லங்களில் நிலவி, அணி செய்து, அவர்கள் பண்பாட்டை வளர்த்த வேறொரு கலைஞனைத் தென்னாட்டிலோ, வட நாட்டிலோ காண முடியாது. மன்னர் குடியில் பிறந்தும் அவர் பேரளவில் மக்கள் கலைஞராய் விளங்கினர் என்பதற்கு இதைவிடச் சிறந்த சான்று வேண்டுவதில்லை.

கலையுலகில் கீழ்நாட்டில் இரவிவர்மாவுக்குப் பல வகைகளில் சீரிய தனியிடம் உரியது. கீழ்நாட்டுக் கலைஞர் எவரும் அவரைப் போல மேல்நாடுகளில் புகழ் பெற்றது இல்லை. இதற்கு ஓர் இயற்கையான காரணமும் உண்டு. அவர் மேனாட்டு முறைகளைத் திறம்படக் கையாண்டார். ஆனல், அவர் மேனாட்டு முறைகளைக் கையாண்டதனல் அவர் பண்பு மேனாட்டுப் பண்பாய்விடவில்லை. மேனாட்டு முறையின் உதவி கொண்டே அவர் கீழ்நாட்டுப் பண்பைத் திறம்பட வகுத்துக் காட்டினர். இதன் மூலம அவர் மேனாட்டவர் போற்றுதலை மட்டுமே பெற்றிருந்தால், நாம் அவர் கலையை உலகக்கலை என்று கூறுவோம்; ஆயினும், அயல்நாட்டுக் கலை என்றே நாட்டுவோம்! ஆனல், உண்மை நிலை இதுவன்று. அவர் மேனாட்டில் கலை வல்லுநரால் பாராட்டப்பெற்றது போலவே, இந்தியா முழுவதும் மக்களிடையே பேராதரவு பெற்றார். எனவே, அவர் பொதுப்பட மக்கள் கலைஞரும் உலகக் கலைஞரும் மட்டுமல்லர்; சிறப்பாகக் கீழ்நாட்டுக் கலைஞராகவும்,தென்னாட்டுக் கலைஞராகவும் போற்றத்தக்கவரேயாவர்.

காலத்தாலும், வரலாற்றாலும், மரபாலும் இரவிவர்மா இக்கால இந்தியக் கலைஞரிடையே ஒரு வழிகாட்டியும் முன்னணி விளக்கமும் ஆவர். அவர் வாழ்ந்த காலம் பத்தொன்பதாம் நூற்றாண்டின் பிற்பகுதி. அந்நூற்றாண்டின் தொடக்கத்திலேயே பொதுவாக இந்தியாவின் கலைமரபு தளர்வுற்று நலிந்துவிட்டது. தென் கோடியில் மரபறாது நிலவிய ஒரு சிற்றிழையைக் கைக்கொண்டு, இரவிவர்மா அதைத் திறம்படப் பேணி வளர்த்தார். அவர் கொடுத்த புத்துயிரால் அது புது வாழ்வு பெற்றுத் தென்னாட்டின் கலைமரபை வளர்த்தது; வடநாட்டிலும் கலையில் மக்கள் ஆர்வத்தைத் தூண்டிப் பெருக்கிப் புதிய கலை மலர்ச்சிக்கு வழி வகுத்தது. இங்ஙனம் அவர் தென்னாட்டின் கலைத்துறை மலர்ச்சிக்குத் தந்தையாராகவும் வடநாட்டின் கலை மலர்ச்சிக்கு முதல் தூண்டுதல் தந்த முன்னணிக் கலைஞராகவும் திகழ்கின்றார்.

கலை, மக்களுக்காக என்று கொண்டவர் இரவிவர்மா. கலை, கலைஞருக்கு மட்டுமே என்றோ, கலை, கலைக்கூடங்கட்கு மட்டுமே என்றோ அவர் கருதவில்லை. எனவே, அவர் கலையழகு, கலைத் துறை வல்லுநர் மட்டுமே காணக் கூடிய மறையழகாகவோ, பொது மக்களுக்கு எட்டாத மாயச் சரக்காகவோ அமையவில்லை. மற்றப் பல கீழ்நாட்டுக் கலைஞரைப் போல, அவர் வடிவைப் புறக்கணித்து வடிவுகடந்த தற்புனைவுப் பண்புகளிலும் கற்பனைகளிலும் மட்டும் கருத்தூன்றவில்லை; வடிவழகிலும் அவர் கருத்துச் செலுத்தினார். வடிவழகின் மூலமாகவேகருத்தழகிலும் அவர் உள்ளம் தோய்ந்தது. இதனால், அவர் கலைப் படைப்புக்கள் எவர் கண்களையும் எளிதில் கவர்ந்தன; கவர்ந்த பின் அவர் கருத்தையும் அவற்றில் நிலைக்க வைத்தன. அவரைத் தனிச் சிறப்புப்பட மக்கட் கலைஞராக்கியது இப்பண்பே என்னலாம்.

கலைத்துறை ஆராய்ச்சியாளர் கலை மரபின் வரலாற்றை இரண்டு கூறுகளாக வகுப்பர். ஒன்று, மேலை உலக மரபு; மற்றொன்று, கீழையுலக மரபு. பத்தொன்பதாம் நூற்றாண்டு வரை மேனாட்டார் மேலை உலக மரபொன்றையே கலை மரபாக மதித்தனர். கீழ்நாட்டுக் கலையை அவர்கள் கலையாகக் கருதவில்லை. இதற்குக் காரணம் யாதெனில், அவர்கள்

கலையாராய்ச்சிக்குரிய விதி அமைதியும், இலக்கணமும், அந் நாட்டின் கலை இலக்கியத்தை—கலைப் படைப்பைப் பின்பற்றி அமைந்திருந்தது என்பதே. இலக்கியங்கண்டதற்கே இலக்கணம் அமைய முடியும் என்ற பண்டைத் தமிழர் நுண் கருத்தை உணராமல், அவர்கள் தம் இலக்கணத்தின் அமைதி கொண்டு கீழ் நாட்டுக் கலையை அளக்க முற்பட்டனர்.

எடுத்துக்காட்டாக, மேனாட்டுக் கலைஞர் தம் கலைப் படைப்புக்களைத் திரைச் சட்டத்தில (Canvas), அல்லது அட்டைச் சட்டத்தில் (board) தீட்டுவர். அவற்றில் தம் பெயரைப் பெரும்பாலும் பொறிப்பர். அவற்றில் தம்தம் தனித் திறங்களை வற்புறுத்திக் காட்டுவர். இதனால் கலைஞருக்குத் தககபடி கலையும் வேறு வேறு வகைப்பட்டதாய் அமைந்தது.

ஆனால், கீழ்நாட்டிலோ, ஓவியங்கள் கல்லிலும் சுவரிலும் மட்டுமே தீட்டப்பட்டன. கலைஞன பெயரோ, தனித் திறமோ வெளிப்பட வழியில்லை. பெரும்பாலும் கலையிலக்கணத்தின் கட்டுப்பாடு காரணமாக, கலைஞர் திறமை ஒன்று நீங்கலாக, வேறு எந்தப் பண்பு வேறுபாட்டுக்கும் வழியிருப்பதில்லை. எனவே, மேனாடுகளில் ஒரே காலத்தில் ஒரே இடத்தில் உள்ள இரண்டு கலைஞர்களின் பண்பு வேறுபாட்டைக்கூட, கீழ்நாட்டில் இரு வேறு காலங்களில் இரு வேறு இடங்களிலுள்ள இரு மரபுகளிடையே காண்பது அரிது.

கீழ் நாட்டுக்கும் மேல் நாட்டுக்கும் நாகரிகத் துறையிலும், கலைத்துறையிலும் உள்ள வேறுபாடுகளைப் போலவே, வட நாட்டுக்கும் தென்னாட்டுக்கும் இரண்டிலும் வேறுபாடு உண்டு. எடுத்துக்காட்டாக, இலக்கியத் துறையில் தென்னாட்டிலக்கியங்கள் வட நாட்டிலக்கியங்களைக்காட்டிலும் பழமையும், வளமும், பரப்பும், தனிப் பண்பும் உடையவை என்பதைக் காணலாம். மேலும், தமிழில் பிற்கால இலக்கியத்தையும் சங்க இலக்கியத்தையும் ஒப்பிட்டுக் காண்போர், பின்னதன் கலவைப் பண்பையும் முன்னதன் தனிப் பண்பையும் வேறு பிரித்துக் காணக்கூடும். இலக்

கியத்திலுள்ள இவ்வேறுபாடே நாகரிகத்திலும் கலையிலும் பண்பிலும் உள்ள வேறுபாட்டை நன்கு குறித்துக் காட்டுகின்றது. சங்க இலக்கியம் இயற்கையோடும் வாழ்வோடும் ஒட்டியது; சமயக் கருத்துக்களுடையதாயினும், சமயச் சார்பற்றது; தற்புனைவும் அணியழகும் நிறைந்ததாயினும் இயற்கை வாய்மை கடவாதது. பொருந்தாக் கற்பனைக்கு அதில் இடமில்லை. கலைத்துறையிலும் வடநாட்டுக் கலை, தென்னாட்டுக் கலை ஆகியவற்றின் வேறுபாடு இத்தகையதே யாகும். தென்னாட்டுக் கலை, வாழ்க்கையையும் இயற்கை வாய்மையையும் பேணுவது. அது மாயக் கற்பனைகளில் உதவுவதன்று.

## வினாக்கள்

1. இயற்கையின் அழகு எங்கும் தவழ்வதை விவரிக்க.
2. கலையுலகில் இரவிவர்மாவுக்குரிய சிறிய இடத்தைக் குறிப்பிட்டு விளக்குக.
3. கலை மரபின் இரு கூறுகளை விளக்குக.

# 9. நாடகத் தமிழ்

திரு. ஜி. சுப்பிரமணிய பிள்ளை எம். ஏ., பி. எல்.

[இவ்வாசிரியர் அண்ணுமலைப் பல்கலைக் கழகத் தமிழ் ஆராய்ச்சியாளர்; சிறந்த பேச்சாளர். இக்கட்டுரை ஈரோடில் நடந்த நாடகக்கலை அபிவிருத்தி மகாநாட்டின் மலரிலிருந்து எடுத்தது.]

சரித்திர காலத்திற்கு முற்பட்டதாகிய மிகுதொன்மைவாய்ந்த காலத்திலிருந்தே தமிழ் மக்கள் நாடகக் கலையில் நன்கு தேர்ச்சியுற்றிருந்தனர். இதை இயல், இசை, நாடகம் எனத் தமிழை அவர்கள் முத்திறப்படுத்திய முறைமை கொண்டே நாம்அறியலாம். நாடகத்தைக் கூத்து எனவும வழங்கினர். பேரவை நிறுவி, ஆங்கு அரங்கினிடத்தே கூத்தாட்டங்களை நிகழ்த்தி, அவ்வாடல்களைத் திரள் திரளாக மக்கள் கூடியிருந்து கண்டனர் என்பதை, கூத்தாட்டவைக் குழாத் தற்றே பெருஞ் செல்வம்; போக்கு மது விளிந்தற்று', என்னும் அருமைத் திருக்குறளே செவ்விதிற் புலப்படுத்தும் பெரிய நகரங்களில் செல்வந்தர்கள் துறக்கத்தையொத்த, நீண்ட சுடர்த் தூண்களாற் கட்டப்பட்ட, தம் அழகிய மாளிகைகளின் மேல்மாடத்தின் நிலா முற்றத்திடத்தே தம் மகளிருடன் கூடியிருந்து, இன்னிசை முழக்கத்தினிடையே நாடகங்கள் நிகழச் செய்து, இன்பவாழ்வெய்தி இரவுப் பொழுதைப் போக்கினர் என்னும் செய்தி பட்டினப் பாலையிற் பதிவுறக் காணலாம்:

"பெறற்கருந் தொல்சீர்த் துறக்கம் ஏய்க்கும்"

∴ ∴ ∴

நெடுங்கான் மாடத் தொள்ளெரி நோக்கி,

∴ ∴ ∴

பாட லோர்த்தும் நாடகம் நயந்தும்
வெண்ணிலவின பயன்துய்த்தும்
கண்ணடைஇய கடைக்கங்குலான்"

இவ்வளவு சிறப்புற நாடகக்கலை வளர்ந்தோங்குவதற்கு உதவியாய்க் கூத்தியல் நூல்கள் எண்ணிறந்தன. முற்காலத்திலிருந்து, இந்நாள் இறந்துபட்டனவெனபது தெரிகிறது. இந்திர காளியம், கூத்தநூல், சயந்தம், செயிற்றியம், பஞ்ச

பாரதீயம். பரதசேனுபதீயம், பரதம், மதிவாணர் நாடகத் தமிழ் நூல், குணநூல். சுந்தாநந்தப் பிரகாசம் என்பன இசை நாடகப் பகுதிகளை விளக்கும் சில நூல்களாகும் இவை நாடக இலக்கணம் இயம்பும் நூல்களாயினும், இவற்றிற்கு இலக்கியமாகவும் பல நூல்கள் இருந்துள்ளன. முத்தமிழ் நுவலும் சித்திர நூலாம் சிலப்பதிகாரம் நாடக வுறுப்புக்களைத் தன்னகத்தே கொண்டுள்ள தால் நாடகக் காவியம் என்று வழங்கப்படும்.

கூத்தாவது: வசைக்கூத்து, புகழ்க்கூத்து, வேத்தியல், பொது வியல், வரிக்கூத்து, வரிச்சாந்திக்கூத்து, சாந்திக்கூத்து, விநோதக் கூத்து, ஆரியக்கூத்து, தமிழ்க்கூத்து. இயல்புக்கூத்து தேசிக்கூத்து எனப் பலவகைப்படும். இவற்றுள் கதை தழுவி வரும் கூத்து நாடகம் எனப்படும். கதை தழுவாது பாட்டினது பொருளுக்குக் கைக்காட்டி வல்லபஞ் செய்யும் பலவகைக் கூத்துக்களை அவிநயக் கூத்து என்று வழங்கினர். சுத்த நிருத்தமாய் நூற்றெட்டுக் கரணங்கள் மட்டுமுடைய கூத்து சொக்கம் எனப்படும். வசைக் கூத்து என்பது நகைத்திறச் சுவையுடைய விதூடக் கூத்து, ''பல்வகை யுருவமும் பழித்துக் காட்ட வல்லவனுநதல்.வசையெனப் படுமே'' என்பது சூத்திரம்.

நாடகக் கலைக்கு உயிர் நாடியாகவுள்ள உறுப்பு அவிநய மாகும். அவிநயமாவது, ஒன்பான் சுவையான அகத்து நிகழ் உணர்ச்சிகளைப் பத்து வகைச் சத்துவங்களாகிய உடல் நிகழ்ச்சி களாகிய புறத்தொழில்களால், வெண்பளிங்கு மணிகளில் ஊடுருவிச் செல்லும் செந்நிற நூலானது புறத்தே காணப்படுதல் போல வெளிப்படுத்திப் பிறர்க்குப் புலப்படும் வகைப் பாவகம் செய்தல். பத்து வகைச் சத்துவங்களாவன; மெய்ம்மயிர்ச் சிலிர்த்தல், கண்ணீர் வார்தல், நடுக்கமெடுத்தல், வியர்த்தல். தோற்றம், களித்தல், விழித்தல், வெதும்பல், சாக்காடு,குரற்சிதைவு என இவை. இவற்றை உடலின் கண்ணே வேண்டியவாறு நிகழச் செய்வது ஓர் அரிய ஆற்றலாகும். அஃது எவ்விதமெனில் வேம் பென்று கூறுகின்றவன் அவ்வேம்பின் இரதங் காட்டாதே. அதன் சுவையால் மெய்யின்கண் நிகழும் மாற்றங்களைக் காட்டி அதன் மூலம் வேம்பைக் கூறி முடிப்பது. இன்னும் கருணை யென்ருல் பாவித்துக் காட்டுவநன்றி மெய்யாகக்

கண்ணீர் வந்தழுவது. இவ்வாறு அகத்தூறும் சுவைகளைச் சத்துவங்களால் உடம்பின் புறத்தோட்டிக் காண்பது அவிநயம். இவை உடம்பினும் மிகுதியாக முகத்திலும், முகத்தினும் மிகுதியாகக் கண்ணிலும், கண்ணினும் மிகுதியாகக் கண்ணின் கடையகத்தும் தோற்றி நிற்கும். மேலும், இக்குறிப்பின்கண் நிகழ்கின்ற நிகழ்ச்சியாகிய சத்துவம் அல்லது விறல் என்பதை வெகுளி, ஐயம், சோம்பல், களிப்பு, உவகை, அழுக்காறு, இன்பம், தெய்வமேறுதல், ஞஞ்ஞை, உடன்படல், உறக்கம், துயிலுணர்தல் சாக்காடு, மழையால் நனைதல், பனித்தலைப்படுதல், வெயிற்றலைப் படுதல், நாணம், வருத்தம், கண்ணோவு, தலைநோவு, அழற்றிறம் படுதல், சீதமுறுதல், வெப்பமுறுதல் என இருபத்துநான்கு வகையாக, இன்னின்னவாறு அவிநயத்துக் காட்டவேண்டும் என்று அதற்கு விதிகளையும் கூட்டித் தெளிவுற அமைத்திருந்தனர்.

பல வகை நாடகங்களையும் நடனங்களையும் நடித்துக் காட்டுவதற்கென ஒரு தனிக் கூட்டத்தார் அக்காலத் திருந்தனர். அவர்கள் கூத்தர் எனப்படுவர். அவர்களில் பெண்பாலார் கூத்தியர் எனப்படுவர். அவர்கள் நடிப்பதையே தொழிலாகக் கொண்டு, அரசவை முதல், சிற்றூர் அம்பலங்கள் வரை, பலவிடங்களுக்குச் சென்று மக்களை மகிழ்வித்துப் பரிசில்கள் பெற்று வாழ்ந்து வந்தனர். ஆனால் ஆடல் வகைகளிற் பல, பொது மக்கள் எல்லாராலும் பயிலப்பட்டு வந்தன. துணங்கை, குரவை, வெறியாடல் முதலிய பல ஆடல்கள், ஆண்களும் பெண்களும் மகிழ்ந்து கைகோத்து ஆடும் விழாச் சிறப்பு வாய்ந்தன. போருக்குச் செல்லும் பொழுதும், வெற்றி கொண்டு மீளும் பொழுதும், அரசனுடைய தேருக்கு முன்னும் பின்னுமாக வீரர்களும் விறலிமார்களும் துணங்கையாடுக்கொண்டு செல்வார்கள். அரசர்களும் இவ்வாட்டங்களிற் கலந்து கொள்வதுண்டு. ஒரு சேரவரசன் இவ்விதம் ஆடுவதில் வல்லவனுயிருந்தால், ஆடு கோட்பாட்டுச் சேரலாதன் என்று வழங்கப்பட்டான். கோவில் விழாக்களிலும் நாடகங்கள் பயின்று வந்தன.

பொய்யை மெய்போல நடித்துக் காட்டுவது நாடகம், முன் நிகழ்ந்த, அல்லது நிகழ்ந்ததாகக் கூறப்பட்ட நிகழ்ச்சி

அல்லது சரித்திரம் ஒன்றைக் கண்ணெதிரே இப்பொழுது நிகழ்வது போல நடித்துக் காட்டுவது ஒரு சிலருக்கே கைவந்த ஒரு சிறந்த திறனாகும். இதற்கு உலக அனுபவமும், இயற்கையை நுனித்தறியும் கூறிய மதிநுட்பமும் சிறந்து அமையப் பெறுதல் வேண்டும். இதைப் பண்டைத் தமிழர் நன்கு கண்டு இதற்குரிய விதிகளையும் தெளிவுற வகுத்தனர்.

## வினாக்கள்

1. பெரிய நகரங்களில் செல்வந்தர் இராப்பொழுதைப் போக்கின செயல் பட்டினப்பாலையில் கூறப்படுவது எங்ஙனம்?

2. கூத்து எத்தனை வகைப்படும்?

3. அவிநயமாவது யாது?

4. கூத்தர் என்போர் யாவர்?

## பயிற்சி

குறிப்பு வரைக:— விறலியர், துணங்கை, சயந்தம்.

# 10. கற்காலத் தமிழர்

டாக்டர் மு. ஆரோக்கியசாமி, எம். ஏ., பி. எச்டி.,

[இவர் சென்னைப் பல்கலைக்கழக வரலாற்றுத் துறைத்தலைவர்; சிறந்த ஆராய்ச்சியாளர்; தமிழ் வளம் வாய்க்கப் பெற்றவர்; நூல் பலவற்றின் ஆசிரியர்]

மனித வாழ்க்கைக்கு வரலாறு மிக இன்றியமையாத தொன்று என்பது இப்போது யாவராலும் ஒப்புக்கொள்ளப்படும் உண்மை. பழமையிலிருந்தே புதுமை பிறக்கின்றது. பழமையை அறிந்தால் மட்டுமே புது வாழ்வை நாம் செப்பனிடக் கூடும். இது காரணம் பற்றியே வரலாறு இப்போது எங்கும் போற்றப்படுகிறது; எழுதப் படுகிறது. இதற்கு ஆராய்ச்சி இனறியமையாதது. மனிதன் ஆராய்ச்சியில் ஈடுபட்டால். அது அவனைச் சில சமயங்களில் நெடுந்தூரம் கொண்டு செல்லக்கூடியது. இந்த நிலையிலே அவன் தன் பழங்கால வரலாற்றை ஆராய்கிருன், இவ்வாராய்சிக் காலம், வரலாற்றுக்காலம் என்று சொல்லப்படும். இந்த வரலாற்றுக் காலத்திற்கும் மூற்பட்ட காலத்திற்கும் ஆராய்ச்சி மனிதனைக் கொண்டு செல்கின்றது. இவ்விதமே மூன்று இன்றி யமையாத காலப் பாகுபாடுகள் வரலாற்றிற்கு முற்பட்ட காலத் தைப் பற்றிச் செய்யப்பட்டுள்ளன. இவற்றிற்கு முறையே பழங்கற் காலம், கற்காலம், புதுக்கற்காலம் என்று பெயர் சூட்டப் பட்டுள்ளன.

கற்காலத் தமிழரின் வரலாறு என்ன என்பதைப் பற்றி ஆராய்வதே இக்கட்டுரையின் நோக்கம். முதலில் கற்காலம் என்ற பெயர் எப்படி எழுந்தது என்று பார்ப்போம். வரலாற்றிற்குரிய ஏதுக்கள் ஒரு நாட்டின் வரலாற்றின் ஒரு பகுதிக்கே உள்ளன. ஒவ்வொரு நாடும் அங்குக் கிடைத்துள்ள ஏதுக்களின்படி அதன் பழங்கால வரலாற்றை வகுத்துள்ளது. ஆகவே, ஒவ்வொரு நாட்டின் வரலாறும் வெவ்வேறு காலத்திலிருந்து தொடங்குகிறது. உதாரணமாகக் கிரேக்கர் வரலாறு சுமார் கி. மு. 1000 ஆண்டி லிருந்தும், உரோமானியர் வரலாறு கி. மு. 700 ஆண்டி லிருந்தும், ஆங்கிலேயர் வரலாறு கி. மு. 55 ஆண்டி

லிருந்தும். பாபிலோனியர், எகிப்தியர். பினீஷியர் என்ற இவர்கள் வரலாறு சுமார் கி. மு. 300 ஆண்டிலிருந்தும் தொடங்குகின்றன. இக்கால ஆராய்ச்சியாளர்கள் இந்நாடுகளின் வரலாற்றைப் பூமியினின்றும் கண்டெடுக்கப்படும் பழங்கால ஆயுதங்கள், அணிகலன்கள் முதலியவற்றைக் கொண்டு இங்குக் குறித்த் கால எல்லைக்கும் முன்னே கொண்டு சென்றிருக்கிறார்கள். இப்பழங்காலத்து ஆயுதங்களெல்லாம் பெரும்பாலும் கல்லால் செய்யப்பட்டவை. ஆனால், இவை காலத்திற்கேற்பச் சுரசுரப்பாகவும், வழுவழுப்பாகவும் அமைந்திருக்கின்றன. இவைகளைக் கொண்டு மக்களின் நாகரிகப் போக்கு ஒருவாறு கணிக்கப்படும் இவ்விதமே வரலாற்றிற்கும் அப்பாற்பட்ட இக்காலத்தை ஆராய்ச்சியாளர்கள் மூன்று பாகமாகப் பிரித்தார்கள். இவைதாம் முறையே பழைய கற்காலம், கற்காலம், புதிய கற்காலம், என்று அமைந்தன. இவற்றுள் ஒவ்வொன்றின் காலத்தையும் முறையே கி. மு. 35000 ஆண்டுகளுக்கு முற்பட்டது. கி. மு. 3500 ஆண்டுக்கு முன் தொடங்கி, கி. மு. 10,000 ஆண்டுவரை நீடித்தது, கி. மு. 10,000-ல் தொடங்கி, கி. மு. 5000 வரை நீடித்தது என்று வரலாற்று வல்லுநர் கணித்துள்ளனர்.

இவ்விதம் எழுந்த கற்காலத்தில் தமிழரின் நிலை என்ன? சிந்து சமவெளி நாகரிகம் உண்மையானால், கற்காலத்தில் தமிழர் எப்படி வாழ்ந்திருந்தார்கள் என்று நாம் ஒருவிதமாகக் கணிக்கலாம். இந்தச் சமவெளியில் தோண்டி எடுக்கப்பட்ட உயர்ந்த மாடி வீடுகளும், அகன்ற கால்வாய்களும், சிறந்த அணிகலன்களும் கி. மு. 3000 ஆண்டுகட்கும் முற்பட்டவை என்பது சர் ஜான் மார்ஷல், டால்பாய்ஸ்வீலர், ஹெரால் பாதிரியார் முதலிய அறிஞர் கருத்தாகும். இந்த நாகரிகம் படைத்திருந்தவர்கள் நம் தமிழரே என்பதும் ஒருவாறு உணரப்படும்.

இதற்குச் சான்றாகத்தான் நாம் முதலில் கற்கால இந்தியர் யாவர் என்பதைப் பற்றிச் சிந்திக்க வேண்டும். இப்போது தென்னிந்தியாவில் வாழும் திராவிடர்கள் முன்னொரு காலத்தில் இந்தியா முழுவதுமே பரவியிருந்தார்கள் என்பது ஆரியர் இந்தியாவினுள் நுழைந்தபோது

அங்கே வாழ்ந்தவர்களைத் தென்னாட்டிற்குத் துரத்தினார்கள் என்ற வரலாற்றிலிருந்து நமக்குத் தெரிய வருகிறது. பொதுவாகக் கூறுமிடத்து. இப்போது இந்தியாவில் வாழும் மக்கள் ஒன்று ஆரியர் வழி வந்தவர்கள், அல்லது திராவிடர் வழி வந்தவர்கள், ஆகையால், ஆரியரால் துரத்தப் பட்டவர்கள் திராவிடரே என்பது பொருந்தும்.

திராவிடர் இந்தியாவின் பழங்குடி மக்கள் என்பது இதனால் பெறப்படுகிறது. திரா விடர் தோற்றத்தைப் பற்றிப் பலர் பலவாறு கூறுகின்றார்கள். சர் ரிச்சர்டு ஹால் என்ற அறிஞர், இவர்கள் மத்திய கீழ்ப்பாகத்தைச் சேர்ந்தவர்கள் என்றும்; எட்கார் தர்ஸ்டன் போன்றவர்கள், இவர்கள் ஆப்பிரிக்க வகுப்பினைச் சேர்ந்தவர்களென்றும்; இன்னும் சிலர், இவர்கள் மத்தியதரைக் கடல் பிரதேசத்தைச் சேர்ந்தவர்களென்றும் கருதுகின்றார்கள். இக்கொள்கைகள் யாவும் ஒன்றற்கொன்று முரண்பாடுடையவையல்ல என்பது என்னுடைய கருத்து. பழந்திராவிடன் ஒரு காலத்தில் ஆப்பிரிக்காவில வாழ்ந்திருக்கலாம்; பிறகு மத்திய தரைக்கடல் ஓரமாயும் வாழ்ந்திருக்கலாம். கடைசியில் மத்திய கிழக்குப் பிரதேசம் வழியாகச் சுமேரியா, பாரசீகம் வழியாக இந்தியாவினுள் நுழைந்திருக்கலாம், ஆகவே; தி,ாவிடரிடம் மத்திய தரைக்கடல் பிரதேசப் பழக்கங்கள் இருப்பதிலும். சுமேரியாப் பிரதேசத்தில் தமிழ் போன்றதொரு மொழி வழக்கத்தில் இருப்பதற்கும் கற்கால மனிதர் ஆப்பிரிக்கச் சாதியரை ஒத்தவர்கள் என்று சிலர் சொல்லுவதற்கும் எவ்வித முரண்பாடும் இருப்பதாகத் தெரியவில்லை. திராவிடர் இந்தியாவின் பழங்குடி அல்லது முதற்குடி மக்கள் என்பதிலும் எவ்வித வேறுபாடும் இல்லை.

திராவிடர் முதலில் பல நாடுகளில் வாழ்ந்தனர் என்பதற்கும், பழங்காலத்திலேயே இந்தியாவை அவர்கள் சொந்த நாடாகக் கொண்டார்கள் என்பதற்கும் என்ன முரண்பாடு இருக்க முடியும்? ஆங்கிலேயர்கள் 16-ஆம் நூற்றாண்டில் பலநாடுகளைத் தேடிச் சென்ற காரணத்தால், அவர்கள் ஆங்கில நாட்டைத் தங்கள் சொந்த நாடாகக் கொள்ளவில்லையா? அல்லது போர்துகீசியர் இக்காரணத்

தால் போர்த்துகல் நாட்டைத் தங்கள் நாடாகக் கொள்ளவில்லையா? இக்காலத்தைவிட முற்காலத்தில் மனிதன் நாடுவிட்டு நாடு திரியும் பழக்த்தை இயல்பிலேயே கொண்டிருந்தான் என்பதை நாம் இங்கு நினைவு படுத்திக்கொள்ள வேண்டும்.

திராவிடர் என்பவர் தமிழர். இவர்களே இந்தியாவின் கற்கால மனிதர்கள் என்பதில் எவ்வித ஐயப்பாடுமில்லை. இதற்குச் சான்ருகவே கற்காலச் சான்றுகள், சினனங்கள் தென்னுட்டிலேயே மிகுதியாகக் கிடைக்கின்றன. இவர்கள் மொழி எங்ஙனம் தோன்றிய போதிலும் சரி, அது வட மொழிக்கும் முந்தியது. இதற்குச் சான்று, இவ்விரு மொழிகளின் இலக்கணமேயாகும். முதல் தமிழ் இலக்கணம் குறைந்தது கி. மு. 600-ஆம் ஆண்டில் செய்யப்பட்டதென்பதும், முதல் வடமொழி இலக்கணம் கி மு 400-ல் தோன்றியதென்பதும் ஆராய்ச்சியாளரின் எண்ணமாகும்.

இது மட்டுமன்று சிந்து சமவெளிப் பிரதேசத்தில் கண்டெடுக்கப்பட்ட பொருள்கள் தமிழர் சின்னங்களாகவே காணப்படுகின்றன. ஆராய்ச்சியாளர்கள் இவற்றிற்கு என்ன பெயர் கொடுத்துக் கொண்டாலும் சரி; ஒரு சிலர் சொல்வது போல இங்கே காணபபடும் கற்குறிப்புகள் அல்லது சாசனங்கள் மனிதனல் கண்டுபிடிக்கப்படாதவை என்று சொன்னலும் சரி; இங்குக் காணப்படும் சான்றுகள் முற்றிலும் திராவிட நாகரிகத்திற் குரியவையேயாகும். இவற்றை முறையே ஆராய்வோம்.

இந்தச் சமவெளியில் காணப்படும் சமயத் தொடர்பான உருவங்களை முதலில் எடுத்துக் கொள்வோம். மூன்று முகங்கள் கொண்ட உருவம் பக்கத்தில் அமைந்த எருதோடு பல இடங்களில் காணப்படுகிறது. இது இக்காலத்தில் தென்னிந்தியாவில் காணப்படுகிறது. இது இக்காலத்தில் தென்னிந்தியாவில் காணப்படும் திருமூர்த்தியைப் போன்றும் பசுபதீசுவர உருவத்தைப் போன்றும் இருக்கிறது. இதற்குச் சொல்லக்கூடிய உருவம் வேறே எதுவுமில்லை இதைவிடக் கூத்தப்பெருமான் போல அமைந்த உருவங்களை நாம் இங்குக் காண்கிருேம். இது தென்னிந்தியக் கலையைத் தவிர வேறு எதனை உணர்த்த முடியும்? இவை மட்டுமல்ல;

சிவலிங்கங்கள் பல இங்கே காண்கிறோம் இவை யாவும் திராவிட நாகரிகத்தையே உணர்த்துவனவாகும்.

இந்தச் சமவெளி நாகரிகத்தில் மற்றோர் உருவம் தென்படுகிறது, அதுதான் மீன் உருவம். தென்னாட்டைத் தவிர வேறே எங்கும் இந்த மீன் உருவம் போற்றப்பட்டதாகத் தெரியவில்லை. தென்னாட்டிலோ, 'பழங்கால மன்னன், என்ற பொருள்பட அமைந்த பாண்டியன் இதைத் தன் அரசியல் குறியாகப் பழங்காலந் தொட்டே கொண்டிருந்தான் என்பது நமக்குத் தெரியும். இதுவும் சிந்து சமவெளி நாகரிகம் தமிழருடையது என்பதைக் காட்டுவதாகும்.

இனி, 'இந்தச் சமவெளியில் வழங்கிய மொழிதான் என்ன?' என்று கேட்டால், அதைப்பற்றி நாம் திட்டமாக இப்போது கூற இயலாது. எனினும், இங்கே கற்களில் செதுக்கியும், பட வடிவங்களாக எழுதியும் உள்ள சாசனங்களைப் படித்த ஹெராஸ் பாதிரியார் என்ற ஆராய்ச்சியாளர். இவற்றில் பல தமிழ்ச் சொற்களாகவே திகழ்கின்றன என்கிறார். உதாரணமாக, வேல், வேளாளன், நாய், ஊர் என்ற தனித் தமிழ்ச் சொற்கள் இங்கே பயிலப்பட்டு வந்துள்ளன என்று இந்தச் சீரிய ஆராய்ச்சியாளர் சொல்லுவது நம் கொள்கையைப் பெரிதும் உறுதிப் படுத்துவதாகும்.

சிந்து சமவெளியில் திகழ்ந்தது சுமேரிய நாகரிகம் என்பர் ஒரு சாரார்; 'அன்று: இது மத்திய தரைக்கடல் நாகரிகம்; என்பர் மற்றொரு சாரார். ஆனால்; உண்மையாகவே இது திராவிட நாகரிகம். இன்னும் சொல்ல வேண்டுமானால், இதுவே பழந்தமிழ் நாகரிகம். பழந்தமிழன் நாம் முன்னே கூறியபடி ஆப்பிரிக்கா, மத்தியதரைக்கடல் பிரதேசம், சுமேரியா முதலிய பூ பாகங்களை யெல்லாம் சுற்றினவன்; பிற்காலத்தில் இந்த நாடுகளோடு வாணிகத் தொடர்பு பூண்டவன். ஆகவே. இவனுடைய பழைய நாகரிகத்தில் சுமேரியாவின் மணமும் மத்தியதரைக்கடல் பிரதேச மணமும் கமழ்வதில் எவ்வித வியப்பும் இருக்க இடமில்லை. இன்னும் வரலாற்றுக் காலத்தில் கி. பி. முதல் நூற்றாண்டிலிருந்து நாம் திண்ணமாய்க் காணக்கூடிய தமிழ்

நாகரிகம் இத்தகைய பெருநாகரிகத்தின் வளர்ச்சி என்று எண்ணும் போதுதான் தமிழன் எப்படிக் கி பி. முதல் நூற்றாண்டிலேயே மிகுந்த செல்வாக்குடன் வாழ்ந்தான் என்பதற்குப் போதிய சான்று கிடைக்கின்றது

ஆகவே, கற்காலத் தமிழர் மற்றைய நாடுகளில் கற்கால மனிதர் வாழ்ந்தது போலக் காட்டுமிராண்டிகளாய் வாழவில்லை என்பது தோற்றம் கற்காலம் ஏறக்குறைய கி. மு. 5000 ஆண்டு வரை நீடித்திருந்ததாகச் சொல்லுகிறார்கள். சிந்து சமவெளியில் கி. மு. 3000-ல் மிகுந்த செல்வாக்குடன் ஒரு வகுப்பினர் வாழ்ந் தார்கள் என்றால், அவர்கள் கி மு 5000-ல் காட்டுமிராண்டிகளாய் வாழ்ந்திருக்க முடியாது. இந்தப் புதுக் கற்காலத்தைப் பற்றி நமக்குக் கிடைக்கும் சான்றுகளைப் பார்த்தாலும் அக்காலத்திலேயே உழவு, பருத்தியை நூற்றல், ஆடுமாடு வளர்த்தல் என்ற இவையே அன்றிச் சட்டி செய்தல் முதலிய நுண் கலைகளும் மக்கள் பயின்று வந்தார்கள் என்பது தெரிகிறது. அவர்கள் மக்களை மக்களாக மதித்தார்கள் என்பதற்குச் சான்று அவர்கள் தம்மில் இறந்தோரை அடக்கம் செய்த முறையிலேயே இருக்கின்றது 'கடவுள் ஒருவர் உண்டு அவர் தாம் நம்மைப் படைத்தவர், அவர் நம்மை ஆளுகிறார்.' என்ற உயரிய எண்ணங்களெல்லாம் அவர்கள் மனதில் அக்காலத்திலேயே இருந்து வந்தன என்பதை எண்ணும் போது நம் மூதாதையர் கற்காலத்திலேயே மிகச் சிறந்து விளங்கி னர் என்பது நமக்குப் பெருமிதத்தை விளைப்பதாகும்! கி மு. 4000ல் தமிழர் கால்டேய மன்னரோடும் கி. பி. 1000ல் ஹீப்ரு மன்னன் சாலமோனோடும் துணியிலும், மயிலிலும், அகிலிலும் வாணிகத் தொடர்பு கொண்டிருந்தனர் என்னும் அறிஞர்கள் கூற்றுக்கள் இத்தகைய பின்னணியிலேயே நமக்கு விளங்கு கின்றன.

## அருஞ்சொற்பொருள்

கணித்துள்ளனர் — கணக்கிட்டுள்ளனர், முரண்பாடு — மாறு பாடு, ஐயப்பாடு — சந்தேகம். கற்தறிப்பு — கல் வெட்டு, கூத்தப் பெருமாள் — நடராசப் பெருமாள், பெருமிதம் — உள்ளக் களிப்பு அகில் — ஒரு வாசனை மரம்.

## வினுக்கள்

1. கற்காலம் என்ற பெயர் எப்படி எழுந்தது?

2. திராவிடர் இந்தியாவின் பழங்குடி மக்கள் என்பது எதனுல் பெறப்படுகின்றது?

3. திராவிடர் தோற்றத்தைப்பற்றி யார் யார் என்னென்ன கூறுகின்றனர்? ஆசிரியர் கருத்தென்ன?

4. திராவிடர் என்பவர் யார்? எதனுல்?

5. சிந்துசமவெளி நாகரிகம் தமிழருடையது என்பதற்குச் சான்று தருக.

6. தமிழன் கி. பி. முதல் நூற்றுண்டிலேயே செல்வாக்குடன் வாழ்ந்தான் என்பதற்குச் சான்று யாது?

7. கற்காலத் தமிழர்கள் காட்டுமிராண்டிகளாய் வாழாது நாகரிகம் பெற்று வாழ்ந்தார்கள் என்பதற்குச் சான்றுகள் யாவை?

## பயிற்சி

1. குறிப்பு எழுதுக:— சாலமோன், ஹெராஸ் பாதிரியார், சர் ரிச்சர்டு ஹால், எட்கார் தர்ஸ்டன்.

2. வாக்கியங்களில் அமைக்க:— முரண்பாடு, பெருமிதம், பழங்காலந் தொட்டு, இன்றியமையாத, தோண்டி எடுக்கப்பட்ட, இக்காலத்தைவிட, சான்றுகள், வழுவழுப்பு.

3. பிரித்து எழுதுக,— கற்காலம், காலப்பாகுபாடுகள், துண்கலிகள், பசுபதீசுவரர், இக்காரணம், ஒன்றற்கொண்டு, நாகரிப்போக்கு.

4. கற்காலத் தமிழர் நாகரிகம் என்பது பற்றி 20 வரிகளில் ஒரு கட்டுரை எழுதுக.

# 11. நீர் வளத் திட்டங்கள்

திரு. எம், பக்தவத்சலம், பி. ஏ., பி. எல்.,

[சென்னை அரசாங்க அமைச்சர்]

"தள்ளா விளையுளும் தக்காரும் தாழ்விலாச்
செல்வரும் சேர்வது நாடு"

என்பது திருவள்ளுவரின் நாட்டு வருணனை. தப்பாமல் விளையும் நிலங்களும், பெரியோர்களும், கேடு எதுவும் இல்லாத செல்வர்களும், ஒரு நாட்டில் இன்றியமையாதது இருக்க வேண்டும் என்று குறளாசிரியர் கூறுகிறார். அவருடைய காலத்தில் தமிழ்நாட்டில் நீர்வளமும், நிலவளமும் குறைவில்லாமலிருந்தன. எனவே, நிலங்கள் தப்பாமல் விளைந்தன. ஆகையால் பயிர்த் தொழிலைக் கைக்கொண்ட மக்கள், ஒழுக்கத்திலும் செல்வத்திலும் பெரியோர்களாய் விளங்கினார்கள். தப்பாமல் நிலங்கள் விளைந்தன என்றால், கால மழை தவறினாலும், விளைவு தவறவில்லை என்று பொருள் கொள்ளவேண்டும்.

இக்காலத்தைப் போல முக்காலத்திலும் பருவ மழை தவறுவதுண்டு. ஆனால், மழை பெய்யாவிட்டாலும் நிலம் விளைய நம் முன்னோர்கள் ஏற்பாடு செய்திருக்க வேண்டும். ஆகையாலேதான் நிலமும் குறைவில்லாமல் கொடுத்தது; 'பொன் விளையும் நாடு' என்று பாராட்டப்பெற்றது. உண்மையில் பொன்னும் விளைந்தது. ஆனால், ஒரு நாட்டில் பொன் மட்டும் விளைதல் போதாது. உணவுப் பொருள் போதிய அளவு விளையாவிட்டால், பொன் வைத்திருந்தாலும் பட்டினி கிடந்து சாகத்தான் வேண்டும் என்ற உண்மையை இந்தக் காலத்தில் நன்கு தெரிந்து கொண்டிருக்கிறோமல்லவா? நாட்டு மக்களுக்கு வேண்டிய உணவுப் பொருளை நம் முன்னோர்கள் பயிரிட்டு உண்டாக்கி, பட்டினி தெரியாமல் உண்டு நல்வாழ்க்கை நடத்தினார்கள். எனவே, பழைய புலவர்களெல்லாம் நம் நாட்டை 'நீர்வளமும் நில வளமும் மிகுந்த செந்தமிழ் நாடு' என்று போற்றினார்கள். நிலம் நமக்கு வேண்டியதைக் கொடுக்க நிலத்தில் செழிப்பும் பாசன வசதியும் வேண்டும். மழை பெய்யாத காலத்திலும்

நீர் வசதி குன்றுமல் இருக்க வேண்டும். நீரையும் நிலத்தையும் ஒன்று சேர்த்து, நம் உடலைப் பாதுகாக்கும் உணவுப் பொருளை உண்டாக்குவது மிகச் சிறந்த பணி என்று திருமூலர் போற்றுகிருர். இதன் சிறப்பை இன்று நாம் உணர்கிறோம். ஆனுல், நம் முன்னோர்கள் அந்த நாளிலேயே உணர்ந்து, காவிரியில் கல்லணை கட்டினார்கள். அதன் அமைப்பு, இக்காலப் பொறி இயல் வல்லுநர்களைத் துணுக்குற வைக்கிறது.

இன்று நமது நாட்டில் மக்கள் தொகை பெருகியிருக்கிறது. ஆனுல் அதற்குத் தக்கவாறு உணவுப் பெருக்கம் பெருகவில்லை. நம் இராச்சியத்தில் இப்போதைய அரிசி விளைவு நம் தேவைக்கு 25 இலட்சம் டன் குறைவாய் இருக்கிறது. நம் மக்கள் தொகையோ. பத்தாண்டில் 50 இலட்சம் உயருகிறது. எனவே, உணவு உற்பத்தி நம் தேவைக்கு குறைவாகவே இருந்து வருகிறது என்பது புலனுகும். இந்தப் பற்றுக் குறையை நாம் விரைவில் நிறைவேற்ற வேண்டும். இப்பொழுதுள்ள நம் நிலவளம் போதாது. வேண்டிய உணவுப் பொருளையும் நம் நிலம் அளிப்பதில்லை; உழுது பயிரிடுவோரின் பொருளாதார நிலைமையும் சீர்திருந்தவில்லை. ஜப்பான், இத்தாலி போன்ற நாடுகளில் விளைவதில் மூன்றிலொரு பங்குதான் நம் நாட்டு நிலம் கொடுக்கிறது. போதிய ஆராய்ச்சி அறிவையும் அனுபவத்தையும் வசதிகளையும் பரப்பி விளைவைப் பெருக்குவதில் நாம் கவனம் செலுத்த வேண்டும். தவிர, தரிசாயிருக்கும் நிலங்களில் புதியவாக 40 அல்லது 50 இலட்சம் ஏக்கர் நிலங்கள் சாகுபடிக்குக் கொண்டு வரவும் நாம் ஏற்பாடு செய்ய வேண்டும். இதற்கு இப்பொழுதுள்ள நீர் வளத்தை நாம் அதிகரிக்க வேண்டுவது மிகவும் இன்றியமையாததாய் இருக்கின்றது.

தென்னுட்டின் உயிர் ஆறுகளில் கோதாவரியும் கிருஷ்ணுவுமே மிகுதியாய்ப் பயன்படுத்தப் படாமலிருக்கின்றன. கோதாவரி; கிருஷ்ணு ஆறுகளில் ஓடுகிற தண்ணீரில் இதுவரையில் நூற்றில் பத்துப் பங்கைக்கூட நாம் பயன்படுத்தவில்லை. பத்திராசலத்திலுள்ள இராமபிரானின் பாதத்தை எட்டும் இராமபாத சாகரம் என்ற தேக்கம், கோதாவரி நதி மீது கட்ட உத்தேசிக்கப்படும்

ஒரு பெரிய அணையினுல் அமைக்கப்படும். இது உலகத்திலேயே இரண்டாவது பெரிய அணையாக இருக்கும். அடிப்படை 200 அடி வரையில் போகும். இத்தேக்கத்தினுல் ஆந்திர இராச்சியத்தில் 22 இலட்சம் ஏக்கர் நிலம் புதிதாகச் சாகுபடிக்குக் கொண்டு வரப்படும்.

கிருஷ்ணு நதியில் ஓர் அணை கட்டி, தேக்கப்படும் தண்ணீரைப் பெண்ணுற்றுக்குக் கொண்டு வந்து. அங்கு ஓர் அணை கட்டி' தண்ணீரை இன்னும் தெற்கே கொண்டு போய், கொள்ளிடத்தில் சேர்க்கும் கிருஷ்ணு – பெண்ணுற்றுத் திட்ட.மும் ஒரு பெரிய திட்டமாகும். இத்திட்டத்தினுல் கடப்பை, கர்நூல், சித்தூர், நெல்லூர், செங்கற்பட்டு, தென்னுற்காடு மாவட்டங்களுக்குப் பலன் ஏற்படும். மேலும், நீர்ப்பாசன வசதியில்லாத இடங்களுக்கு இத்திட்டம் தண்ணீர் கொண்டு வருவதுடன் மின்சார உற்பத்திக்கும் வசதியளிக்கும். இத்தகைய மின்சார சக்தியால், நீர்ப்பாசன வசதியில்லாத நிலங்களுக்குத் தண்ணீர் பாய்ச்சிப் பயிரிடலாம். 25 இலட்சம் ஏக்கர் நிலங்கள் இத்திட்டத்தினுல் புதியனவாகச் சாகுபடிக்குக் கொண்டு வரப்படும். இத்திட்டத்தையும் சர்க்கார் ஆராய்ந்து வருகிறது.

துங்கபத்திரா நதியையும் சமீப காலம் வரையில் யாரும் கவனிக்கவில்லை. இராயலசீமா மாவட்டங்கள் அடிக்கடி பஞ்சத்துக்கு உள்ளாகி வருவது எல்லோருக்கும் தெரிந்த செய்தி. இதைத் தடுப்பதற்காக இப்பொழுது மூன்று இலட்சம் ஏக்கர் புஞ்சையைச் சாகுபடிக்குக் கொண்டு வரக்கூடிய துங்கபத்திரா அணை வேலை உருவாகிவிட்டது. காவேரியின் கிளை நதியாகிய பவானியிலும் ஓர் அணை கட்டியாகி விட்டது. இதன் மூலம் கோபிசெட்டிபாளையம், ஈரோடு, பவானி, தாராபுரம் தாலுக்காக்களில் 2,07,000 ஏக்கர்கள் சாகுபடியாகின்றன. ஆனுல், இந்தத் திட்டங்களுக்கெல்லாம் மிகுந்த செலவாகியிருக்கிறது.

காவிரி நதியின் தண்ணீர் மிகுதியாகப் பயன்படுத்தப்பட்டு வருகிறது. எனினும், அதை இன்னும் மிகுதியாகப் பயன்படுத்திக் கொள்வதற்காக மேட்டூர்த் தேக்கத்திலிருந்து பவானி, திருச்செங்கோடு தாலூக்காக்களுக்கு 45,000 ஏக்கர் வரையில் புதிதாகத் தண்ணீர் கொடுக்க ஏற்பாடு

செய்யப்பட்டுள்ளது. அவ்வாறே பட்டுக்கோட்டைக்கும், லால்குடி, பெரம்பலூர்த் தாலூக்காக்களுக்கும் சுமார் 40,000 ஏக்கர் நிலம் வரையில் மிச்சமுள்ள காவிரி நீரைக் கொடுக்கத் திட்டங்கள் உருவாகி வருகின்றன. இவ்வாறே பெரியாற்றுப் பாசனத்தை விரிவுபடுத்தி, தண்ணீரைப்பாராத திருமங்கலம் தாலூகாவுக்கு ஓரளவு பாசன வசதி செய்து கொடுக்கச் சர்க்கார் முயற்சி செய்துள்ளது.

மலையாளத்தில் மழை ஏராளமாகப் பெய்கிறது. எனினும், நீர்வளமும் அங்கு மிகக் குறைவு என்றால், அது வியப்பாயிருக்கும். பெய்கிற மழை நீர் பெரும்பாலும் கடலிலே போய் விழுந்து விடுகிறது. மழை நின்ற பிறகு பயிருக்குத் தண்ணீர் கிடையாது. மலையாளத்தில் நீர்ப்பாசன வசதிகள் இதுவரையில் கவனிக்கப்பட வில்லை. எனவே, மக்கள் தொகையும் மழையும் மிகுந்த இந்த மாவட்டத்தில் அரிசி உற்பத்தி மிகக் குறைவு. இப்போது கேரள அரசாங்கத்தார் பல திட்டங்களை ஆராய்ச்சி செய்து வருகிறார்கள். மலம்புழாத் தேக்கம் பாலக்காட்டுக்கு அருகில் கட்டப்பட்டுள்ளது. இத்தேக்கத்தினால் 45,000 ஏக்கர் நிலம் புதிதாகச் சாகுபடி செய்யப் படுகின்றது.

இவ்வாறு பெண்ணாற்றின் மீதும் வேறு பல நதிகளின் மீதும் அணைகள் தோன்றி வருகின்றன. அவற்றுடன் ஒவ்வொரு மாவட்டத்திலும் குறுகிய கால நீர்ப்பாசனத் திட்டங்களின்படி சுமார் 62 இலட்சம் ஏக்கர் நிலத்தைச் சாகுபடிக்குக் கொண்டு வரலாம். இருபத்தேழு பெரிய திட்டங்கள் நிறைவேற்றப்பட்டு வருகின்றன. தவிர, சர்க்கார், ஏரிகள் நிறைந்த இடங்களில் அவைகளைச் சீர்படுத்தியும் வருகிறது. தண்ணீர்ப் பாங்குள்ள இடங்களில் புதிய கிணறுகள் வெட்டுவதற்கு விவசாயிகளுக்கு உதவி செய்யும் ஒரு திட்டம் நடத்தப்பட்டு வருகிறது. ஒரே காலத்தில பஞ்சத்தையும் பசிப் பிணியையும் போக்க இந்த நீர்ப் பாசனத் திட்டங்களே நமக்குப் பயன்படும்.

மேல் நாடுகளில் மழையில்லாத பகுதியைக்கூடச் செல்வங் கொழிக்கும் போக பூமியாகவும் நீர்வளமுள்ளதாகவும் எவ்வாறு செய்திருக்கிறார்கள் என்பதைப் பார்த்தால், பெரிதும் வியப்பாக இருக்கும். உதாரணமாக, அமெரிக்காவை எடுத்துக் கொள்வோம். அமெரிக்காவில்

மிஸிஸிப்பி நதியின் மேற்குப் பிராந்தியங்களில் மழை மிகுதியாய்ப் பெய்வதில்லை. எனவே, அங்குள்ள நதிகளை அமெரிக்கர்கள் நன்கு பயன்படுத்திக்கொண்டு நிலத்தை வளப்படுத்தி வருகிறார்கள். அங்குள்ள இன்றியமையாத மூன்று நதிகள் கொலம்பியா, கொலாராடோ, ஸேக்ரமேண்டோ என்பவை. இவைகளில் ஒன்று கூடக் காவிரியைவிடப் பெரிதன்று. எனினும், உலகத்தின் பெரிய அணைகளில் சில இந்த நதிகள் மீது கட்டப்பட்டிருக்கின்றன. இந்த அணைகள் விவசாயத்திற்கு நீர் அளிப்பதுடன், மின்சார உற்பத்திக்கும் உதவுகின்றன. உலகத்திலேயே மிகப் பெரிய அணை என்று பிரசித்தி பெற்ற கிராண்ட் கூலி டாம் கொலம்பியா நதியின் மீது கட்டப்பட்டிருக்கிறது. அது முக்கியமாக நீர்ப்பாசனத்துக்காகவே பயன்படுகிறது. அதில் உண்டாகிற மின்சக்தி, அந்தத் தேக்கத்திலுள்ள தண்ணீரை 400 அடிக்கு உயர்த்தி 20 இலட்சம் ஏக்கருக்கு பாய்ச்சுகிறது. காலிபோர்னியாப் பிராந்தியத்தில் ஒரு சமயம் குடிதண்ணீர் கூடக் கிடைப்பது அரிதாயிருந்தது. ஆனால், அமெரிக்கப் பொறியியல் வல்லுநர்கள் ஹூவர் நதியின் மீது உலகத்திலேயே மிக உயரமான போல்டர் டாம் என்ற அணையைக் கட்டிக் கடலில் விழும் தண்ணீர் பூராவையும் மடக்கி 300 மைலுக்குக் கீழே கொண்டு வந்து பாய்ச்ச வசதி செய்தார்கள். இதனால், 'கனியும் கிழங்கும் தானியங்களும் கணக்கின்றித் தரும்'' செழிப்பான நாடாகக் காலிபோர்னியா மாறிவிட்டது. இங்கு ஓடும் ஸேக்ரமேண்டோ என்ற ஒரு நதி நம் பெண்ணாற்றைவிடச் சிறியது. ஆனால், இச்சிறிய நதியின்மீது பல கோடி ரூபாய் செலவு செய்து ஷாஸ்தா என்ற பெரிய அணையைக் கட்டியிருக்கிறார்கள்.

இதுவரை எத்தனையோ அணைகள் கட்டியிருந்தும், அமெரிக்கர்கள் ஓர் ஏக்கர் நிலத்தையும் விடாது சாகுபடிக்குக் கொண்டுவர வேண்டி, இன்னும் பல அணைகளைக் கட்டிக்கொண்டு வருகிறார்கள். எனவே, பொருளாதார நிலைமையிலும் உணவுப் பெருக்கத்திலும் பிற்போக்கான நிலைமையிலுள்ள நாம், நீர்வளத்தையும் நிலவளத்தையும் பெருக்கப் பெரு முயற்சியில் ஈடுபட வேண்டியவர்களாயிருக்கிறோம். இயற்கை வசதிகள் நம் நாட்டில் நிரம்ப

இருக்கின்றன. அறிவும் ஆற்றலும் ஊக்கமுமுள்ள பொறியியலாளர்களும் நம்மிடையே இருக்கிறார்கள். பல நீர்ப்பாசனங்களை அமைக்கப் பணம் வேண்டும். பொருள் உள்ளவர்கள் குறைந்த வட்டிக்குச் சர்க்காருக்குக் கடன் கொடுக்க முன்வர வேண்டும். நம் தேவைக்குத் தக்கவாறு பொறியியலாளர்களும் வேண்டும். சிலர் அமெரிக்காவுக்குச் சென்று தங்கள் அறிவை வளர்த்துக் கொண்டு வருகிறார்கள். பிற நாட்டு வல்லுநர்களுடைய உதவியையும் நாம் பெறலாம். பெரிய அணைகள் கட்ட வேண்டிய இயந்திரங்களை நாமே செய்யவும் முற்பட வேண்டும். இத்துறைகளில் நாம் கவனம் செலுத்துவோமானால், நம் தேவைக்குத் தக்கவாறு நம் நாட்டின் நீர் வளத்தையும் நிலவளத்தையும் பெருக்கிக் கொண்டு பயன் அடையலாம்.

சென்னைச் சர்க்கார் பத்து ஆண்டு நீர்ப்பாசனத் திட்டம் வகுத்திருக்கின்றது. இதை நிறைவேற்றினால், நம் நாட்டை இனபத் தேன் வந்து பாயும் நாடாகவே மீண்டும் செய்து விடலாம். மக்கள் பசியின்றிக் குறைவற்ற வாழ்க்கை நடத்த ஏற்பாடு செய்வதே மக்கள சர்க்காரின் முதற் கடமை. பாரதியார் கனவு நிறைவேற நாம் ஏற்பாடு செய்வோமாக!

## அருஞ் சொற்பொருள்

கொழிக்கும்-செழிக்கும், தள்ளா-தப்பாத, தக்கார்-பெரியோர்.

## வினாக்கள்

1. குறளாசிரியர் ஒரு நாட்டில் அவசியம் இருக்க வேண்டுமெனக் கூறியவை எவை?

2. திருமூலர் என்ன சொல்லுகிறார்?

3. இராமபாதசாகரம் என்னும் தேக்கத்தைப் பற்றியும் அதன் பயனைப் பற்றியும் எழுதுக.

4. 'கிருஷ்ணா-பெண்ணாற்றுத் திட்டம்' என்பது என்ன?

5. நம் தேவைக்குத் தக்கவாறு நீர் வளத்தையும் நில வளத்தையும் பெருக்க நமக்கு வேண்டுபவை யாவை?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க:— நீர்வளமும் நிலவளமும், நல்வாழ்க்கை, பொறி இயல் வல்லுநர், மின்சார உற்பத்தி.

2. பிரித்து எழுதுக:— குறைவில்லாமல், பொறியியலாளர், செயற்படுவோமாக.

## 12. செத்தும் கொடுத்தான் சீதக்காதி

வித்துவான் க. நயினர் முகமது

[இவர் உடுமலைப்பேட்டைக் கழக உயர்நிலைப் பள்ளித் தலைமைத் தமிழாசிரியர்; நூல்கள் சில எழுதியுள்ளார்; சிறந்த பேச்சாளர்.]

'சந்தனப் பொதியச் செந்தமிழ் முனிவனும்
சவுந்திர பாண்டிய னெனுந்தமிழ் நாடனும்
சங்கப் புலவரும் தழைத்தினி திருக்கும்
மங்கலப் பாண்டிய வளநாடு'

வழி வழியாக அறனும், மறனும் ஆற்றலும் குன்றாத பாண்டிய மன்னர்களை அரசராகப்பெற்ற பெருஞ் சிறப்புடையது. பாண்டிய நாட்டில் கல்வியறிவு கேள்வியறிவுகளிற் சிறந்த புலவர் பெரு மக்களும் பெருங்கொடை வள்ளல்களும் சிறப்புற வாழ்ந்து வந்தார்கள். பாண்டிய மன்னர்களும் அவர்கள் கீழ்ச் சிற்றரசர் களாயும் போர் வீரர்களாயும் விளங்கிய சேதுபதிகளும் தமிழ்ப் பணி புரிவதில் தலை சிறந்து நின்று பொன்னையும் மணியையும் வாரி வழங்கிப் புலவர் பாடும் புகழுடையோராய் விளங்கினர்.

### பாண்டிய நாட்டின் சிறப்பு:

சேது வேந்தர் அனைவரும் பொன்னையும் மணியையும் பொழிந்ததன்றி, விளைபுலவூர்களையும் முற்றூட்டாக வழங்கின செய்தியை வரலாற்று நூல்கள் வழுத்தும். அழகிய சிற்றம்பலக் கவிராயர் என்பவர் இரகுநாத சேதுபதி மீது தளசிங்க மாலை என்னும் நூலைப் பாடி மிதிலைப்பட்டி என்னும் விளைபுலவூரை முற்றூட்டாகப் பெற்றனர். இவர் வழியினர் இன்னும் அவ்வூரை அனுபவித்து வருகின்ற செய்தி இந்நாடெல்லாம் அறிந்த தொன்று.

### பாண்டி நாட்டில் தமிழ் வளர்த்த முஸ்லீம்களும், புலவர்களும், வள்ளல்களும்:

இவர்களேயன்றி, அந்நாட்டில் சிறக்க வாழ்ந்திருந்த முஸ்லிம்களும் தமிழ்மொழி வளர்ச்சியில் பெரிதும் ஈடுபாடுடையரா யிருந்தனர். முஸ்லிம்களிற் பல்லோர் தமிழன்னைக்குப்

பல திருப்பணிகள் செய்துள்ளனர். சொன்னோக்கும், பொருணோக்கும், தொடை நோக்கும், நடை நோக்கும் ஒருங்கேயமையக் கவி பாடும் புலவர் பெருமானாகிய **உமறுப் புலவர்** முகம்மது நபியின் வரலாற்றைச் '**சீருப்புராணம்**' என்னும் நூலாகப் பாடியுள்ளார். இந்நூல் முஸ்லிம் மதத்தினரல்லாத பிற சமயத்தார்களும் விழைந்து கற்குமாறு, ஒன்பான் சுவையும் ஒருங்கு நிரம்பப் பெற்றது. இவர் வழியினராகிய மீலச வண்ணக் களஞ்சியப்புலவர் பல வண்ணங்கள் பாடித் தமிழன்னைக்கு அணி செய்தனர். இன்னும் சவ்வாதுப் புலவர், சேதுபதி வைசூரியான் வருந்திய காலை **இராஜராஜேஸ்வரி பஞ்சரத்நம்** என்னும் நூலைப்பாடி அவரை நல்லுடல் பெறச் செய்தார்; இந்நூலுக்குப் பரிசிலாகச் 'சுவாத்தன்' என்னும் விளைபுலவூரைப் பெற்றார். இவர் **முகையதீன் ஆண்டவர் பிள்ளைத்தமிழ்** என்னும் பாமாலையைத் தமிழ் அன்னைக்குச் சூட்டி மகிழ்ந்தார். புலவர்கள் இங்ஙனமாக, முஸ்லிம் வள்ளல்களும் சாதி, குலம் முதலியவற்றைக் கருதாது, தமிழ்பாடி வந்த அனைவர்க்கும் அள்ளி யள்ளிப் பொருளைக் கொடுத்துத் தமிழ் மொழியை வளர்த்தனர். அவர்களில் ஒருவரே ஈண்டு ஆராய எடுத்துக்கொண்ட சீதக்காதி என்னும் வள்ளலாவார்.

### சீதக்காதி என்னும் பெயர்க்காரணம் :

புலவர்களும் புரவலர்களும் சிறந்து விளங்கிய பாண்டிநாட்டில் இற்றைக்குச் சற்றேறக் குறைய 300 ஆண்டுகட்கு முன் பாண்டி நாட்டின் சிறந்த துறைமுகமாகிய கீழக்கரையில் சீதக்காதி என்பவர் அவதரித்தார். இவரது இயற் பெயர் ஷெய்கு **அப்துல் காதர் மரக்காயர்.** ஷெய்கு அப்துல் காதர் என்னும் அரபித் தொடர் தமிழர்களால் உச்சரிக்க இயலாமையானும், புலவர்கள் தாங்கள் பாடும் செய்யுட்களில் இப்பெயரை அமைப்பது தமிழொலிக்கு ஒன்றுபடாமையானும், இத்தொடர் மொழியைச் **சீதக்காதி** என்னும் மருஉ மொழியாக்கினர். மரக்காயர் என்பது தமிழ்ச் சொற்றொடர்; இது கடல் வாணிகம் செய்யும் முஸ்லிம்களுக்கு அக்கால மக்கள் இட்ட சிறப்புப் பெயர். இன்னும் கடற்கரையூர்களில் வசிக்கும் முஸ்லிம்கள் மட்டும் இச்சிறப்புப் பெயரைத் தங்கள் பெயருக்கு முன் வைத்துக்கொள்வதை அனைவரும் அறிவர்.

பாண்டி நாட்டுக் கடற்றுறைகளாகிய காயல், கீழக்கரை, ஏர்வாடி முதலிய ஊர்களிலும், சோழநாட்டுக் கடற்றுரைகளாகிய நாகூர், நாகப்பட்டினம், காரைக்கால் முதலிய நகரங்களிலும் வசிக்கும் முஸ்லிம்களிற் பெரும்பாலோர் இன்றைக்கும் இப்பெயர் பூண்டுளர். மரக்காயர் என்பது மரக்கலராயர் என்னும் மொழியின் மருஉ. மரக்கலராயர் என்பதற்குக் கப்பற் காவலர் என்பது பொருள். கப்பல் வாணிகத்துக்கு கருவியாயிருப்பது எனவே, மரக்கலராயர் என்பதன் திரண்ட பொருள் வணிக மன்னர் என்பதாகும். ஒரு சாரார் மரக்காயர் என்பது மர்க்காப்(Markaf-தோணி) என்னும் அரபிப் பதத்தின் திரிபு என்பர். இது ஒரு சிறிதும் பொருந்துவதன்றென்று. சென்னைப் பல்கலைக் கழகத்தில் அரபி, பார்ஸி, உருது ஆகிய மும்மொழிக்கும் தலைவராயும் தமிழ் வல்லுநராயும் இருந்த உயர்திரு டாக்டர் S முகம்மது உசேன் நயினார், M.A ,Ph.D. அவர்கள் வெளியிட்ட சீதக்காதி நொண்டி நாடகத்தின் முன்னுரையில் நன்கு விளக்கியுள்ளார்கள்.

**சீதக்காதியின் நற்பண்புகள் :**

சீதக்காதி 'இளமையிற்கல்' என்னும் முதுமொழிக் கேற்ப, அரபி, தமிழ் முதலிய மொழிகளை நன்கு கற்றுணர்ந்து, மெய்ம்மை பொறையுடைமை, மேன்மை, தவம், அடக்கம், செம்மை முதலிய குணங்களிற் சிறந்து விளங்கினர். இவர் இளமையிலேயே நற்குணமும், நல்லொழுக்கமும் உடையவராய் வாழ்ந்தார். ஆகையால் ஞானிகளும் இவரை விரும்பி நட்புக்கொண்டனர்.

**சீதக்காதியின் உத்தியோகச் சிறப்பு :**

அக்காலத்தில் கீழைக்கரையில் தத்துவ ஞானியாரென்றும், உண்மைத் துறவியார் என்றும், அரபியில் தலைசிறந்த புலவரென்றும் இந்தியா முழுவதும் போற்றிய பெருமானுகிய ஷெய்கு சதக்கத்துல்லா அவர்கள் சீதக்காதியை விரும்பி நண்பராகப் பெற்றுர் என்பது ஒன்றே இவர்தம் உயர் குணங்கட்குச் சிறந்த சான்ருகும். அஞ்ஞான்று வடநாட்டை ஆட்சி புரிந்த ஔரங்கசீபு என்பார், சதக்கத்துல்லா அவர்களை வங்காளத்துக்கு

அரசப் பிரதிநிதியாய் இருத்தல் வேண்டுமென ஞானி போக்கி அழைத்த போழ்து, துறவியராகிய சதக்கத்துல்லா அவர்கள் அரச பதவியை ஏற்க விரும்பாது, வினை வலியும், தன்வலியும், மாற்ருன் வலியும், துணை வலியும் அறிந்து காரியம் செய்யவல்ல சீதக்காதியாம் செல்வரைத் தகுதியுடையவரென ஔரங்கசீபு அரசரிடம் அனுப்பினர். சதக்கத்துல்லா அவர்களின் கட்டளையைச் சிரமேற் கொண்ட சீதக்காதி, வங்காளத்தின் அரசராய்ச் சின்னுள் ஆட்சி புரிந்து, அந்நாட்டின் தட்பவெப்ப நிலை தமக்கு ஊறு செய்தமையால், அவ்வுத்தியோகத்தை உதறியெறிந்து, மீண்டும் கீழக்கரை வந்து வாணிகம் செய்து பொருளீட்டினர்.

சீதக்காதியின் அன்பையும், ஆள்வினையுடைமையையும் வாணிகத்தின் வள்மையையும், வன்மையின் திண்மையையும் கேள்வியுற்ற கிழவன் சேதுபதி யென்னும் விசயரகுநாத சேதுபதி அரசர், சீதக்காதியை அழைத்து நண்பராகப் பெற்ருர். இச்சேது பதி மன்னர் கி பி. 1674 முதல் 1710 வரை சேதுநாட்டை ஆண்ட பெரியார். சீதக்காதியாம் சீரியர், கிழவன் சேதுபதிக்கு அமைச்ச ராயும் உற்றுழி யுதவும் உத்தம நண்பராயும் விளங்கினர். இராமநாதபுரம் கோட்டையைக் கட்டி முடிக்கப் பல்லாற்ருனும் இவர் உதவி புரிந்தார். இவருடைய தொண்டைப் பாராட்டிய அரசர், இவரைத் தமக்குத் தம்பி முறையிட்டு அழைத்து 'விசய ரகுநாத்' என்னும் பட்டத்தையும் அளித்துச் சிறப்புச் செய்தார். அன்றுமுதல் இவரை ஷெய்கு அப்துல்காதர் விசய ரகுநாதப் பெரிய தம்பி மரக்காயர் என மக்கள் வழங்கலாயினர்.

### சீதக்காதியின் வள்ளன்மை :

'செல்வத்தின் பயனே ஈதல்; துய்ப்போம் எனினே தப்புந பலவே,' என்னும் ஆன்ருேர் வாக்கை நன்குணர்ந்த பெரியாராகிய சீதக்காதி இல்லையென வந்தோர்க்கு இல்லையென்னுது வழங்கும் வள்ளலாய் விளங்கினர். முன்பொருகாற் பாண்டிநாடு பன்னி ராண்டு வற்கடம் சென்றதுபோல, சீதக்காதியின் காலத்தும் பஞ் சத்தாற் பீடிக்கப்பட்டது. மழையின்றி புல் நுனியும் பீடிக்கப்பட்டு மக்கள் வயிறெட்டிக் கண் குழிந்து வாய் புலந்து வாடினபொழுது, வாடிய பயிரில் மழை பொழிவதே போல, ஏழைகட்கிரங்கி அன்ன

தானம் செய்யத் சீதக்காதி மடிதற்று முன் வந்தார். இச்சீரிய செயலைப் படுக்காசுத் தம்பிரான்,

'ஓர்தட்டி லேபொன்னும் ஓர்தட்டி லேநெல்லும் ஒக்கவிற்கும்
கார்தட் டியபஞ்ச காலத்தி லும்தங்கள் காரியப்பேர்
ஆர்தட் டினும்தட்டு வாராம லேஅன்ன தானத்துக்கு
மார்தட்டியதுரை மால்சீதக் காதி வரோதயனே'.

எனப் பாராட்டிக் கூறியமை அறிந்து இன்புறத்தக்கது.

சீதக்காதி பொன்னையிட்டினார்; புகழை நாட்டினார்; தமிழ்ப் பயிர் தழைக்க வண்மையாம் நீரைத் தளராது பெய்தார். தமிழ்ப்புலவர் கள் நெஞ்சம் பாக்களை ஆராய்ந்து சிவந்தது. சீதக்காதியின் கரங்கள் அன்னாருக்குப் பொனனை யீந்து சிவந்தன. தமிழ்ப் புலவர் குழாம் பசியையறியாது வாழ்ந்தது; கவலையையும், மனச்சோர்வை யும் காணாது களிப்புற்றது. இதனால். தமிழ் மகள் நடனம்புரிந்தாள். தமிழ்நாடு பிற நாடுகளால் மதிக்கப்பெற்றது.

## சீதக்காதி மேலுலகடைந்தமை:

தமிழன்னைக்குத் தொண்டு செய்த தண்ணளியோர்—புலவர் களைப் புரந்த புண்ணியர்—வரையாது வழங்கிய வள்ளல் சீதக் காதிக்கும் இறுதி நாள் அணுகிற்று கண்ணிலியாம் காலனது கண் பார்வை விழுந்தது. அதைத் தம் மெய்யுணர்வால் உணர்ந்த சீதக்காதி தம் சுற்றத்தார்களை நோக்கி, "யான் இறந்தவுடன் எனது விரலிலுள்ள மோதிரத்தைக் கழற்ற வேண்டா. அத்துடன் என்னை அடக்கம் செய்யுங்கள்', என வேண்டிக்கொண்டார். உயிர் உடலினின்றும் பிரிந்தது. சீதக்காதியின் ஆன்மா இறைவனடி நிழலிற் கலந்து இனபுற்றது. புலவர் புலம்பினர். இரவலர் இரங்கினர். புலவர் குழாம் அலைகடல் நடுவண் மாலுமியில்லா மரக்கலம் போன்று தடுமாறிற்று. சீதக்காதியின் பருவுடல் முஸ்லிம் மதச் சடங்குகளுடன் தோண்டப்பட்ட குழியில் இடப்பட்டது.

சின்னாட் சென்றபின் சீதக்காதியிடம் பேரன்பு பூண்ட படிக் காசுத் தம்பிரான் கீழக்கரைக்கு வந்தார்; தம் அன்பராம் வள்ளலைக் காணாது பலவாறு புலம்பினார். சீதக்காதியின்

பருவுடல் கிடக்கும் சவக்குழியின் முன் நின்று, பெருமானே, நீ புகழ்க் கம்பம் நாட்டி வைத்தாய்; தமிழ்ப்பாவலரை ஓட்டாண்டி யாக்கி அவர்களது வாயில் ஒருபிடி மண் போட்டாய்; சவக்குழியில், நுழைந்தாய்! என் செய்வோம்! வள்ளலே, பூமாதும் புவிமாதும், நாமாதும், நாங்களும் இருந்தென்ன? கொடை மிகுந்த சீமானாகிய நீ இறந்தபொழுது புலமையும் செத்துவிட்டதன்றோ? வண்மை மிக்க நீ திரும்பி வந்து மீண்டும் பிறந்தாலொழியப் புலவர் களுக்குப் பிழைக்க வழியில்லை. என் செய்வோம்!'' எனப் பலவாறு புலம்பிக் கீழ்க்காணும் செய்யுட்களை அருளிச் செய்தார்.

'தேட்டாளன் காயற் றுரைசீதக் காதி சிறந்தவரே
நாட்டான் புகழ்க்கம்பம் நாட்டிவைத் தான்; தமிழ்ப்பாவலரை
ஓட்டாண்டி யாக்கி அவர்கள்தம் வாயில் ஒருபிடிமண்
போட்டான்; அவனும் ஒளித்தான் சமாதிக் குழிபுகுந்தே'

'பூமா திருந்தென்ன? புவிமா திருந்தென்ன? பூதலத்தில்
நாமா திருந்தென்ன? நன் னுவலர்க்குக்
கோமான் அழகமர் மால்சீதக் காதி கொடைமிகுந்த
சீமான் இறந்திட்ட போதே புலமையும் செத்ததுவே'

அப்பொழுது எல்லாம் வல்ல இறைவனருளால் சவக் குழி பிளந்து மோதிரமிட்ட கை வெளியே வந்தது. மோதிரக்கை கண்ட புலவர் பின்வருமாறு அதன் குறிப்பைப் புனைந்து உரைக்கின்றார்:

''சீதக்காதி சவக்குழியிலிருந்து நமது பாட்டொலியைக் கேட்டு 'வா' என்றழைத்த மோதிரக் கையின்] குறிப்பு யாதெனில், புலவர் களை வறுமையான தமிழ்ப்பா ஒன்றும் அறியாத அற்பர்களிடம் சென்று 'தா' என இனி யாசித்தால் வேண்டா என்று தடை யிட்டது போலத் தோன்றிற்று., கீழ்க்காணும் செய்யுள் இவ்வுண் மையைக் கூறுகின்றது:

'காவென்று கைத்தலத் தண்ணல்சொல் லாரான் களிந்துநம்மை
வாவென் றழைத்திட்ட மோதிர மேவண்மை யானதமிழ்ப்
பாவொன்றும் சற்று மறியாத புல்லர்தம் பக்கலிற்போய்த்
தாவென்று யாதொன்றும் கேட்காமல் இட்ட தடையிதுவே',

இச்சீரிய செயலைக் கண்ட தமிழ்நாடு, சீதக்காதியைச் "செத்தும் கொடை கொடுத்தான் சீதக்காதி" எனப் புகழ்ந்து கூறிற்று. இப் பொன்மொழி தமிழ் மொழி உள்ளளவும் சீதக்காதியின் புகழைச் செப்பும் தகையது.

## அருஞ் சொற்பொருள்

செந்தமிழ் முனிவன் — அகத்தியன்; வள்ளன்மை — கொடைப் பண்பு, ஒக்க—சமமாக, கார் தட்டிய—மழை பெய்யாத, காரியப்பேர்—அலுவலர், தட்டு—முட்டுப்பாடு, வரோதயன்—வரத்தால் பிறந்தவன், தேட்டாளன்—செல்வன், பூமாது—இலக்குமி, புவி மாது—நிலமகள், நாமாது—கலைமகள், கா—கற்பகத்தரு, பக்கல்—பக்கம்.

## கேள்விகள்

1. தமிழ் வளர்த்த முஸ்லிம் புலவர் யாவர்?

2. சீதக்காதியின் இயற் பெயர் யாது?

3. மரக்காயர்— பொருள் எழுதுக.

4. சீதக்காதியின் நற்பண்புகள் யாவை?

5 சீதக்காதியை நண்பராகப் பெற்ற சேதுபதி யார்? அவர் சீதக்காதிக்கு அளித்த பட்டம் யாது?

6. சீதக்காதியின் வள்ளல் தன்மையைப் படிக்காசுப் புலவர் புகழ்ந்துரைத்ததை எழுதுக.

7. 'செத்துங்கொடுத்தான் சீதக்காதி,' 'என வழங்கக் காரணம் என்ன?

## பயிற்சி

1. பிரித்தெழுதுக:—

சொன்னோர்க்கு, பொருளோர்க்கு, கடற்கரை, வயிரெருட்டி.

2. 'காவென்று' எனத் தொடங்கும் பாட்டின் பொருளை எழுதுக.

# 13. பசிப்பிணி மருத்துவன்

நாவலர் ந. மு. வேங்கடசாமி நாட்டார் அவர்கள்

[இவர் இந்த நூற்றாண்டில் வாழ்ந்த முதுபெரும் புலவர் பெருமக்களுள் ஒருவர்; அண்ணாமலைப் பல்கலைக் கழகப் பேராசிரியராய்ப் பணியாற்றியவர்; நூல் பல எழுதியவர்; இலக்கியங்களுக்கு உரை பல எழுதியவர்.]

உலகில் மக்களை உடற்றும் பிணி பலவற்றுள்ளும் பசிப்பிணி கொடியதாகும். அஃது ஓர் உடம்பினின்றும் குடிப்பிறப் பழித்து, விழுப்பங்கொன்று, பிடித்த கல்விப் பெரும்புணை அகற்றி மற்றும் இன்ன பல தீமை செய்து, அதனால் மேல்வரும் உடம்புகட்கும் துன்பம் செய்வதாகலின், 'பசியென்னுந் தீப்பிணி' எனத் தெய்வப் புலவரால் கூறப்பட்டது. அப்பிணிக்கு மருந்தாவது, சோறும் நீருமாகிய உண்டியேயாகும். ஆதலின், அவ்வுண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோரேயாவர்.

பண்டை நாள் தொட்டுத் தமிழகத்தே செங்கோலோச்சி வந்த முடியுடை வேந்தருள்ளும், குறுநில மன்னருள்ளும், பிறருள்ளும் மன்பதைகளின் பசியை வீட்டி, இசையை நாட்டிய உரவோர் பல்லாயிரவராவர்; அவருள் இப்பொழுது எம் உள்ளத்தைக் கவர்ந்து நிற்பான் ஒருவனது வரலாற்றை ஈண்டியம்ப விழைகின்றேம். 'ஒரு பிடி படியும் சீறிடம் எழுகளிறு புரக்கும் நாடு' எனச் சிறப்பிக்கப் பெறுஞ் சோணாட்டின்கண்ணே வான் பொய்ப்பினும் தான் பொய்யாத காவிரியின் மருங்கு, சிறுகுடி என்னும் பதியொன்று உளது. அப்பதியின்கண், ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளின்முன் பண்ணன் என்னும் நன்னராளன் ஒருவன் மிக்க படையாண்மையும், மேம்படு கொடையாண்மையும் உடைவனாய் வாழ்ந்திருந்தனன். வீரம், வண்மை என்னும் இரு பெருங்குணங்களும் ஒன்றோடொன்று தொடர்புடையனவாகும். தொல்காப்பியர் பெருமிதம் தோன்றுதற்குரிய தறுகண் முதலியவற்றோடு கொடையும் சேர்த்துக் கூறியிருப்பதும், 'கொடை மடம் படுதல் அல்லது பாரி படை மடம் படான்' என வருவது போல்வனவும் இவ்வுண்மையை விளக்கா நிற்கும்.

'ஈரென இரக்குவராயின், சீருடை முரசுகெழு தாயத் தரசோ தஞ்சம்! இன்னுயிராயினும் கொடுக்குவென்! என

உள்ளம் எள்ளிய மடவோன்; துஞ்சுபுலியிடறிய சிதடன் போல உய்ந்தனன் பெயர்தலோ அரிதே!' எனச் சோழன் நலங்கிள்ளி கூறிய வஞ்சினக் காஞ்சியில் அவனது வண்மையும், தறுகண்மையும் எவ்வளவு சிறந்து காணப்படுகின்றன! இவ்வாற்றால் "கொடையுளுமொருவன் கொல்லுங் கூற்றினுங் கொடியவாட்போர் படையுளு மொருவன்" என்னுஞ் சிந்தாமணித் தொடர்க்கு, 'இனி நிலையாமையை யுணர்ந்து கொடைக்கு நிகரில்லாதவன். அதனாற் படைக்கு நிகரிலனுவன் என்று சொல்லிற்றுமாம்', என நச்சினர்க்கினியர் கூறிய இரண்டாவது பொருளே சாலச் சிறப்புடைத்தாதல் பெற்றோம்.

இனி பண்ணனது படை வீரத்தை 'வெல்வேல் இலை நிறம் பெயர ஓச்சி மாற்றார், மலையருள் யானை மண்டமர் ஒழித்த கழற்காற் பண்ணன்' எனவரும் அகப்பாடிகளால் அறியலாகும். அவனது ஒப்புரவும் ஈகையும் ஆகிய செப்பருங் குணத்தினை இனிச் சிந்தை செய்வோமாக: காவிரியின் வடவயின் உள்ள சிறு குடிக்கண் பூஞ்சோலையும், மாந்தோப்பும், நெல்லிக்காவும் அவனுக்கிருந்தன. அவற்றிடை வாவி, குளங்களும் வயங்கின. அவனுக்கு எத்தனை விளைபுலங்களும், படப்பை முதலியனவும் அமைந்திருந்தன என அறுதியிட்டுரைத்தல் சாலாதெனினும், வள்ளன்மை செலுத்திய ஒண்ணிதிச் செல்வனாகிய அன்னான் அவை நனிமிகவுடையன் என எண்ணுதல் தவறாகாது. ஆனால், அப்பெருந்தகை அவை அனைத்தையும் தனக்கெனப் பேணுந் தன்மையன் அல்லன் அச்சிறு குடிக்கட் போதரும் பாணராயினும், புலவராயினும், மற்றி யாவராயினும். அவனது பூம்பொய்கையிற் சென்று குளிப்பர்; பூங்காவினுட்புக்கு மலர் பறித்து மிலைவர். காவினுள்ளும் தோப்பினுள்ளும் எய்தி, இனிய தீவிய நெல்லிக் கனிகளையும் மாங்கனிகளையும் பறித்து உண்பர். அவனது மனையின்கண்ணே இரவலர் எண்ணில்லாதவர் இடையறாது வந்தீண்டி அடிசில் ஆர்வர். 'கைவள்ளீகைப் பண்ணன் சிறுகுடிப் பாதிரி கமழும் ஓதி', கழற்காற் பண்ணன் காவிரி வடவயின், நிழற்கயந் தழீஇய நெடுங்கான் மாவின், தளிரேர் ஆகம்', 'பண்ணன் சிறுகுடிப் படப்பை நுண்ணிலைப் புன்காழ்நெல்லிப் பைங்காய் தின்றவர், நீர் குடிசுவையின்' என அகத்தினும் புறத்தினும் நல்லிசைப் புலவர்கள்

பாடியிருப்பன காண்க. அவளது அளிநிலை பெற்ற உள்ளத்தின் உயர்வையும் ஒப்பற்ற வாழ்வையும் குறித்ததற்கு, 'தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன், பண்ணன்' எனச் சான்றோரொருவர் வாயாரப் புகன்ற அப்பாட்டடியே அமைவதொன்றாகும். ஆ! தனக்கென வாழாப் பிறர்க்குரியாளன்! இதனினும் எய்தற்குரிய புகழ்ச்சி யாது? இப்புகழ் தனக்கேயாகத் தனியுரிமை படைத்த அவனது பெருமை தான் என்னே! இனி, அப்பெருந்தக்கானைக் குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் என்னுஞ் சோழர் பெருமான் பாடிய பாட்டொன்று புறநானூற்றில் உளது. கிள்ளிவளவன் எவ்வளவு பேரரசன்! எத்துணை வீரமும் வண்மையும் உடையவன்! நல்லிசைப் புலவர்கள் எத்துணையோரால் புகழ்ந்து பாடப்பெற்றவன்! 'செஞ்ஞாயிற்று நிலவு வேண்டினும், வெண்டிங்களுள் வெயில் வேண்டினும், வேண்டியது விளைக்கும் ஆற்றலை', எனவும், மலையில் இழிந்து மாக்கடல் நோக்கி நிலவரை யிழிதரும் பல்யாறு போல, புலவரெல்லாம் நின்னோக்கினரே', எனவும் பாராட்டப்பெற்ற வளவர் தோன்றல் பண்ணனுடைய ஈகையின் சிறப்பை உள்ளம் உருக உயர்த்துரைத்தனன என்றால், அவ்வள்ளலது ஈகையும், தூய்மையும், அவ்வரசனுக்கு அவனோடிருந்த நட்பின் சீர்மையும் எத்தகையவென்று யாரால் இயம்பலாகும்? புலவர் பாடும் புகழுடைப் பெருநில வேந்தனாகிய வளவன், தன்னை ஒரு பாணனாக வைத்துப் பண்ணனது ஈகையைப் பாராட்டிப் பாடியிருப்பதனை நினைத்தால், யாருடைய நெஞ்சுதான் உருகாதிருக்கும்? அப்பாட்டிலே, 'யான் வாழு நாளும் பண்ணன் வாழிய!' என்பது முதலடியாகும், 'யான் உயிர் வாழு நாளையும் பெற்றுப் பண்ணன் வாழ்வானாக!' என்பது அதன் பொருள். அஃதோர் பாணன் கூற்றில் அமைந்திருப்பினும் கிள்ளி வளவன் உள்ளக் கிடையன்றோ அது? நாட்டில் வாழும் உயிர்கட்கெல்லாம் உயிராய் விளங்கும் இறைவன், தான் வாழ்வதற்குரிய நாளையும் பண்ணன் பெற்று வாழவேண்டும் எனக் கருதினான் எனில். பண்ணன்பால் அவனுக்கிருந்த அன்பின் திறத்தை என்னென்றியம்புவது? பழுத்த மரத்தின்கட் புள்ளினம் ஒலித்தாற்போலப் பண்ணனுடைய இல்லத்தில் ஊண் உண்டலாலாகிய ஆரவாரம் கேட்கும் என்றும் மழை பெய்யுங் காலத்தைப் பார்த்துத் தம்

முட்டைகளைக் கொண்டு மேட்டு நிலத்திலே அடையுஞ் சிற்றெறும்பின் ஒழுக்கினையொப்ப, பெரிய சுற்றத்துடன் கூடிய பாண் சிறுவர்கள் சோற்றுத் திரள் பொருந்திய கையினராய் வேறு வேறு வரிசையாக அவன் இல்லில் நின்றும் செல்வரென்றும் அப் பாட்டிலே கூறப்பட்டுள்ளன. அம்மட்டோ? 'பசிப்பிணி மருத்துவன்' என்னும் அருமருந்தன்ன பெயரால் அப்பண்ணன் கூறிப்பெற்றுள்ளான். ஆதலின், யாமும் அப்பெயரையே அவன் பெயராகக் கொள்ளலாயினம்.

## அருஞ் சொற்பொருள்

உடற்றும்—வருத்தும், விருப்பம்—சிறப்பு. புணை—தெப்பம், பிடி—பெண் யானை, களிறு—ஆண் யானை. நன்னர்—நன்மை, படை மடம்—அறப்போர், நெறியினின்றும் மாறுபடுதல், மடவோன் — அறிவற்றவன், சிதடன் — குருடன், ஒப்புரவு— உபகாரம், படப்பை — தோட்டம், அளி — கருணை, வஞ்சினக் காஞ்சி—அரசன் தன் பகைவரைத் தாழப்பண்ண வேண்டி, இன்னது செயலாற்றேனாயின் இன்னவனுக் கடவேன் என்று சபதஞ் செய்தல்.

## வினாக்கள்

1. உண்டி கொடுத்தோர் உயிர் கொடுத்தோராவது எங்ஙனம்?
2. பண்ணனது படை வீரத்தையும் கொடை வீரத்தையும் புலப்படுத்துக.
3. பண்ணனது மனை எத்தகைய சிறப்பினை உடையது!
4. குளமுற்றத்துத் துஞ்சிய கிள்ளி வளவன் பண்ணனை எவ்வாறு கூறுகின்றான்?
5. கிள்ளி வளவன் எத்தகைய சிறப்புடையவன்?

## பயிற்சி

குறிப்பு வரைக:— படை மடம், கொடை மடம் வஞ்சினக் காஞ்சி.

# 14. கற்ற வண்ணம் ஒழுகுதல்

பேராசிரியர் மயிலை, சிவமுத்து அவர்கள்

(இவர் தமிழாசிரியராய் இருந்து ஓய்வு பெற்றவர்; சென்னை மாணவர் மன்றத் தலைவர்; தமிழ் மூதறிஞர்.)

[மணிவண்ணன் கல்லூரி மாணவன். அவனுக்கு இளையவன், கணிகண்ணன். அவன் எட்டாம் வகுப்பு மாணவன். இவர்கள் இருவருக்கும் உரையாடல் நிகழ்கின்றது.]

கணிகண்ணன்: அண்ணா, 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்பது என்ன? அண்ணா!

மணிவண்ணன்: தம்பி, இது மேல் வகுப்பிலே தெரிந்து கொள்ளவேண்டிய ஒரு செய்தி. இதைப்பற்றி உனக்கு ஆராய்ச்சி ஏன்?

கணி: அப்படியா! இது எங்கள் பாடத்திலே வருகிறதே! நான் நித்தம் மனப்பாடம் செய்யும் திருக்குறளிலேகூட இந்தச் சொற்றொடர் வருகிறதே!

மணி: அந்தத் திருக்குறளைச் சொல், கேட்கலாம்.

கணி:

"உலகத்தொடு ஒட்ட ஒழுகல் பலகற்றும்
கல்லார் அறிவிலா தார்".

மணி: தம்பி, நீ இதன் பொருளையும் சொல்லுவாயா?

கணி: அண்ணா, நேற்று எங்கள் ஆசிரியர் அதைக் கூறினார். ஆனால், எனக்குச் சரியாக விளங்கவில்லை. அதனாலேதான் கேட்கிறேன்.

மணி: இந்தப் பாடலின் பொருளைத் தெரிந்து கொள்ள உன் போன்ற இளஞ்சிறுவர்கட்குச் சிறிது துன்பமாகத்தான் இருக்கும், ஆனால், வள்ளுவர் இதை எல்லோரும் தெரிந்து கொள்ள வேண்டும் என்னும் எண்ணத்தாலேதான் ஒழுக்கம் என்னும் அதிகாரத்திலே இறுதிச் செய்யுளாக அமைத்திருக்

கின்றார். அது இருக்கட்டும். தம்பி. நீ உன் பாடங்களையெல்லாம் நித்தம் படிக்கின்றாய் அல்லவா? எதற்குப் படிக்கின்றாய்?

கணி: என்ன அண்ணா! இது தெரியாதா? மேல் வகுப்பு மாறுவதற்காகப் படிக்கின்றேன்.

மணி: அவ்வளவுதானா? அதற்குப் பிறகோ?

கணி: அதற்குப் பிறகு நானும் உங்களைப் போலப் பட்டம் பெற்று உத்தியோகமோ, வியாபாரமோ செய்து பொருள் தேடுவேன்.

மணி: தம்பி, நன்றாகச் சிந்தித்துச் சொல். பொருள் தேடுவதற்கு மட்டுந்தானா நாம் படிக்கிறோம்?

கணி: இல்லை அண்ணா, இப்போது நினைவுக்கு வருகிறது. படித்தபடியே நடப்பதுதான் முக்கியம் என்று எங்கள் ஆசிரியர் கூறியிருக்கின்றார்.

மணி: அதுதான் சரி, கண்ணா, நன்றாய் படித்திருந்தும் படித்தபடியே நடக்காதவர்களை நாம் படித்தவர்கள் என்று சொல்லலாமா?

கணி: சொல்லக் கூடாது. அண்ணா. இப்போது எனக்கு அந்தத் திருக்குறளின் பொருள் சிறிது விளங்குகிறது. படித்த படியே நடப்பவர்கள் அறிவாளிகள். அவ்விதம் நடக்காதவர்கள் எவ்வளவு படித்திருந்தாலும் படித்தவர்கள் அல்லர். நான் சொல்வது சரிதானே? எங்கள் ஆசிரியரும் இப்படித்தான் கூறினார். ஆனால், 'உலகத்தோடு ஒட்ட ஒழுகல்' என்பதுதான் சரியாக விளங்கவில்லை.

மணி: தம்பி நீ நல்ல அறிவாளி ஆவாய். ஆதலால் இந்தப் பாடலின் கருத்தை உனக்கு முதலில் விளக்கிக் கூறிப் பிறகு பதப்பொருளும் கூறுகிறேன்.

கணி: எங்கள் ஆசிரியரும். இந்தப் பாடலின் கருத்தை மட்டும் தெரிந்து கொள்ளுங்கள். அது போதும், என்றுதான் கூறுகின்றார்.

மணி: உண்மையே. இந்தப் பாடலுக்குக் கொண்டு கூட்டிப் பொருள் கூறும்போது இளைஞர்கட்குச் சிறிது துன்பமாக இருக்கலாம். தம்பி நான் கூறுவதைக் கவனி. நாம் படிப்பது 'ஏட்டுச் சுரைக்காயாக' இருத்தல் கூடாது.

கணி: ஏட்டுச் சுரைக்காய் என்பது என்ன அண்ணா?

மணி; ஒரு புலவர் புராணப் பிரசங்கம் செய்து கொண்டிருந்தாராம். அப்போது அவர் சுரைக்காய் சாப்பிடுவது நல்லதன்று என்று அங்கிருந்தவர்களுக்குக் கூறினாராம். இதை அந்தப் புலவரின் மனைவியும் கேட்டுக் கொண்டிருந்தாளாம். மறுநாள் புலவர் தம் மனைவியிடம், 'நம் தோட்டத்தில் காய்த்திருந்த சுரைக்காய்கள் எங்கே? என்றாராம். அவள், சுரைக்காய் சாப்பிடுதல் கூடாது என்று நீங்கள் பிரசங்கத்தில் கூறியதால், நான் அவைகளை அறுத்து ஏழைகட்குக் கொடுத்து விட்டேன்', என்றாளாம். உடனே புலவர் 'அடி பைத்தியக்காரி, நான் சொல்லியது ஏட்டுச் சுரைக்காய். இது வீட்டுச் சுரைக்காய் ஆயிற்றே!' என்றாராம்.

கணி: சுரைக்காயில் இரண்டு வகையா?

மணி: வயிற்றுப் பிழைப்புக்காகச் சொன்னது ஏட்டுச் சுரைக்காய்; அதாவது, படித்தபடி நடக்காமல் மற்றவர்களுக்கு மட்டும் உபதேசம் செய்வது. நாம் நன்றாகப் படிக்கவேண்டும். நம்மைப் போலப் படித்தவர்கள் உலகத்தில் எவ்விதம் வாழ்கிறார்களோ, அவ்விதம் நாமும் ஒழுக்கத்தோடு வாழ வேண்டும். அவ்விதம் வாழாதவர் படித்தும் படியாதவர்; அதாவது கற்றறி மூடர்.

கணி: என்ன அண்ணா, படித்தவன் மூடனாக எவ்விதம் இருப்பான்? விளக்கிச் சொல்லுங்கள் அண்ணா!

மணி: தம்பி, அது ஒரு பெரிய கதை என்றாலும், சுருக்கிச் சொல்லுகிறேன். ஓர் ஊரில் நான்கு வித்துவான்கள் இருந்தார்கள். மருத்துவப் புலவர், இசைப் புலவர், சோதிடப்புலவர், தருக்கசாத்திரி—இந்த நான்கு பேரும் ஓர் அரசனிடம் சென்று தம் புலமையைக் காட்டினராம்.

அப்போது அரசன் தனக்கு அருகில் இருந்த அமைச்சனைப் பார்த்து, 'இவர்களைக் குறித்து உமது எண்ணம் என்ன?' என்று வினவினனும். உடனே அமைச்சன், 'எனக்கு ஒரு நாள் ஓய்வு கொடுங்கள்.' சொல்லுகின்றேன். அதுவரையில் இவர்கள் என்னிடம் இருக்கட்டும்'' என்று கூறி அவ்விதமே அந்தப் புலவர் நால்வரையும் தன் வீட்டுக்கு அமைத்துச் சென்றுனும்.

கணி; அந்த அமைச்சன் அந்த நான்கு வித்துவான்களுக்கும் ஏதாவது பரீட்சை வைக்கப் போகிருன?

மணி. ஆம், பரீட்சைதான் வைக்கப் போகிருன். 'இவர்கள் படித்திருக்கிறுர்களே, இவர்களுக்கும் உலக அறிவு இருக்கிறதா?' என்று பரீட்சிக்கப் போகிருனும்,

கணி: அது எப்படி அண்ணு?

மணி, அமைச்சர்கள் அந்த நான்கு வித்துவான்களையும் பார்த்து, 'புலவர்களே, இந்தப் பொன்னைப் பெற்றுக் கொள் ளுங்கள். வேண்டிய சாமான்களும் தருகின்றேன். வேறு எவர் உதவியையும் நாடாமல் நீங்களே காய்கறி யாவும் வாங்கி நீங்களே சமையல் செய்து கொண்டு சாப்பிடவேண்டும். பிறகு என்னை வந்து பாருங்கள்.' என்று கூறினனும். அந்தப் புலவர் நால்வரும் புத்தகமும் கையுமாய் இருந்தனரே ஒழியக் குடும்பக்கலை பற்றிச் சிறிதும் கவலைப்படவில்லை. அவர்கள் அரிசி விலை உப்பு விலைகூடத் தெரியாதவர்கள் என்ன செய்வார்கள் பாவம்!

கணி: அண்ணு, அண்ணு, இந்தக் கதை எனக்குத் தெரியும் மருத்துவப் புலவர், 'கத்தரிக்காய் சூடு செய்யும், வாழைக்காய் வாய்வு செய்யும்.' என்று எதையும் வாங்காமல் சும்மா வந்து விட்டார். தருக்க சாத்திரியார், 'நெய்க்குத் தொன்னை ஆதாரமா, தொன்னைக்கு நெய் ஆதாரமா?' என்று பார்க்க, வாங்கிய நெய்யைக் கவிழ்த்து விட்டார். இன்னிசைப் புலவர் சோறு கொதிக்கும் போது, தாளம் சரியாக இல்லையென்று

சொல்லி அந்தச் சோற்றுப் பானையையே எட்டி உதைத்தாராம், அந்தக் கதைதானே இது ?

மணி ; ஆம் தம்பி, அதுவே தான். அவர்கள் நன்ருகப் படித்திருந்தும். உலகத்தோடு ஒட்டி வாழத்தெரிந்துகொள்ள வில்லை. அதற்காகத்தான் இப்போது யாடங்களெல்லாம் குடும்பத் துக்கு ஏற்ற பாடமாக இருக்கவேண்டும் என்றும், மாணவர்கள் படித்த படியே நடக்க முயலவேண்டும் என்றும் அரசாங்கத்தார் கூறுகின்றனர்.

கணி : அண்ணு, நான் சாரண இயக்கத்தைச் சார்ந்தவன். எனக்குச் சமைக்கக்கூடத் தெரியும். நூல் நூற்பேன்; துணி நெய்வேன்: பாய் முடைவேன். எங்கள் பள்ளியில் எல்லாம் கற்றுக் கொடுக்கின்ருர்கள்,

மணி ; இவ்விதம் வாழ்க்கைக்கு வேண்டிய வகையில் பாடங்கள் இப்போது அமைந்திருப்பதற்குக் காந்தி அடிகளே அடிகோலினுர். வார்தாக் கல்வித் திட்டம். ஆதாரக் கல்வி முறை என்றெல்லாம் இப்போது கூறுகின்ருர்களே, அவை யாவும் மக்கள் வாழ்க்கைக்கு ஏற்ற முறைகளேயாகும்.

கணி : 'காந்தி அடிகள் சுய ஆட்சியை மட்டும் அளிக்கவில்லை; மக்கள் வாழ்க்கைக்கும் வழி வகுத்துக் காட்டியிருக்கிருர்.' என்று எங்கள் தலைமை ஆசிரியர் காந்தி விழாவில் மிகவும் விரிவாக ஆர்வத்தோடு பேசினுர், அண்ணு, எனக்கு நேரம் போனதே தெரியவில்லை! நாளைக்கு எங்கள் பள்ளியில் ஒரு கூட்டு வியாபாரம் நாங்களே நடத்தப் போகிருேம். அதற்கு வேண்டிய பொருள்களை யெல்லாம் சேர்க்க உடனே ஒரு பட்டி தயார் செய்யவேண்டும். அது இருக்கட்டும், அண்ணு, அந்தத் திருக்குறளுக்கு நீங்கள் பொருள் கூறவே இல்லையே!

மணி : தம்பி, அவ்விதமே கூறுகின்றேன். முதலில் அந்தப் பாட்டை அன்வயப்படுத்திக் கொள்ள வேண்டும்.

கணி : 'அன்வயம்' என்பது என்ன அண்ணு ?

மணி : சொற்களைக் கொண்டு கூட்டுதல்; அதாவது, பாட்டினை உரைநடையின்படி ஒழுங்குபடுத்திக் கொள்ளுதல்; இதற்கு அன்வயப்படுத்துதல் என்பது பெயர்.

'உலகத்தொடு ஒட்ட ஒழுகல் கல்லார்,
பல கற்றும் அறிவிலாதார்,'

இதுவே இந்தப்பாட்டின் அன்வயம் ஆகும்.

உலகத்தொடு - உலகத்தில் உள்ள உயர்ந்த மக்களோடு, ஒட்ட ஒழுகல்-சேர்ந்து ஒழுகுதலை, கல்லார்-தெரிந்து கொள்ளாதவர், பல கற்றும்-பல நூல்களைக் கற்றிருந்த போதிலும், அறிவிலாதார்- அறிவில்லாதவரே ஆவர்.

இங்கே உலகம் என்பது உலகத்தில் உள்ள பெரியோரைக் குறிக்கும். 'உலகம் என்பது உயர்ந்தோர் மாட்டே,' என்பது வழக்கு.

கணி : நல்ல விளக்கம் தந்தீர்கள் அண்ணு ! நன்றி ! வணக்கம் !

மணி : தம்பி, நீயும் காந்தி அடிகளைப் போல ஒழுக்கத்திற் சிறந்தும், திருவள்ளுவரைப் போல அரிய நூல்கள் இயற்றியும், நம் குடும்ப மூதாதையர்களைப் போலக் கற்ற வண்ணம் ஒழுகியும், பேரும் புகழும் பெற்றுத் திகழுவாயாக !

## அருஞ்சொற்பொருள்

சொற்றொடர்-வாக்கியம், இறுதி - முடிவு, அதிகாரம்-நூலின் உட்பிரிவு, புலமை-அறிவுத்திறமை, அமைச்சர்-மந்திரியார்.

## வினாக்கள்

1. 'நீ எதற்காகப் படிக்கிறாய்' என்று கேட்ட மணிவண்ணனுக்குக் கணிகண்ணன் கூறிய பதில் யாது?

2. தான் அறிய விரும்பிய குறட்பாவின் கருத்தைக் கணிகண்ணன் எப்பொழுது எவ்வாறு உணர்ந்தான்?

3. 'ஏட்டுச்சுரைக்காய்' பற்றிய விளக்கத்தைத் தெரிவிக்க

4. 'கற்றறி மூடர்' — யார்?

5. அரசனிடம் சென்ற வித்துவான்கள் உலகியல் தெரியாதவர்கள் என்பதை எதனால் அறிகிறாய்?

6. அன்வயப்படுத்துதல் என்பது எதற்குப் பெயர்?

7. மணிவண்ணன் கணிகண்ணனுக்குக் கூறியுள்ள அறவுரை யாது?

# 15. பட்டினப்பாலை

டாக்டர் மா. இராசமாணிக்கனாரவர்கள்,
M. A-. L. T.; M. O. L. Ph. D.

[இவ்வாசிரியர் மதுரைத் தியாகராசர் கல்லூரியின் தமிழ்த்துறைத் தலைமைப் பேராசிரியராயிருந்தவர்; தமிழில் பல ஆராய்ச்சி நூல்களையும் பாடநூல்களையும் எழுதி வெளியிட்டிருக்கின்றார். இவர் தம் 'பத்துப் பாட்டுக் காட்சிகள்' என்ற நூலிலிருந்து இப்பகுதி தரப்பட்டிருக்கிறது.]

## முன்னுரை:

காவிரிப்பூம்பட்டினத்தைச் சிறப்பித்துக் கூறிய பாலைத் திணையில் அமைத்ததாதலின் இப்பாட்டுப் பட்டினப் பாலை எனப் பெயர் பெற்றது. இது வேற்று நாட்டுக்குச் செல்லத் தொடங்கிய தலைவன் தனது நெஞ்சை நோக்கி. 'தலைவியைப் பிரிந்துவாரேன்', என்று தனது செலவை நிறுத்திக் கூறும் கூற்றுக் கரிகாற் சோழனைக் கடியலூர் உருத்திரங்கண்ணனார் பாடியது. இப்பாட்டு 301 அடிகளை உடையது, இப்பாடலைக் கேட்டு உவந்த கரிகாற் சோழன் உருத்திரங்கண்ணனாருக்குப் பதினாறு இலட்சம் பொன் பரிசாக அளித்தனன் என்று நூல்கள் கூறும்.

## காவிரியாற்று வளம்:

காவிரியாறு மேற்குத் தொடர்ச்சி மலையில் தோன்றிக் கடலிற் பாயும். வெள்ளி என்னும் விண் மீன்தான் நிற்பதற்குரிய வட திசையில் இல்லாது தெனதிசையிற் சேரினும். வானம் பொய்ப்பினும், பொன் கொழிக்கும் காவிரியில் நீர் வற்றாது, இத்தகைய வளமுடைய காவிரி பாயப் பெற்ற நாடு சோழ நாடு.

## மருத நிலவளம்:

மருத நிலத்தில் ஊர்கள் நெருக்கமாய் இருக்கும், வயல்கள் மிக்க விளைச்சலை நலகும். கருப்பஞ்சாறு காய்ச்சும் கொட்டில்களில் எழுந்த இனிய புகைபடுவதால் வயலில் உள்ள நெய்நற் பூ வாடும், எருமைக் கன்றுகள்

செந்நெற் கதிர்களை வயிறூர உண்டு நெற்கதிர்களின் நிழலில் உறங்கும். செழித்த வயல்களில் குலைத்தெங்கும். குலை வாழையும், காய்க் கமுகும், மஞ்சளும், பல்வேறு மரங்களும், குலை களையுடைய பனையும் நெருங்கி வளரும். ஊர்களில் உள்ள மனை களின் முற்றத்தில் நெல் உலரவைக்கப்பட்டிருக்கும். அதனைக் கோழிகள் தின்னாதபடி சிறு பெண்கள் காவலாயிருப்பார்கள்; நெல்லைத் தின்னும் கோழிகளைத் தம்முடைய மகரக் குழைகளால் எறிந்து ஓட்டுவர். கால்களில் தண்டையணிந்த சிறுவர் உருளை களையுடைய சிறு தேர்களை முற்றத்தே உருட்டி விளையாடுவர். முன்னர்ப்பெண்கள் எறிந்த மகரக்குழைகள் அத்தேர் உருளைகளின் போக்கைத் தடுக்கும்.

## நெய்தல் நிலத்தில் :

சோழ நாட்டைச் சேர்ந்த பல ஊர்களிலும் சென்று உமணர் உப்பை விற்ற விலைக்கு நெல்லைப் பெறுவர்; அதனைப் படகுகளில் ஏற்றிக்கொண்டு தத்தம் நெய்தல் நில ஊர்கட்குச் செல்வர். தோப்புக்களை அடுத்துப் பூஞ்சோலைகள் இருக்கும் அப்பூஞ் சோலைகளில் பொய்கைகள் இருக்கும் அப்பொய்கைகளில் மணம் நிறைந்த பன்னிற மலர்கள் மலர்ந்திருக்கும்

## நகரத்தில்:

இத்தகைய வளமிக்க சோழநாட்டின் தலைநகரம் காவிரிப்பூம் பட்டினமாகும். அப்பெரு நகரின் மதில் திண்ணியது; புலி அடை யாளம் தீட்டப்பெற்ற வலிய கதவுகளைக் கொண்டது. நகரத்தில் உணவுச் சாலைகள் பலவுண்டு. அவற்றில் வடிக்கப்படும் கஞ்சி ஆற்று வெள்ளம் போலப் பெருகி ஓடும். அதனைப் பருகச் செல்லும் எருதுகள் தம்முள் போரிடலால், அது மண் கலந்து சேறாகிவிடும். தரை காய்ந்தபிறகு அதன்மீது தேர்கள் ஓடுதலால் புழுதியாகி மேலெழும்; எழுந்து பல வகை ஓவியங்கள் தீட்டப் பெற்ற வெண்சுவருடைய கோவில்கள் மீது படிந்து, அவற்றை மாசுபடுத்தும் நகரத்தில் அமணப்பள்ளிகள் உண்டு அவற்றுள் ஒவ்வொன்றிலும் குளமுண்டு. சடைமுடியுடைய முனிவர் இளமரக்காவில் தங்கியிருப்பர். அவர்கள் நெருப்பில் நெய் பெய்து ஓமம் செய்வர். அங்குள்ள குயில்கள் ஓமப்புகை

யைக் கண்டு மேகம் என மருண்டு காளி கோட்டத்தில் உள்ள புருக்களோடு பழமரப் பொந்துகளில் தங்கும்.

பரதவர் செயல்கள் :

பட்டினப் பாக்கத்தில் உள்ள பரதவர் இருல் மீனின் இறைச்சியையும் வயல் ஆமையின் இறைச்சியையும் சமைத்து உண்பர். வரண்ட அடம்பின் பூவையும் ஆம்பற் பூவையும் பறித்துச் சூடுவர். பொதுவிடத்தே பற்பலர் கூடுவர்; ஆட்டுக்கடாக்களையும் கவுதாரிகளையும் போரிடச் செய்து பொழுது போக்குவர்; பின்னர் மற்போரும், கருவிப் போரும் புரிவர்; அதன் பிறகு கவண் கல் வீசி விளையாடுவர். அக்கல்லெறிக்கு அஞ்சிக் குட்டிகளை ஈன்ற பன்றிகளும் கோழிகளும் திசை கெட்டு ஓடும். பரதவர் முழுநிலா இரவில் மீன் பிடிக்கச் செல்லார். தழை உடையணிந்த தம் மகளிரோடு மணல் முற்றத்தே கூடுவர்; அவ்விடத்தில் சினைச் சுருவின் கொம்பை நடுவர்; அதனிடத்து ஏறிய தெய்வத்தை வழிபடுவர்; அதன் மீது வெண்டாளிப் பூவால் கட்டிய மாலையை அணிவர்; தாழம்பூவைச் சூடுவர்; பனையிலிருந்து இறக்கிய கள்ளையும், நெல்லாற் சமைத்த கள்ளையும் குடித்துக் களித்து விளையாடுவர். பிறகு அவர்கள் கடற்கரையில் கூடிக் காவிரி கடலோடு கலக்கும் இடத்தில் நீராடுவர்; நீராடிய பின் கடல் நீர் உப்பு நீங்கும் பொருட்டு ஆற்று நீரில் குளிப்பர்; நண்டுகளைப் பிடுத்தாட்டுவர்; பரவி வருகின்ற அலைகளைக் காலால் மிதிப்பர்; மணலினுல் பாதைகள் செய்வர்; உயர்ந்த மாடங்களிலிருந்துசெல்வ மகளிர் பாடும் பாடல்களைக் கேட்டு மகிழ்வர். இரவில் உயர்ந்த மாடங்களில் விளக்குகள் எரியும் வைகறையில் கட்டுமரங்களில் செல்லும் பரதர் அவ்விளக்குகளை அறிவர். காலையில் கடைத் தெருவில் பலரும் வழிபடும் தெய்வங்களுக்குப் பாடுமகளிர் பத்திச் சுவையுடைய பாடல்களைப் பாடுவர். அக்கோவில்களில் புல்லாங்குழல், யாழ் முரசு முதலிய இன்னிசைக் கருவிகள் ஒலிக்கும்; விழாக்கள் சிறப்புற நடைபெறும்.

பண்டசாலை :

பரதவர் வாழும் அகன்ற தெருவில் காவலைக் கொண்ட பண்டசாலை உள்ளது. உள்நாடுகளிலிருந்து கொண்டு வரப்

பட்ட பண்டங்கள் சுங்கம் மதிப்பிட்டு. புலி முத்திரை இடப்பட்டு. கப்பல்களில் ஏற்றும் பொருட்டுப் பண்டசாலை முற்றத்தே அடுக்கிக்கிடக்கும் கப்பல்களிலிருந்து இரக்கப்பட்ட பண்டங்கள் புலிப்பொறி இடப்பெற்றுச் சுங்க மதிப்பிடப் பண்டசாலை முற்றத்தின் ஒரு பக்கத்தே குவிந்து கிடக்கும் சுங்கம் கொள்பவர் சிறு பொழுதும் ஒய்வின்றி நாடோறும் சுங்கம கொள்வர். நாய்களும் ஆட்டுக்கடாக்களும் பண்டசாலை முற்றத்தில் கிடக்கும் மூட்டைகளில் மீது ஏறிக் குதிக்கும்.

## மகளிர் விழாக் காணல் :

உயர்ந்த மாடங்கள் பல ஏணிப்படியை உடையனவாய் இருக்கும். வானளாவிய மாடங்களில் வாழ்ந்த மகளிர் சிவந்த அடியினர்; பவள நிறத்தினர்; மெல்லிய உடையினர். கிளி மொழியினர்; மயிலின் சாயலர்; அவர்கள் தென்றற்காற்று வீசும் சாளரங்களின் எதிரே நின்று கடைத்தெருவை நோக்குவர் அப்பொழுது கடைத்தெருவில் சிலர் பாடுவர். சிலர் புல்லாங்குழல் ஊதுவர். சிலர் யாழ் வாசிப்பர். சிலர் முரசொலிப்பர் அந்த நிலையில் முருகக்கடவுள் முதலிய தெய்வங்கட்கு விழாக் கொண்டாடப்படும். அப்பொழுது மேற்சொல்லப்பட்ட மாடங்களில் உலாவும் மகளிர் தம் கைகளைக் குவித்து வணங்குவர்,

## கடைத் தெருவில் பலவகைக் கொடிகள் :

வீட்டில் உலவும் தெய்வங்கள் மகிழும்படி வாயில்களில் கொடிகள் நாட்டப்பட்டிருக்கும் கடைத்தெருவில் இரண்டு வரிசைகளிலும் எடுத்த கொடிகள் கரும்பின பூக்களைப்போல விளங்கும். கூலவகைகளை நிரப்பித் தாழிடப் பெற்ற அறைகளில் கொடிகள் கட்டப்பட்டிருக்கும். பல நூல்களை நன்கு கற்ற ஆசிரியர்கள் பிறரை வாதுக்கழைக்கக் கொடிகள் கட்டியிருப்பர். துறைமுகத்தில் நிற்கும் பலவகைக் கப்பல்கள் மீது கொடிகள் கட்டப்பட்டிருக்கும. இஃது இன்ன கடை என்பதை மக்களுக்குணர்த்த ஒவ்வொரு கடையிலும ஒவ்வொரு வகைக் கொடி கட்டப்பட்டிருக்கும். இவ்வாறு தெருக்களில் எண்ணிறந்த கொடிகள் கட்டப்பட்டிருந்தலால் ஞாயிற்றின் ஒளிக்கதிர்கள் தெருவிற் பெரிதும் படுவதில்லை என்னலாம்.

### கடைத்தெருவில் பலநாட்டுப் பண்டங்கள் :

மலைநாட்டு மிளகும் பொன்னும், பொதிய மலையிற் பிறந்த சந்தனமும் அகிலும் தென்கடலிற் பிறந்த முத்தும், கீழ்க்கடலிற் பிறந்த பவளமும், கங்கையாற்றுப் பாய்ச்சலால் விளைந்த பொருள்களும், காழக (பர்மா) நாட்டுப் பொருள்களும், சீனம் முதலிய இடங்களிலிருந்து வந்த பனிநீர் முதலியனவும், காவிரியாற்றுப் பாய்ச்சலால் விளைந்த பொருள்களும், இலங்கைப் பொருள்களும், பிறவும் புகார் நகரத்துக் கடைத்கதருவில் மிகுதியாகக் குவிந்து கிடக்கும். வெளிநாடுகளிலிருந்து வந்து பல்வேறு மொழிகளைப் பேசும் மக்கள் நகரில் குடியிருப்பர்.

### வேளாளர் இயல்பு :

வேளாளர் அருள் ஒழுக்கம் நிறைந்தவர். அவர்கள் அறிவுரையால் வலைஞர் முற்றத்தில் மீன்கள் பாய்ந்து திரியும். ஊன விற்பவர் குடிசையில் ஆடு முதலியன திரண்டு இருக்கும். வேளாளர் களவு செய்பவரை அத்தொழிலினின்று நீக்குவர்; அந்தணரது புகழை நிலை நிறுத்துவர். பலர்க்குத் தானம் அளித்தல் வேளாளர் இயல்பு.

### வணிகர் இயல்பு :

வணிகர் நுகத்தில் தைத்த பகலாணியைப் போல நடுவு நிலை பிறழாத நெஞ்சினர்; மிகச் சிறிய அளவு ஆதாயம் வைத்துப் பொருள்களை விற்பவர்; தாம் கொடுக்கும் பொருளுக்கு ஏற்பவே சரக்கையும் கொள்பவர்; அவ்வாறே தாம் வாங்கும் பொருளுக்குக் குறையாத மதிப்புடையே பொருளையே கொடுக்கும் இயல்பினர்.

### கரிகாலன் வீரம் :

வலிய புலி கூட்டில் அடைபட்டு வளர்த்தாற் போல கரிகாலன் பகைவரது சிறையிலிருந்து வளர்ந்தான். சிறையிலிருந்து வெளியேற விளம்பி காவலரை வாளால் துணித்து, அவ்விடத்தினின்றும் அகன்றான். தனது அரசுரிமையை முறைப்படி பெற்றான், பின்னர் அவன் தனது நாட்டை

உருவாக்க நாற்படைகளுடனும் சென்றான்; பகைவர் நாடுகளைக் கைப்பற்றினான். அவனால் கைப்பற்றப்பட்ட ஊர்களில் கூகைகள் இருந்து குழறின, மதில்கள் அழிந்தன. எத்துணை அரசர்கள் எதிர்த்து வரினும் நான் ஒருவனாய் நின்று வெல்ல வல்லவன் என்று பெருமிதம் கொண்டிருந்த பாண்டியனை அவன் வென்றான். அவன் நினைத்தவற்றை நினைத்தவாறே முடிக்க வல்லவன்; அருவா நாட்டார், குட்ட நாட்டார், குட நாட்டார் இருங்கோவேளிர் முதலியவர்களைத் தனக்குக் கீழ்ப்படுத்தியவன். அவன் காடு கெடுத்து நாடாக்கியவன்; ஆக்காங்குக்குளங்களை அகழ்வித்தவன்; உறையூரில் கோவில்களையும் குடிகளையும் நிலைபெறச் செய்தவன். இங்ஙனம் பல நாடுகளை வனப்படுத்தியதனால் அவன் கரிகால் வளவன் எனப் பெயர் பெற்றான்.

புகாரில் அம்பலம்,

புகாரில் அம்பலம் ஒன்று உண்டு அதில் அருள் தறி நிறுத்தப்பட்டுள்ளது. சிறை செய்யப்பட்ட பகைவர் நாட்டு மகளிர் துறையில் நீராடி அம்பலத்தை மெழுகுவர்; விளக்கை ஏற்றி வைப்பர். அங்குப் பல நாட்டாரும் சென்று வணங்குவர்.

தலைவன் செய்த முடிவு:

"நெஞ்சமே, என் காதலி இங்கு தனித்து இருப்ப, நான் மேற்சொல்லப்பட்ட பல சிறப்புக்களை உடைய காவிரிப்பூம்பட்டினத்தையே பரிசிலாகப் பெறுவேனாயினும், திருமாவளவனுடைய செங்கோலைப் போலக் குளிர்ந்த தோள்களை உடைய தலைவியைப் பிரிந்து. அவ்வரசன் பகைவர்மேல் செலுத்தும் வேலைக் காட்டிலும் மிக்க வெப்பத்தை உடைய கானகத்தைக் கடந்து வாரேன்", என்று கூறித் தலைவன் தலைவியைப் பிரிய மனமில்லாது தங்கினான்,

## அருஞ்சொற் பொருள்

செலவை = பயணத்தை, பொய்ப்பினும் — தவறினாலும் கொழிக்கும் — திரட்டும், மருத நிலம் — விளை நிலம். (மருதம் — வயலும் வயல் சார்ந்த இடமும்) கமுகு — பாக்கு, குழை — காதணி. உமணர் — உப்பு வணிகர், பொய்கை குளம்' கோட்டம் — கோவில்,

அமணப்பள்ளி — சமணர் கோவில் இளமரக்கா — பூந்தோட்டம் சோலை, இறைச்சி—ஊன், வைகறை—விடியற்காலை, சுங்கம் — வரிப்பொருள் புலிப்பொறி — புலி இலச்சினை, கூலம் — தானியம், முழவு—மத்தளம், துணித்து—வெட்டி,.அகழ்தல்—தோண்டுதல்.

## வினாக்கள்

1. பட்டினப்பாலை-குறிப்புத் தருக.
2. காவிரியின் வளம் எவ்வாறு கூறப்படுகிறது ?
3. சோழ நாட்டின் வளத்தினை க்டியலூர் உருத்திரங்கண்ணனூர் எவ்வாறு கூறியுள்ளார் ?
4. பட்டினப்பாக்கத்திலுள்ள பரதவர்களின் செயல்கள் யாவை?
5. பண்டகசாலையின் காட்சி எவ்வாறு வருணனை செய்யப் படுகிறது ?
6. மகளிர் விழாக் காணுதலின் மாண்பு ஆசிரியரால் எவ்வாறு அழகு பெறக் கூறப்பட்டுள்ளது ?
7. கடைத் தெருவில் நாட்டப் பெற்றிருந்த கொடிகள் யாவை ?
8. பிற நாடுகளிலிருந்து பூம்புகாரில் இறக்குமதியான பொருள்கள் யாவை ?
9. வேளாளரின் இயல்பு யாது ?
10. கரிகாலனின் வீரத்தைக் கடியலூர் உருத்திரங்கண்ணனூர் எவ்வாறு பாராட்டியுள்ளார் ?

## பயிற்சி

1. 'பட்டினப்பாலை வழங்கும் பலவகைக் காட்சிகள்' என்னும் தலைப்பில் ஒரு கட்டுரை வரைக.

2. 'கரிகாலன் ஆட்சியில் மக்கள் நிலை' என்னும் தலைப்பில் ஆராய்ச்சிக் கட்டுரை ஒன்று எழுதுக.

3. பிரித்து எழுதுக:— தென்திசை, வடதிசை, கருப்பஞ்சாறு

## 16. இழிவும் உயர்வும்

திரு. அன்பு கணபதி

[இவர் சென்னைப் பச்சையப்பர் கல்லூரித் துணைத் தமிழ்ப் பேராசிரியர்; நூல்கள் பல எழுதியுள்ளார்; நிறை புலமையும், சொல் வன்மையும் உடையவர்.]

உலக வாழ்வில் உயர்வுபெற விரும்பா மாந்தர் இலர். உலக மக்கள் அனைவரும் உயர்வையே விரும்புவர். அவ்வுயர்வுக்கு உள்ள ஊக்கமும் உலையா உழைப்பும் இன்றியமையாதன. 'உழைப்பின் வாரா உறுதிகள் உளவோ?' உழைப்புக்கு ஊக்கம் தேவை. ஊக்கமாவது முயற்சி. இம்முயற்சியினை உடையோர் உலகில் உயர்வர். முயற்சி யில்லாதார் தாழ்வர்.

'முயற்சி திருவினை ஆக்கும்; முயற்றின்மை
இன்மை புகுத்தி விடும்.'

என்பது வள்ளுவர் வாய்மொழி. முயற்சிக்கு நல்ல உள்ளம் வேண்டும். மக்களுடைய உள்ளமெல்லாம் உயர்ந்த பொருள்களைப் பற்றியதாக இருக்கவேண்டும். தாமரைத் தண்டினது உயர்வு தாழ்வு குளத்திலுள்ள நீர் மட்டங்களைப் பொறுத்தது. அதுபோல, மக்கள் தம் வாழ்வுத் துறையில் பெறும் உயர்வின் ஏற்ற இறக்கம் அவர்கள் நினைப்பைப் பொறுத்ததே

'வெள்ளத் தனைய மலர்நீட்டம்; மாந்தர்தம்
உள்ளத் தனைய துயர்வு.'

எனவே, மக்கள் உள்ளுவ எல்லாம் உயர்ந்தனவாக இருத்தல் வேண்டும்.

வீரத்தால் மேம்பட்ட இரு தமிழ் மறவர் திருவள்ளுவரைக் காண வந்தனர். இருவரும் ஆற்றல் நிறைந்தவர்; ஆள்வினை யுடையவர். அவர்களிடையே ஓர் ஐயம் எழுந்தது. இருவருள் யார் சிறந்தவர் என்பதை அறிய விரும்பினர். இதற்குத் தீர்வு காணவே அவர்கள் திருவள்ளுவரை

நோக்கினர், இருவரும் தம்முடைய அரிய செயல்களைத் தனித் தனியே வள்ளுவரிடம் எடுத்து விளக்கினர். முதல் மறவன் தலை நிமிர்ந்து மொழிந்தான் :

"அறிஞரே, நாங்கள் இருவரும் காட்டுக்கு வேட்டையாடச் சென்றோம்; கல்லும் முள்ளும் மிகுந்த கானகமெல்லாம் அலைந் தோம், இறுதியில் யான் ஒரு முயலைக் கண்டேன். என்னைக் கண்டதும் அது விரைந்து ஓடத் தொடங்கியது. காற்றினும் கடிது சென்ற அதனைப் பிடிப்பது எனக்கு அருமையாயிற்று. வில்லை வளைத்துக் குறி பார்த்து ஓர் அம்பு எய்தேன். நான் வைத்த குறி தப்பவில்லை. முயல் கீழே விழுந்தது நான் வெற்றி பெற்றேன். எடுத்தசெயலை இனிதுற முடித்த நான் சிறந்த வீரன் அல்லனோ?"

இச் சொற்களைக் கேட்ட வள்ளுவர் இரண்டாமவனை நோக் கினர். அவன் தனது தாழந்த தலையைச் சற்று நிமிர்த்தித் தாழ்ந்த குரலில் சில பகர்ந்தான் :

"பெரியீர் கானகத்தே நானும் சென்றேன். ஆனால், நான் கண்டது ஒரு களிறு. என்னைக் கண்டதும் அப்பெருங் களிறு ஓடவில்லை; பிளிறிக் கொண்டு என்னை எதிர்த்துத் தாக்க வந்தது. அஞ்சாத நான் அதன் மத்தகத்தைக் குறி வைத்து என் கையி லிருந்த வேலினை எறிந்தேன். ஆனால் என் குறி தப்பியது; வேல் களிற்றின் செவியருகே சென்று தைத்தது. வேல் பாய்ந்த வேழம் அலறிப் பின் வாங்கியது; தைத்த வேலுடன் சென்றுவிட்டது. என் குறி தவறியதோடல்லாமல், கைவேலும் போயிற்று; களிற்றையும் இழந்தேன்; வெறுங் கையோடு மீண்டேன்."

இவ்வுரை பகர்ந்த வீரன் மீண்டும் தலை தாழ்த்தி நின்றான். ஆனால், வள்ளுவர் நெருங்கிச் சென்று, அவனைத் தழுவி மகிழ்ந் தார். தோளைத்தட்டிக் கொடுத்தார்; அவன் முகத்தை நிமிர்த்தி மொழியலுற்றார் :

"வீர, விடுக கவலை. வேல் போனால் போகட்டும். உன் ஆற்றலை ஏற்றம் தருவது சிறிய குறிக்கோளை முன் வைத்து முயன்று அதனை அடைவதை விட, உயர்ந்த

குறிக்கோளை எண்ணி உழைத்து அதில் தோல்வியுறுதல் சீரிது. உன் செயலே உயர்ந்தது. உலக மாந்தர் அனைவரும் உன்னை ஒத்த உயர்ந்த பண்பு பெறுவார்களாக!''

"கான முயல்எய்த அம்பினில் யானை
பிழைத்தவேல் ஏந்தல் இனிது."

திருவள்ளுவரின் இச்செம்மொழி, மேற்போந்த அழகிய காட்சியை நம் அகக்கண்முன் கொண்டுவந்து நிறுத்துகிறது.

## வினாக்கள்

1. முயற்சி குறித்துத் திருவள்ளுவர் கூறுவதை எழுதுக.
2. 'உள்ளத்தின் அளவே உயர்வு' என்பதற்குக் காட்டப்படும் உவமை யாது?
3. 'கான முயல்லெய்த'—இக்குறட் கருத்து எவ்வாறு விளக்கப் படுகிறது?

## பயிற்சி

1. வாக்கியத்தில் அமைக்க:—

   ஆள்வினை, தீர்வு, தழுவி, செம்மொழி.

2. இடஞ் சுட்டுக:—

   'வீர, விடுக கவலை, வேல் போனால் போகட்டும்.'

# 17. சிறை நீக்கிய செய்யுள்

டாக்டர் உ. வே. சாமிநாதையர் அவர்கள்

[இவர் பண்டைத் தமிழ் நூல்களைப் பெரிதும் முயன்று தொகுத்து நன்கு ஆராய்ந்து, செவ்விய முறையில் பதிப்பித்து, ஒப்புயர்வில்லாத பதிப்பாசிரியராய்த் திகழ்ந்து மறைந்தவர். இவரது புகழைச் சென்னைக் கடற்கரையிலமைந்துள்ள இவரது சிலை என்றும் நினைவுறுத்துவதாகும்.]

திருச்சிராப்பள்ளியில் சொக்கநாத நாயக்கர் அரசாட்சி செய்து வந்த காலத்தில், திருநெல்வேலிச் சீமையை வடமலையப்ப பிள்ளை யென்பவர் (கி. பி. 1620—1676) பிரதிநிதியாய் இருந்து ஆண்டு வந்தார். அவருடைய அதிகாரத்தின் பெருமையினால் தென்பாண்டி நாட்டில் குடிகள் யாவரும் சுகமாய் வாழ்ந்து வந்தனர். அவரைப் பிள்ளையன் என்றே பெரும்பாலும் வழங்குவர். அவர் தெய்வ பக்தி மிக உடையவர் அவரால். இயற்றப்பட்ட தருமங்களும், தேவாலயத் திருப்பணிகளும், பிற அருமைச் செயல்களும் பல புலவர்களுடைய செய்யுட்களில் மணியைப்போல அமைக்கப்பட்டு அவருடைய புகழை வெளியிட்டுக்கொண்டிருந்தன. அவர் சிறந்த கல்விமானாய் இருந்தார்; தமிழில் நிறைந்த புலமையுடையவர். மச்சபுராணம், நீடூர்த் தலபுராணம் முதலிய சிறு நூல்களை அவர் இயற்றிருக்கிறார்; தமது சிறந்த புலமைக்கேற்பப் பிலவர்களுடைய பெருமையையும், அவர்கள் இயற்றும் செய்யுட்களின் அருமையையும் அறிந்து அவர்களை மதித்துப் போற்றிப் பாதுகாக்கும் தன்மையுடையவர். புலவர்களிடத்தில் பேரன்புடையவராய் அவர் இருந்தமையால், அவரைச் சார்ந்த பலருக்கும் அங்ஙனமே புலவர்களிடத்தில் அன்பு உண்டாயிற்று. அவர் காலத்தில் உத்தியோகஸ்தர்களிற் பலர் சிறந்த தமிழ்க் கல்விமான்களாய் விளங்கினர்கள்; 'மன்னவனெப்படி மன்னுயிரப்படி'. என்பது உண்மையன்றோ?

அக்காலத்தில் தென்திருப்பேரை என்கிற விஷ்ணு ஸ்தலத்தில் உள்ள தலவகார ஸாமவேதிகளாகிய

ஸ்ரீ வைஷ்ணவர்களுள் நாராயண தீக்ஷிதரென்னும் ஒரு வித்துவான் இருந்தார். பல வருஷங்களுக்கு முன் சுந்தர பாண்டியரென்னும் அரசர் பல ஊர்களில் வசித்த நூற்றெட்டுத் தலவகார ஸாமவேதிகளாகிய ஸ்ரீ வைஷ்ணவர்கள் குடும்பத்தைத் தென்திருப்பேரையில் அமைத்து, அக்குடும்பத்தினருக்கு வீடுகளும் நிலங்களும் வழங்கினரென்பர்; அந்நூற்றெட்டுக் குடும்பத்தின் வழி வந்தவர்கள் இன்னும் அவ்வூரில் வாழ்ந்து வருகின்றார்கள்.

மேற்கூறிய நாராயண தீக்ஷிதரென்பவர் அப்பரம்பரையில் வந்தவரே. அவருக்கு நிலம், வீடு முதலிய சொத்துக்கள் இருந்தன. அவர் தம்முடைய குலவொழுக்கத்திற்கேற்ற கடமைகளைச் செய்தும், தமிழ் நூல்களைப் படித்து இன்புற்றும், செய்யுளியற்றியும். தென்திருப்பேரையில் எழுந்தருளியுள்ள ஸ்ரீ மகர நெடுங்குழைக்காதர் என்னும் திருநாமமுள்ள திருமாலைத் தரிசித்து மகிழ்ந்தும் வாழ்ந்து வந்தார்.

இங்ஙனம் இருந்த காலத்தில், வரி வசூலிக்கும் பொருட்டு வடமலையப்ப பிள்ளையினால் நியமிக்கப்பட்ட அதிகாரிகளுள் ஒரு வன்னெஞ்சர், தென்திருப்பேரையிலிருந்த வைஷ்ணவர்களிற் சிலர் வரி செலுத்தவில்லை யென்ற காரணத்தால், அவர்களைத் திருநெல்வேலிக்குக் கொணர்ந்து சிறையுலிட்டார். அவர்களுள் நாராயண தீக்ஷிதரும் ஒருவர். அவர்கள் தாம் வரிகொடாமைக்குக் காரணங்களை மிகவும் பணிவாகக் கூறி, இயன்ற காலத்திற் செலுத்திவிடுவதாக நயந்து கேட்டுக்கொண்டும், அவ்வதிகாரியின் மனம் இளகவில்லை; ஒரே பிடிவாதமாகச் சிறையிலிட்டுக் காவல் வைத்துவிட்டார். அச்சிறைக்கூடம் இருந்த தெருவிற்கு இப்போது காவற்புரைத் தெரு என்னும் பெயர் வழங்கி வருகிறதாம்.

சிறைப்பட்ட நாராயண தீக்ஷிதர், 'நம்முடைய பிராப்த வினையின் பயனாக இந்தத் துன்பம் வந்தது!' என்று எண்ணி ஏங்கினார். சுதந்தரமான வாழ்க்கையும் நாள்தோறும் அதுவரை செய்து வந்த குழைக்காதர் தரிசனமும் அவருக்கு அப்பால் இல்லாதனவாயின. 'நாம் எவ்வளவோ நயந்து கல்லும் கரையும்படி கேட்டுக் கொண்டும், இந்தத்

கொடியவன் இரங்கவில்லையே! இனி என் செய்வோம்! எல்லாத் துன்பத்தையும் நீக்கிப் பாதுகாக்குங் குழைக்காதரே நமக்குக் கதி. இந்தக் கொடியவனிடம் செய்து கொண்ட விண்ணப்பம் இவன் காதில் சிறிதும் ஏறவில்லை. இனிமேல் குழைக்காதர் காதில் ஏறும் வண்ணம் விண்ணப்பித்துக் கொள்வதுதான் முறை.' என்று தெளிந்தார். அதுமுதல் ஒவ்வொருநாளும் குழைக்காதர் விஷய மாக மனமுருகிச் செய்யுட்கள் சிலவற்றை இயற்றித் திருப்பித் திருப்பி வாயாரச் சொல்லிப் பிரார்த்திக்க ஆரம்பித்தார். அவரைப் பார்த்து உடன் இருந்தவர்களும் சில செய்யுட்களை இயற்றத் தொடங்கினார்கள்.

நாராயண தீக்ஷிதர் 'குழைக்காதர் பாமாலை' என்று பெயரிட்டு, தம்முடைய செய்யுட்களை முறையாக அமைத்து வந்தார். 'குழைக்காதரைப் பிரிந்திருக்கும் கொடிய காலமும் வந்ததே!' என்று அவர் எண்ணி நைந்தார்.

'கன்றுக் கிரங்கிய கற்றுவைப் போலக் கருணையுடன்
என்றைக் கிரங்குவ ரோவறி யேனெழு பாருமுய்யக்
குன்றக் கவிகை யெனத்தரித் தோர்குழைக் காதரையான்
சென்றெப் பொழுது தொழுவதும் பாவங்கள் தீர்வதுமே?'

என்பது பாமாலையிலுள்ள முதற் பாட்டு. இதில், 'குழைக்காதரை யான் சென்று தொழுவதும் பாவங்கள் தீர்வதும் எப்பொழுது?' என்று அவர் உள்ளந் துடித்து பாடியிருக்கின்றார்.

சிறை வாழ்க்கையை மேறகொண்டு ஒரு மாத காலம் ஆயிற்று, ஒரு வழியும் தோன்றவில்லை.

தம்முடைய ஊரில் பெருமாள் சந்நிதியில் நான்மறை முழக்கமும், திவ்வியப் பிரபந்த முழக்கமும் கடல் முழக்கம் போல நிறைந்து விளங்குமென்பதை அவர் எண்ணிக் கொண்டு 'அந்தத் திவ்விய சத்தங்களைக் கேட்டு ஈடுபடாமல், இங்கே அழுகையொலியும் சிணுங்குஞ் சத்தமும் அதிகாரத் தொனியும் கேட்டுத் துன்புறுந் தலைவிதி நமக்கு வாய்ந்ததே!' என்று புலம்பினார்; 'குழைக்காதர் அருள்

செய்வார்; அருள் செய்வார்! இன்றைக்குள் ஏதாவது நன்மை ஏற்படும்; நாளைக்கு அனுகூலம் உண்டாகும்'. என்று எண்ணி ஏமாந்தார்.

வடமலையப்ப பிள்ளையன் நல்ல நீதியுடையவரென்றும், தமிழ் அன்புடையவரென்றும் அறிந்தவராதலின், தாமும் பிறரும் சிறையில் இருப்பதை அவர் அறிந்தால், அவரால் நன்மையுண்டாகுமென்ற நினைவு தீக்ஷிதருக்கு உண்டாயிற்று. அப்பொழுது அவருக்குத் தெரிவிப்பவர் ஒருவருமில்லையே!'' என்ற எண்ணம் அடுத்தாற்போலத் தோன்றியது.

இப்படிச் சில நாள் கழிந்தன. புதிய செய்யுள் இயற்றி மனங் கரைந்து பாடுவதும், முன்பே இயற்றியுள்ள பாடல்களைப் பாடிப் புலம்புவதும், நாராயண தீக்ஷிதர் வழக்கமாயின. அந்தச் சிறைக் கூடக் காவலதிகாரி தமிழறிவுடையவர். ஒரு நாள் நாராயண தீக்ஷிதர் 'வள்வார் முரசதிர் கோமான்' என்ற செய்யுளை மட்டும் சொல்லிக் கொண்டிருந்தபோது, அவ்வதிகாரியின் காதில் அது பட்டது. 'நம்முடைய எசமான் பெயர் இந்தப் பாட்டில் அமைந்திருக்கிறதே! உள்ளே இருப்பவர் தமிழ் வித்துவான் போலத் தோன்றுகிறதே!' என்று எண்ணினார். தமிழ்ப் புலவர்க்கு மரியாதை செய்வதும், அவர்களுக்குக் குறைவு வராமற் பாதுகாப்பதும் பிள்ளையனுக்கு உவப்பான காரியங்களாதலின், அதிகாரி உடனே சென்று தமிழ் வித்துவானொருவர் சிறையில் இருப்பதையும், அவர் பிள்ளையன் பெயரைப் பாட்டிற் கூறிப் புலம்புவதையும் எசமானரிடம் சென்னார்.

அவர் சொன்னதுதான் தாமதம்! தண்டமிழ் வாணர் துயரத்தைக் கேட்கப் பொருத வடமலையப்ப பிள்ளையன் எல்லாக் காரியங்களையும் விட்டுவிட்டு உடனே தம் குதிரை மீதேறிக் கொண்டார்; சிறைக்கூடத்தை நோக்கி விரைந்து வரலானார்.

சிறிது நேரத்திற்குள் குதிரை சிறை வாயிலில் வந்து நின்றது. பிள்ளையன் சிறைக்கூடத்தைத் திறக்கச் செய்து உள்ளே சென்றார்; அப்பொழுதும் குழைக்காதர் திருவடி

களைத் தியானித்துக் கொண்டு பாட்டுப்பாடிய வண்ணம் கண்ணுங் கண்ணீருமாய் அங்கேயிருந்த புலவரைக் கண்டார். அவருடைய நிலை, பிள்ளையன் நெஞ்சில் உருக்கத்தையும் கண்ணில் நீரையும் உண்டாக்கிற்று; 'குழைக்காதரை நினைத்துத் தமிழ்க் கவியால் முறையிடும் இந்தப் புலவர் பெருமானைப் பற்றி இதுகாறும் அறிந்து கொள்ளவில்லையே! நாம் தமிழறிந்ததனால் என்ன பயன்? இவர் எத்தனை நாட்களாக இங்ஙனம் துன்புறுகின்ருரோ!' என்று மனம் வருந்தினுர்; அவரை நோக்கி அவர் வரலாற்றை வினவினுர்; அவரது வாய்மொழியால் எல்லாம் தெளிந்தார்.

பிள்ளையன் உத்தரவினுல் பல வண்டிகள் சிறை வாயில் வந்து நின்றன. நாராயண தீக்ஷிதரும் அவருடன் இருந்த வேறு தமிழறிஞர்களும் அவற்றில் ஏறிக்கொண்டார்கள். பிள்ளையன் தீக்ஷிதரையும் பிறரையும் தம் அரண்மனைக்கு அழைத்துச் சென்று உபசரித்தார்; அவர் கொடுக்க வேண்டிய வரியை நீக்கியதோடு, அவர் நிலங்களை என்றும் வரியுல்லாத இனும் நிலங்களாகச் செய்து விட்டார்.

தீக்ஷிதர் பாடிய பாமாலையை பிள்ளையன் கேட்டார். அப்புலவருடைய மனம் எவ்வளவு வருந்தி நைந்திருக்க வேண்டுமென்பதை அச்செய்யுட்கள் நன்ருக எடுத்துக் காட்டின. அதுகாறும் அறுபத்தைந்து பாடல்கள் இயற்றப்பட்டிருந்தன. பிள்ளையன் தீக்ஷிதரைப் பார்த்து, 'இந்நூலை முற்றும் பாடி முடிக்கவேண்டும்.' என்று விரும்பினுர். அப்படியே அப்புலவர் பின்னும் முப்பத்தைந்து செய்யுட்களை இயற்றி நூறு பாடலாகப் பூர்த்தி செய்தனர்.

தாம் சிறைக் கூடத்திலிருந்து முறையிட்ட முறையிடு குழைக்காதர் காதில் விழுந்தமையால், அப்பெருமாள், பிறர் காதுகளிலும் விழும்படி செய்து சிறைத் துன்பத்தை நீக்கி அருளினுரென்று தீக்ஷிதர் உறுதியாக நம்பினுர். அதனுல், சிறையிலிருந்து விடுதலை பெற்ற பின்பு பாடிய செய்யுட்களில் குழைக்காதர் தம் துன்பத்தைப் போக்கியருளியதாகச் சொல்லியிருக்கிருர். விடுதலை பெற்ற நிலையில் பாடிய

முதற் பாட்டிலேயே

"ஆடகச் சேவடி யாலெம தாவி யளித்தனைகார்க்
கோடகப் பாவிகள் வாராமற் காத்தினை"

என்று குறிப்பிட்டிருக்கின்றார். இதில். "கார்கோடகப் பாவிகள்' என்றது, தம்மைச் சிறையிலிட்ட அதிகாரியையும் அவரை சார்ந்தவர்களையுமே யென்று தோற்றுகின்றது.

இந்தப் பாமாலை தென்திருப்பேரை முதலிய இடங்களில் பலரால் மிக்க பக்தியோடு பாராயணம் செய்யப்பட்டு வருகிறது. அங்ஙனம் செய்வதனாற் சில துன்பங்கள் நீங்கி இன்பம் உண்டாவதாகச் சிலர் கூறக் கேட்டிருக்கின்றேன். பள்ளிக்கூடத்திலும் முன் காலத்திலே இது பாடமாய் இருந்து வந்தது.

## அருஞ்சொற் பொருள்

மகர நெடுங்குழை-சுறுமீன் வடிவிலமைந்த நீண்ட குண்டலம். தண்டமிழ் — தன்னைப் பயில்வார் மனத்தைக் குளிர்விக்கும் தமிழ் மொழி, பாமாலை—பாக்களால் தொடுக்கப் பெற்ற துதி நூல், கற்று—கன்றையுடைய பசு. கவிகை—குடை, ஆடகம்—பொன், சேவடி—செம்மையார்ந்த திருப்பாதங்கள், கார்க்கோடகன்—கொடிய பாம்பு.

## வினாக்கள்

1. நாராயண தீக்ஷிதரின் வரலாற்றால் நீவிர் அறிவனவற்றை எழுதுக.

2, வடமலையப்ப பிள்ளையன் குணநலங்களை விளக்குக,

3. நாராயண தீக்ஷிதரே தம் வரலாற்றைக் கூறுவதுபோல இவ்வரலாற்றை மாற்றி எழுதுக.

# 18. ஐக்கிய நாட்டுக் கழகம்

புலவர் மா. அய்யாவு

[இவர் திருமழபாடிக் கழக உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராய்த் தொண்டாற்றுபவர்; நல்லறிஞர்; கட்டுரை வண்மை கைவரப் பெற்றவர்; சிறந்த நூலாசிரியர்.]

தன் அறிவு காரணமாகப் பிற உயிரினங்களைக் காட்டிலும் மேம்பட்டு வாழ்கின்ற மனிதன், கூடி வாழ்கின்ருனு? இல்லையே! 'போதும் என்ற மனமே பொன் செய்யும் மருந்து' என்பது தமிழகத்துப் பழமொழி. ஆனுல், மனிதன் போதுமென்ற மனமின்றி, பேராசை மிக்கு பொருள் பொருள் என்று அல்லும் பகலும் அலைந்து திரிகிருன். அன்பையும் அமைதியையும் வளர்த்து, இன்பமும் மகிழ்வும் பெற வேண்டிய மனிதன், ஆசையென்னும் தீக்குணத்திற்காளாகி இப்படி அவதியுறுவதைக் கண்ட ஆன்ருேர் மனம் புழுங்குகின்றனர். அனைத்துயிரும் தம்முயிர் போல் எண்ணி வாழ்ந்த தாயுமானுர், மனிதனது இப்போக்கை எண்ணி வருந்திப் பேசுகின்ருர்: "மனிதனது ஆசைக்கு அளவேயில்லை, இவ்வுலகம் முழுவதையும் கட்டியாண்டாலும், அதில் அமைதி பெருமல், கடல் மீதிலும் ஆணை செலுத்த விரும்புகின்ருன். குபேரனைப் போன்ற செல்வமுடையவனும், இரசவாத வித்தை கற்று, இரும்பையெல்லாம் பொன்னுக்க விருமபுகின்ருன்' நீண்ட காலம் வாழ்ந்துவிட்டவனும் இன்னும் பல்லாண்டுகள் வாழ, 'காய கற்பம்' என்னும் மருந்தைத் தேடியலைகின்ருன். என்னே அவனது ஆசை!" என்று அவர் கூறுகிருர். இதற்குத் தீர்வும் அவர் கூறுகிருர். 'உள்ளதே போதும் என்றெண்ணி, பெற்றதைக் கொண்டு மகிழ்ந்தின்புறுவதே ஏற்ற வழி.' என்கிருர் அவர். ஆம்! மனிதன் உள நோய்க்கு இன்றியமையாத மருந்துதான் அவர் கூறும் நெறி. வாழ்க அவருள்ளம்!

மனிதனது இந்த அவலநிலையை எண்ணித் துறவிகள் மட்டும் வருந்தவில்லை. அரசியல் மேதைகளும் வருந்தினுர்கள். விலங்கொடு விலங்காய் வாழ்ந்த மனிதன், காலப் போக்கில் பல துறைகளில் நாகரிகம் பெற்று, பல வேறு நலங்

களையும் முன்னேற்றங்களையும் பெற்றிருக்கிறான்; உணவு, உடை இருப்பிடம், பிற வாழ்க்கைத் தேவைகள் ஆகிய அத்தனை வகைகளிலும் முன்னேறியுள்ளான். நீரில் நீந்த, விண்ணில் பறக்க, தொலைவில் பேச—இப்படிப் பல துறைகளில் முயன்று வெற்றி கண்டான். ஆனால், அன்பையும் அமைதியையும் பெற அவனால் முடியவில்லை. இன்பத்தையும் மகிழ்ச்சியையும் எங்கெங்கோ தேட வேண்டியிருந்தது! இதற்கெல்லாம் காரணம் அவனது ஆசையும் அது காரணமாய் எழுந்த போருணர்ச்சியுமேயாம். போர்! போர்! பெரிய வல்லரசுகட்கிடையே போர்! மக்கள் இறப்பு, மாபெருஞ் செல்வம் அழிவு, இப்படிப் பல சீரழிவுகள்! நாடுகள் பல அழிந்தன, மக்கள் எல்லையற்ற வேதனை அடைத்தார்கள், உள்ளமுடைய ஒரு சிலர் இவற்றை எண்ணிப் பார்த்தனர்; வாழப் பிறந்த மனிதன் இப்படிப் போர்த் துன்பத்தில் ஆழ்வதை அறிந்தனர்; இதற்கு நிலையான ஒரு தீர்வு காணவும் விரும்பினர். அவ்விருப்பத்தின் விளைவே ஐக்கிய நாட்டுக் கழகம்.

1939முதல் 1945 முடிய இரண்டாம் உலகப் பெரும் போர் நடைபெற்றது. ஓரளவு விஞ்ஞான அறிவும் திறனும் பெற்றுவிட்ட காலம் அது. வல்லரசர்கள் சிலர் ஒன்றை யொன்று மிஞ்ச முற்பட்டன. அதன் விளைவாகவே அப்போர் எழுந்தது. ஏறத்தாழ ஆறாண்டுகள் நடந்த அப்போரின் விளைவும் கொடுமைகளும் சொல்லுந்தரத்தனவல்ல: எல்லையற்றவை. போரில் தொடர்பு கொண்ட நாடுகள் மட்டுமே துன்புற்றன. என்பதன்று; உலக நாடுகள் அனைத்துமே துன்புற்றன. போரில் தொடர்பு கொள்ளாத, போரைப்பற்றிக் கவலை கொள்ளாத—கவலை கொள்ள வேண்டாத—நாடுகளும் துன்புற்றன. விலைவாசி ஏற்றம், பொருள்கள் கிடைக்கப் பெறாமை, தேவையான பொருள்களின் அழிவு, நாட்டில் அமைதியின்மை, ஆக்க வேலையிற் கவனஞ் செலுத்த இயலாமை, எதிர்கால மக்களாம் இன்றைய குழந்தைகளின் வாழ்வு கெடல் முதலியவற்றால் உலக நாடுகள் அனைத்துமே துன்புற்றன. அமெரிக்க மக்கள் தலைவர் ஜனாதிபதி உருசுவெல்டு, பிரிட்டிசு பிரதம

மந்திரி சர்ச்சில் ஆகிய அரசியல் மேதையர் இருவரும், 1941-ஆம் ஆண்டு. ஆகஸ்டுத்திங்கள் 15-ஆம் நாள் அட்லாண்டிக் கடலில் கப்பலிலிருந்தவாறே ஒருவரையொருவர் சந்தித்துப் பேசினர்; தம் கருத்துக்களைக் கலந்து பரிமாறிக் கொண்டனர்; போரை நிறுத்தும் முயற்சியில் தம் பேராற்றலைச் செலவிடுவதென முடிவு செய்தனர்; 'அட்லாண்டிக்குச் சாசனம்' என்னும் பெயரில் ஒப்பந்தம் ஒன்றெழுதிக் கையெழுத்திட்டனர்; உலக நாடுகளில் பூரண சுதந்தரத்தை வளர்ப்பது பொருளாதார வளர்ச்சிக்குச் சம உரிமையும் வாய்ப்பும் தருவது, சமூகப் பாதுகாப்பு, தொழிலாளர் நலனைப் பேணுதற்குப் பூரண ஒத்துழைப்பு, வியாபார உரிமை முதலியவற்றை உலக நாடுகளில் பரவச் செய்ய விரும்பினர். இவ்வெண்ணங்கள் நிறைவேற உலகப் பொது நிலையம் ஒன்றை அமைப்பதன் அவசியத்தை யுணர்ந்தனர்; அதற்கு ஆவன செய்தனர்.

புதிய உலகப் பொது நிலையத்திற்காக 1945-ஆம் ஆண்டு ஜூன் திங்கள், 25ஆம் நாள் சான்பிரான்சிஸ்கோவில் 50 நாடுகளின் சார்பாளர் (Representatives) ஒன்று கூடினர்; உலக நலத்திற்கான பல்வேறு திட்டங்கள் குறித்து ஆய்ந்தனர். அரசியல் வானில் ஒளி வீட்டு விளங்கும் மேதையர் பலருடைய கருத்துக்கள் ஆராயப்பட்டு முடிவு செய்யப் பெற்றன. மக்கள் வாழ்வுத் துறையின் ஒவ்வொரு நிலையும் பற்றி ஆராயப் பெற்றது. இன்றியமையாத திட்டங்கள் பல வகுக்கப் பெற்றன.

ஆடவர் பெண்டிர் உரிமை, சுதந்திரம் பொருளாதாரம் ஆகிய இவற்றின் வளர்ச்சிக்கு உதவுதல், சமரச மனப்பான்மையை வளர்த்தல், மக்கள் நலத்தின் பொருட்டு இராணுவத்தை அமைத்தல், எவ்விதச் சச்சரவுகளையும் சமாதானமாகத் தீர்த்துக் கொள்ளுதல், ஆகிய இவை அவர்கள் ஆய்ந்து செய்த சிறந்த முடிவாகும்.

இம்முடிவுகளைச் செயற்படுத்த பல நாட்டுத் தலைவர்கள் ஒன்று கூடி, ஐக்கிய நாட்டுக் கழகம் என்னும் பெயரில் ஒரு கழகத்தை அமைத்தனர். முதற் போரின் இறுதியில்

தோன்றிய பன்னாட்டுக் கழகம் (League of Nations) போர் ஒழிப்பினை உலகில் நிலைநாட்ட முடியாது போனதை மனதிற் கொண்டு அக்குறைகள் இதில் இடம் பெறாதவாறு சிந்தித்துத் திட்டம் வகுத்து, ஐக்கிய நாட்டுக் கழகத்தை அமைத்தனர். இக் கழகம் முதலில் 'லேக் சக்ஸஸ்' என்னுமிடத்தில் தன் அலுவல்களைத் தொடங்கிற்று. இப்பொழுது அமெரிக்காவில் நியூயார்க்கிற்கு அருகில் பல நாடுகட்கும் உரிமையுடைய ஓர் இடத்தில இக்கழகம் இருந்து, தன் பணியைச் செய்து வருகிறது இக்கழகம் செயலாற்ற வேண்டிய அலுவல்களை யொட்டிப் பல பிரிவுகளாகப் பிரிக்கப் பெற்றுள்ளது. அவற்றுள் முக்கியமானவற்றைப் பற்றிக் காண்போம்:

பொதுப் பேரவை (General Assembly): இப்போது ஐக்கிய நாட்டுக் கழகத்தில் 82 நாடுகள் சேர்ந்துள்ளன. இந்த 82 நாடுகளின் சார்பாளர்களையும் உறுப்பினர்களாகக் கொண்டதே பொதுப்பேரவையாகும். அரசியல், பொருளாதாரம், சமூக நிலை, கலை வளர்ச்சி முதலியனபற்றி ஆலோசனைகள் கூறுவதும், பாதுகாப்பு மன்ற உறுப்பினர்களைத் தேர்ந்தெடுப்பதும், வேண்டிய அலுவலர்களை அமர்த்துவதும், வரவு செலவு முறைகளைக் கண்காணிப்பதும் இதன் முக்கிய அலுவல்களாகும். இம் மன்றத்துக்கு ஆண்டுதோறும் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுப்பர். இந்த ஆண்டுக்குப் பெரு நாட்டைச் சார்ந்த விக்டர் ஆண்ட்ரக்ஸ் பெலண்டே என்பவர் தலைவராகத் தேர்ந்தெடுக்கப் பெற்றுள்ளார். இச்சபை ஆண்டுக்கு ஒரு முறையாவது கூடவேண்டும் அவசியமானால், வேண்டும்போது இச்சபை கூடலாம்.

பாதுகாப்பு மன்றம் (Security Council): இம்மன்றம் பதினோர் உறுப்பினர்களைக் கொண்டது. அமெரிக்கா, பிரிட்டன், உருசியா, பிரான்சு, சீனா (தேசீய சீனா) ஆகிய இவ்வைந்து நாட்டுச் சார்பாளர்களும் இதன் நிலையான உறுப்பினராவர். மற்ற ஆறு உறுப்பினர்களைப் பொதுச்சபை இரண்டாண்டுகட்கு ஒருமுறை தேர்ந்தெடுக்கும். தேர்தல் உண்டாகாதபடி தடுத்தலும், போர் வருவதற்கான

சூழ்நிலையிருந்தால், முன் கூட்டியே ஆய்ந்து தீர்த்தலும், இன்றியமையாத உலக நெருக்கடிகளைப் பற்றி ஆராய்தலும், அனைத்துலக நீதிமன்றத்தின் தீர்ப்புகளை அமுலுக்குக் கொண்டு வருதலும் ஆகியன இம்மன்றத்தின் தலையாய அலுவல்களாகும்.

பொறுப்பாட்சி மன்றம் (Trusteeship Council): பிற நாடுகளின் ஆதிக்கத்திற்குட்பட்ட நாடுகளில் உள்ள அனுபவமற்ற மக்களைப் பல துறைகளிலும் முன்னேறச் செய்து, அவர்கள் தங்கள் நாட்டைத் தாங்களே ஆண்டு கொள்ளும் திறன் பெற்றவுடன் அவர்களுக்குரிமை வழங்குதல் இம்மன்றத்தின் வேலையாகும்.

ஐக்கிய நாடுகளின் கல்வி சமுதாயப் பண்பாட்டு மன்றம் (United Nations Educational, Social and Cultural Organization): உலக மக்களின் பொருளாதார சமூக நலங் கருதிய பல நல்ல முறைகளைச் செயற்படித்துவதும், நாகரிகம், பண்பாடு முதலியவற்றை வளர்ப்பதும், இம் மன்றத்தின் அலுவல்களாம். நாடுகள் பொருளாதாரத்தில் மட்டுமின்றி, தொழில் துறைகளில் மட்டுமன்றி, முன்னேற்ற வாழ்வின் அடித்தளமாக விளங்கும் பண்பாடு நாகரீகம் முதலியவற்றிலும் சிறந்து விளங்குதல் இன்றியமையாத தன்றோ? அவற்றை வளர்க்கும் இம்மன்றம் சிறந்த பணியாற்றி வருவதாகும்.

அனைத்துலக நீதிமன்றம் (International Court of Justice): இந்நீதி மன்றம், இப்பொழுது ஹேகு (The Hague) என்னும் நகரில் உள்ளது. ஐக்கிய நாடுகளிடையே ஏற்படும் வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பு வழங்குவது இதன் அலுவலாகும். ஐக்கிய நாடுகளிடையே தோன்றும் வழக்குகளை நன்கு ஆராய்ந்து, குற்றம் குறைகளைக் கண்டுபிடித்து, ஏற்ற வழிகளைக் காட்டுவதற்கு இந்நீதி மன்றம் இன்றியமையாது வேணடப்படுவதாகும். இந்த உலக நீதி மன்றத்தில் பதினைந்து நடுவர்களிருப்பார்கள். அவர்கள் பொதுச் சபையால் மூன்றுண்டுகட்கு ஒரு முறை ஐந்தைந்து பேர்களாகத் தேர்ந்தெடுக்கப்படுவார்கள்.

ஐக்கிய நாட்டுக் கழகத்தின் முதற் கூட்டம் இலண்டனில் 1946 ஆம் ஆண்டு நிகழ்ந்தது. ஆறும் ஜார்ஜ் மன்னர் அக்கூட்ட நிகழ்ச்சிகளைத் தொடங்கி வைத்தார். அதன் பின்னர் பலமுறை இக்கழகம் கூடி, பல பணிகளை ஆற்றி வருகின்றது.

ஐ. நா. வின் அலுவல்களைக் கவனிக்க ஐக்கிய நாடுகள் (United Nations) என்னுமிடத்தில் ஓர் அலுவலகம் உள்ளது. 'தாக் ஹாமர் ஷீல்டு' என்பவர் இப்பொழுது செயலாளராய் இருந்து பணியாற்றி வருகின்றார்.

ஐ. நா. கழகம் இதுவரை தன் பேராற்றலால் சாதித்து வந்துள்ள சாதனைகள் குறிப்பிடத் தக்கனவாகும். வடகொரி யருக்கும் தென்கொரியருக்குமிடையே உண்டான போரைத் தடுத்து நிறுத்தியது உலக வரலாற்றில் சிறப்பிடம் பெறுவதாகும். வடகொரியருக்குத் துணையாக உருசியாவும், தென்கொரியருக்குத் துணையாக அமெரிக்காவும் தம் நாட்டுப் படைகளை அனுப்பி வைத்தன. இந்நிலையில் ஐ. நா கழகம் தலையிட்டு. இரு நாட்டுப் படைகளையும ஒரு குறிப்பிட்ட எல்லைக்கப்பால் கொண்டு போய் நிறுத்தி, ஒன்றையொன்று தாக்கா வண்ணம் தடுத்து, பாது காப்புப் படையையும் நிறுத்தி வைத்தது. இதனால் ஒரு பெரிய உலகப் போரையே ஐ நா. தவிர்த்தது என்பது மிகையாகாது.

இது போன்ற வடதென் வியட்நாம் நாடுகளிடையே உண்டான பூசலை ஐ. நா. கழகம் தடுத்து, நடுவு நிலைப்படை யொன்றை யனுப்பி, உலக அமைதியை நிலைநாட்டியது. இந்த நடுவுநிலைப் படையில் நமது இந்திய நாட்டுப் படையும் இடம் பெற்றதோடல்லாமல், பெரும் பொறுப்பையும் வகித்தது என்பது பெருமைக்குரியதாகும்.

அடுத்தபடி சூயஸ் கால்வாய் பற்றிய தகராறுகளைத் தீர்த்து வைத்து, ஐ. நா. கழகம் ஆற்றிய பணி சிறப்புடைய தாகும். எகிப்து நாட்டிலுள்ள சூயஸ் கால்வாயைத் தேசிய மயமாக்கியது அந்நாடு, இதை யெதிர்த்து தனக்கே உரிமை இயன்றது பிரிட்டன், இதனாலுண்டான சிக்கலைத் தீர்த்து

இரு நாடுகளும் ஏற்றுக்கொள்ளும் வண்ணம் வழி வகுத்துச் செயற்படுத்தியது ஐ. நா. கழகம். இவை போன்று ஐ. நா. கழகம் ஆற்றிய—ஆற்றி வருகின்ற—சாதனைகள் பலவாகும்.

இவற்றைத் தவிர, ஐக்கிய நாடுகள் கல்வி சமுதாயப் பண்பாட்டு மன்றத்தின் கீழ் உலக வங்கி, உலக நாணய நிதி நிலையம், உலகத் தொழிலாளர் அமைப்பு, உலக உடல் நல அமைப்பு முதலிய பல பிரிவுகளை அமைத்துப் பல்வேறு துறைகளில் ஐ. நா. கழகம் பணியாற்றி வருகின்றது.

ஐ. நா. கழகத்தின் இன்றைய பெரும் பொருப்புக்களாக இருப்பவை அணு ஆயுதத் தடை, படை வலிக் குறைப்பு திபேத்து காசுமீர் முதலிய நாடுகள் பற்றிய சிக்கல்கள், பொதுவுடைமைச் சீனவிற்கு ஐ நா வில் இடமளித்தல் முதலியனவாகும், இவற்றைத் தக்க முறையில் தீர்த்துச் செயற்படுவதன் மூலமே ஐ நா.வின் வெற்றி அமைய முடியும்.

போரொலிப்பு, உலக அமைதி முதலியன குறித்து, இன்று உலக வல்லரசுகள் பல உணரத் தொடங்கியிருப்பது வரவேற்கத் தக்கதாகும். தொழில் வளத்திலும், விஞ்ஞானத் துறையிலும், பொருளாதார நலத்திலும் சிறந்து விளங்கும் நாடுகளான உருசியா, அமெரிக்கா முதலிய நாடுகள் உலக அமைதியை நிலை நாட்டப் பலவாறு முயன்று வருகின்றன என்பதையறிவோம். ஆன்ம உணர்வையும் ஐவகை யொழுகக் (பஞ்ச சீலம்) கொள்கையையும் அடிப்படையாகக் கொண்ட நமது இந்திய நாடு, உலக அமைதிக்கான வழிகளில் தன் பெரும் பங்கை ஆற்றி வருவது, இவண் குறிப்பிடத்தக்கதாகும்.

உலகில் ''பசியும், பிணியும், பகையும் நீங்கி, வசியும் வளனும் சுரக்க'' இன்றியமையாது வேண்டப்படுவது அமைதி, இத்தகைய அமைதியைக் காக்க, உலக நாடுகள் அனைத்தும் ஒன்றுபட்டு வாழ வேண்டும். அதற்குத் துணையா—வழியாக—இருப்பது, ஐ. நா. கழகம். இவ்வாறு உலக நலத்துக்கும் அமைதிக்கும் பாடுபட்டு வரும் ஐக்கிய நாட்டுக் கழகத்தின் பெருஞ் சிறப்பையுணர்ந்து ஏற்றவாறு நடந்து, பயன் பெற்று உலகு உய்யுமாக! அன்பு வளர்க! அமைதி நிலவுக!

## வினாக்கள்

1. ஐக்கிய நாட்டுக் கழக அமைப்பின் வரலாற்றைச் சுருக்கி வரைக

2 சான்பிரான்ஸிஸ்கோவில் கூடிய 50 நாடுகளின் சார்பாளர்கள் வகுத்த திட்டங்கள் யாவை?

3. குறிப்பெழுதுக:— பொதுப் பேரவை, பாதுகாப்பு மன்றம், பொறுப்பாட்சி மன்றம், அனைத்துலக நீதிமன்றம்.

4. ஐ. நா. கழகம் இதுகாறும் நிறைவேற்றிய சாதனைகள் யாவை?

# 19. நமது நாட்டுக் கப்பற்கலை

திரு. த. சே. உமாபதி, எம். ஏ., எல். டி., டிப். இன் ஜாக்.

[இவர் சென்னை அப்துல் ஹக்கீம் உயர்நிலைப் பள்ளித் தலைமையாசிரியர். நூல் பல இயற்றியவர்; தமிழ்ப் புலமையுடையவர்.]

## முன்னுரை

கப்பற்கலை நமது நாட்டுக்கு புதியதன்று. ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னர் ஆரியர் சிந்து யாற்றங்கரையில் குடியேறினர் என்பதை நாம் அறிவோம். அதற்கு முன்னரே நமது நாட்டின் எல்லாப் பகுதிகளிலும் திராவிடர் வாழ்ந்து வந்தனர் என்பது வரலாறு கூறும் உண்மை. சிந்துவெளி நாகரிகத்துக்கும் திராவிட மக்கட்கும் தொடர்பு உண்டு என்பதை வரலாற்றறிஞர் பலர் வற்புறுத்தியுள்ளனர்.

## மொகஞ்சோதாரோ காலம்:

வடநாட்டில் சிந்து யாற்றின் மேற்குக் கரையில் உள்ள மொகஞ்சோதாரோவிலும் ரவியாற்றின் மேற்குக் கரையில் உள்ள ஆரப்பாவிலும் சில ஆண்டுகட்குமுன் தொல்பொருட் கலைஞர் நிலத்தை அகழ்ந்து கண்டெடுத்த சில இலச்சினைகளிலும், பிற பொருள்களிலும் தோணிகளின் உருவங்கள் காணப்படுகின்றன. எனவே, ஏறத்தாழ ஐயாயிரம் ஆண்டுகட்கு முற்பட்ட திராவிட நாகரிகம் என்று கருதப்படும் மொகஞ்சோதாரோ நாகரிகத்தோடு நீர் நிலை கடக்கும் சிறு கலங்கள் தொடர்புற்றிருநதன என்பது தெள்ளிதற் புலனுகின்றது. இதனுல் நமது நாட்டில் ஐயாயிரம் ஆண்டுகட்கு முன்னரே கப்பற்கலை பிள்ளைப் பருவத்தில் இருந்ததென்று கூறுவது உண்மைக்கு மாருனதன்று.

## வேத காலம்:

இதையடுத்து வேத காலத்து ஆரியர்களும் கலனைப் பயன்படுத்தியுள்ளனர் என்பது பற்றிய செய்திகள் பல வேத

இலக்கியங்களில் காணப்படுகின்றன. எடுத்துக்காட்டாக, அதர்வ வேத சங்கிதையிலுள்ள ஒரு பாவால், குற்றமற்ற முறையில் அமைக்கப் பெற்றவையும், அகன்றவையும், வசதியுள்ளவையும், துடுப்புக்களால் உந்தப் பெற்றவையுமான படகுகளைப் பற்றிய திட்டவட்டமான குறிப்புகள் அறியப்படுகின்றன.

## பாலி இயக்கம்:

பின்னர்க் கிறித்து பிறப்பதற்கு முன்னரே வங்க நாட்டினின்று சிங்கள நாட்டிற்குச் சென்ற விசயன் என்பவன் தன்னுடைய துணைவர்களோடு சென்ற மரக்கலம் எழுநூற்றுவர் ஏறிச் செல்லத் தக்க அத்தனை பெரியதென்று 'ராசவல்லி' என்னும் பாலி நூல் பகர்கின்றது. இதுவன்றி, எண்ணூறு முழ நீளமும், அறுநூறு முழ அகலமும், நூற்றிருபதடி ஆழமும், மூன்று பாய்மரங்களும் கொண்ட மரக்கலம் ஒன்றைப்பற்றிச் 'சங்க சாதகம்' என்னும் பாலி நூல் வருணிக்கின்றது.

## மௌரிய காலம்:

கிறிஸ்து பிறப்பதற்கு முந்நூறு ஆண்டுகட்கு முன்னர் மௌரிய வமிசத்தவர் இந்தியாவில் ஆட்சி புரிந்த காலத்திலேயே இந்தியாவில் கப்பல் கட்டும தொழில் முக்கியத தொழில்களுள் ஒன்ருயிருந்ததென்பது கிரேக்க அறிஞர்களின் நூல்களில் குறிககப்பட்டுள்ளது. அரியன் என்பார், தமது நூலில் இந்தியா விலிருந்த கப்பல் கட்டும் துறைமுகங்களைப் பற்றியும் குறித்துள்ளார். அங்ஙனமே பிளினி என்பவரும், சிங்களததைப் பற்றிக் கூறும் போது இந்திய மரக்கலங்களின் சில அருமை பெருமைகளைப் பற்றிப் பேசியுள்ளார். மிகக் குறுகிய கடறகால் களிலும் எளிதில் திருப்புதற்கென இந்திய மரக்கலங்களின் இரு முனைகளாகிய அணியம், அமரம் என்னும் பகுதிகளைப்பற்றி அவர் குறிப்பிடுவதோடு, அக்காலத்து இந்தியக் கலங்கள் ஏறத்தாழ மூவாயிரம் 'ஆம்பொறைப்பாரம் ஏற்றிச் செல்லக்கூடியவையா யிருந்தன என்றும் குறிப்பிட்டுள்ளார். நாற்பது ஆம்பொறைகள் இக்காலத்து ஒரு டன் எடைக்குச் சமம் என்று மதிக்கப்படுவதால், அக்காலத்திலேயே சுமார்

எழுபத்தைந்து டன் பாரம் ஏற்றிச் செல்லக்கூடிய மரக்கலங்கள் இந்தியாவில் இருந்தன என்பது வெள்ளிடை விளங்கலாம்.

**கடைச்சங்க காலம்:**

அதே காலத்திலும், அதற்கு முன்னரும் தமிழ் நாட்டில் மிகப் பெரிய மரக்கலங்கள் இருந்தன என்பதும், அவை வாணிகத்துக்கும் போருக்கும் பயன்பட்டன என்பதும் தொன்மை மிக்க தமிழ் நூல்கள் வாயிலாக அறியப்படுகின்றது.

தமிழ் மொழியில் வழங்கும் நூல்கள் அனைத்தினும் தொன்மை வாய்ந்தது தொல்காப்பியம் என்னும், இலக்கண நூலாகும். 'திரைகடலோடியும் திரவியம் தேடு' என்னும முதுமொழிக்கிணங்கத் தமிழ் மக்கள் பொருள் ஈட்டுவதற்காகத் தங்கள் இல்லம் நீங்கி உள் நாடு வெளி நாடுகட்குச் செல்வார்கள் என்பது அதன் கண் குறிக்கப்படுகிறது; அங்ஙனம் செல்பவர் உள் நாட்டுப் பயணத்தைக் 'கால்' என்று கூறப்படும் வண்டியிலும், கடற் பயணங்களைக 'கலம்' என்று கூறப்படும் மரக்கலத்திலும் ஏறி நடத்தினர் என்பது விளக்கப்படுகிறது.

இதுவன்றி கிறித்து பிறப்பதற்கு முன்னரும் பின்னரும் தமிழ் மொழியில் எழுந்த பத்துப்பாட்டு, எட்டுத்தொகை நூல்களுள் சில, அக்காலத்தில் மரக்கலங்களை உபயோகிப்பது தமிழ்நாட்டில் பெருவழக்கமாய் இருந்தது என்னும் உண்மையை வெளியிடுகின்றன. அவற்றைப்பற்றி ஆராயுமுன் மரக்கலங்களைக் குறிக்கும் பல்வேறு சொற்கள் தமிழ் மொழியில் தொன்று தொட்டு இடம் பெற்று வந்தன என்பதைச் சேந்தன் திவாகரம் என்னும் நூல் தெளிவுறுத்துகின்றது.

"வங்கம் பாதை தோணி யானம்
தங்கு மதலை திமில்பாறு அம்பி
பஃறி சதாவே பாரதி நவ்வே
போதந் தொள்ளை நாவா யென்றிவை
மேதகு நீர்மேல் ஓடும் மரக்கலம்"

என மரக்கலங்களின் பெயர்கள் திவாகரத்திற் கூறப்படுகின்றன. பின்னர்,

"பகடு பஃறி யம்பி யோடம்
திமிலே தோணி யெனச்செப் பினரே"

என்று முன்னர்த் தொகுத்துக் கூறப்பட்டவற்றை வகுத்துக் காட்டித் தோணியின் பெயர்கள் தனியே குறிக்கப்படுகின்றன. அதன் பின்னர்த் தெப்பத்திற்கு வழங்கும் பெயர்கள் இன்னவை என்பது,

"பகடு பட்டிகை யானம் அம்பி
படுவை தொள்ளேபுணே மிதவை தெப்பம்"

என்னும் அடிகளால் அறிவிக்கப்படுகின்றது. இவற்றுள் முதற் பாவில் உள்ள பதினுறு சொற்களில் யானம், சதா, பாரதி, நவ், நாவாய், போதம் என்னும் ஆறு சொற்கள் நீங்கலாக எஞ்சிய பத்துச் சொற்களும், இரண்டாவது பாவில் உள்ள ஆறு சொற்களும், மூன்ருவது பாவில் உள்ள எட்டுச் சொற்களில் ஒன்று நீங்கலாக மற்ற ஏழு சொற்களும் தமிழ்ச் சொற்களே என்பது அறிந்து இன்புறத் தக்கதாம். இனிப் பத்துப் பாட்டு, எட்டுத் தொகை நூல்களில் மரக்கலங்களேப் பற்றிக் காணப்படும் குறிப்புக்கள் சிலவற்றைக் காண்போம்.

பூம்புகாரின் துறைமுகத்தில் தங்கியிருந்த நாவாய்கள் களிறுகள் போலக் காணப்பட்டன என்னும் செய்தி பத்துப் பாட்டில் ஒன்ருகிய பட்டினப்பாலேயிற் கீழ்காணும் அடிகளால் குறிக்கப்படுகின்றது.

"வெளிவிளக்கும் களிறுபோலத்
தீம்புகார்த் திரைமுன்றுறைத்
தூங்குநாவாய் துவன்றிருக்கை
மிசைக்கூம்பின் அசைக்கொடியும்"

அன்றியும் பத்துப் பாட்டில் மற்ருென்ருகிய மதுரைக்காஞ்சியில் உள்ள

"சுடுங்காற் றெடுப்பக் கல்பொரு துறைஇ
நெடுஞ்சுழிப் பட்ட நாவாய் போல"

என்னும் அடிகள் சுமார் ஆயிரத்தெண்ணூறு ஆண்டுகளுக்கு முனனரே தமிழ்நாட்டில் மரக்கலங்கள் வழககத்தில் இருநதன என்பதை வலியுறுத்துகின்றன.

இவையன்றி எட்டுத்தொகை நூல்களுள் தொன்மை மிக்க தெனக் கருதப்படும் புறநானூற்றில் பல செய்யுட்களில் மரக்கலம் பற்றிய செய்திகள் கிடைக்கின்றன.

"...........................கூம்பொடு
மீப்பாய் களையாது மிசைப்பரம் தோண்டாது
புகாஅர்ப் புகுந்த பெருங்கலம்........" (புறம். 30)

என்னும் அடிகளில் உறையூர் முதுகண்ணன் சாத்தனர் புகார் துறைமுகத்திற் புகுந்த மரக்கலத்தைப் பற்றிய செய்தியைக் குறிக்கின்றார்.

மற்றொரு பாட்டில் பரணர் என்ற பெரும் புலவர்,

"கலம்தந்த பொற்பரிசம்
கழித்தோணியாற் கரைசேர்க்குந்து" (புறம். 344)

எனக் கலத்தில் வந்த பொருள்கள் தோணிகளின் மூலம் கரையிற் சேர்க்கப்படும் செய்தியை விளக்குகின்றார்.

பிறிதொரு புறப்பாட்டில் கோவூர் கிழார் என்ற சங்கப்புலவர்,

"இருங்கழி இழிதரும் ஆர்கலி வங்கம்
தேறுநீர்ப் பரப்பின் யாறுசீத் துய்த்துப்
துறைதொறும் பிணிக்கும் நல்லூர்"

என்னும் அடிகளால் சங்க காலத்தில் தமிழ் நாட்டில் மரக்கலம் பெருவழக்கத்தில் இருந்தது என்பதனைத் தெரிவிக்கின்றார்.

"உலகுகிளர்ந் தன்ன வுருகெழு வங்கம்
புலவுத்திரைப் பெருங்கடல் நீரிடைப்போழ"
(அகம். 255)

என்னும் அகநானூற்று அடிகள் அக்காலத்தில் மிகப் பெரிய மரக்கலங்கள் வழக்கத்தில் இருந்தன என்னும் செய்தியை அறிவிக்கின்றன.

இவையன்றி எட்டுதொகை நூல்களுள் ஒன்ருகிய பரி பாடலில் வரும்.

''இதையும் கயிறும் பிணையும் இரியச்
சிதையும் கலத்தைப் பயினல் திருத்தும்
திசையறி மீகானும் போன்''

என்னும் அடிகள் அக்காலத்தில் மரக்கலம் ஒன்று அதன் பாயும், கயிறும் மாப்பிணையும் இற்றுச் சிதையும்போது அக் கலத்தைச் செலுத்தும் மீகாமன் அதனை மரப்பிசின்கொண்டு பழுது பார்த்துச் செப்பமுறச் செய்யும் செய்தியை விளக்கு வனவாம்.

இனிச் சங்க காலத்தையடுத்துக் தோன்றிய ஐம்பெருங் காப்பியங்களுள் ஒன்ருகிய சிலப்பதிகாரத்திலும் அக்காலத்தில் தமிழ் நாட்டில் மரக்கலங்கள் வழக்கில் இருந்தன என்னும் குறிப்புக் களைக் காணலாம்.

''அரும்பொருள் தரூஉம் விருந்திற் றேஎம்
ஒருங்குதொக் கன்ன வுடைப்பெரும் பண்டம்
கலத்தினுங் காலினுந் தருவன ரீட்ட''

என்னும் மனையறம் படுத்த காதையிற் காணப்படும். அடிகளும்.

''ஓங்குநீச் மாடமொடு நாவாய் இயக்கிப்
பூம்புணை தழீஇப் புனலாட் டயர்ந்து''

என்னும் ஊர் காண் காதையிற் காணப்படும் அடிகளும் சிலப்பதிகார காலத்தில் மரக்கலங்கள் தமிழ் நாட்டில் பெரிதும் பயன்பட்டன என்னும் உண்மையை வற்புறுத்துகின்றன அன்றியும்,

''வங்கம் போயபின் வருந்துதுய ரெய்தி''
''நாவாய் கேடுற நன்மரம் பற்றிப்
போயினோன் தன்னோ டுயிருயப் போந்தோர்''

என்னும் மணிமேகலை அடிகளும் இதனை வற்புறுத்துகின்றன. இவற்றையடுத்து ஒவ்வொரு நூற்றாண்டிலும் தோன்றிய நூல்களிலும் மரக்கலங்கள் பற்றிய செய்திகள் நிரம்ப உண்டு. அவை விரிக்கிற் பெருகும்.

## ஆந்திரர் காலம்:

கி. பி. இரண்டாவது, மூன்றாவது நூற்றாண்டுகளில் தென்னிந்தியாவின் வடபகுதியில் ஆட்சி புரிந்து வந்த ஆந்திரர்களும் கப்பற் கலையில் பெரிதும் முன்னேற்றம் அடைந்திருந்தார்கள் என்பது அவர்களுடைய நாணயங்களால் அறியப்படுகிறது. அந்த நாணயங்களில் நாவாய்களின் உருவங்கள் பொறிக்கப்பட்டுள்ளன. அந்நாவாய்களின் அணியங்களில் (முன் பக்கத்தில்) பந்து போன்று உருண்டை வடிவினதாகிய அமைப்பு இருந்தது. படகு செலுத்தும் துடுப்பு அமரத்தில் (பின் புறத்தில்) படகின்மேல் விளிம்பிற்குச் சற்றுக் கீழே படகின் உள்ளிருந்து வெளியே நீட்டிக் கொண்டிருந்தது. படகின் அடித்தளம் நேராகவும் அதன் இரு கோடிகளிலும் ஒவ்வொரு பாய் மரம் பொருத்தப்பட்டும் இருந்தது.

ஆந்திரர் ஆட்சிக் காலத்திற்குப் பின்னர், சாஞ்சித் தூபி கட்டப்பட்ட காலத்திலும் மரக்கலங்கள் கட்டும் கலை நமது நாட்டில் பெருவழக்காயிருந்தது என்பதற்குச் சாஞ்சித் தூபிகளில் காணப்படும் கலங்களின் சிற்பங்கள் சான்று பகர்கின்றன.

## யுக்தி கல்ப தரு:

சாஞ்சித் தூபிகளைப் பற்றி ஆராயப்புகுமுன் வடமொழியில் இயற்றப் பெற்றதும். ஏறத்தாழ சாஞ்சித் தூபி கட்டப்பட்ட காலத்தது என்று ஊகிக்கத் தக்கதுமான ஒரு நூலின்கண் இந்தியக் கலங்களின் அமைப்புப் பற்றிக் கூறப்பட்டுள்ள குறிப்புக்களை ஈண்டு அறியலாம். இந்நூலுக்கு யுக்தி கல்ப தரு என்பது பெயர். இது தாரா நகரத்து மன்னன் போசன் என்பவனால் இயற்றப்பட்டது. இது ஏட்டுச் சுவடியாகவே இருக்கிறது. இச்சுவடி பண்டைக்காலத்தில் இந்திய

மக்கள் கப்பற்கலை பற்றி எந்த அளவுக்கு அறிந்திருந்தார்கள் என்பதனை நன்கு விளக்குகின்றது.

அக்காலத்திற் கட்டப்பட்ட கப்பல்கள் எல்லாம் 'சாமானியம்', 'விசேடம்' என இரண்டு வகைகளுள் அடங்கும். அவற்றுள் முதல் வகையைச் சார்ந்தவை உள்நாட்டுப் போக்கு வரவுக்கும் இரண்டாம் வகையைச் சார்ந்தவை கடற் செலவுக்கும் பயன் பட்டன.

'சாமானியம்' என்னும் வகையைச் சேர்ந்த கப்பல்களுள் அவற்றின் அகலம், நீளம், ஆழம் ஆகியவற்றிற் கேற்பப் பத்து வகைகள் உண்டாம். அங்ஙனமே 'விசேடம்' என்ற வகையைச் சேர்ந்த 'தீர்க்கம்' 'உன்னதம்' என்னும் கலங்களுள் முன்னதிற் பத்து வகையும், பின்னதில் ஐந்து வகையும் உண்டாம். அக் கலங்களை அலங்கரித்தல் பற்றியும் அவற்றின் உள் அமைப்புப் பற்றியும் யுக்தி கல்பதருவில் பற்பல விவரங்கள் தரப்பட்டுள்ளன. பொன், வெள்ளி, செம்பு இவை மூன்றும் கலந்த உலோகம் ஆகிய நான்கு உலோகங்கள் அக்கலங்களை அலங்கரிக்கப் பயன்படுத்தப் பட்டனவாம். அங்ஙனமே நான்கு வகை வண்ணங்கள் அக்கலங் களுக்குத் தீட்டப்பட்டனவாம். நான்கு பாய் மரக் கலத்துக்கு வெண்மை வண்ணமும், மூன்று பாய் மரக்கலத்துக்குச் சிவப்பு வண்ணமும், இரண்டு பாய் மரக்கலத்துக்கு மஞ்சள் வண்ணமும், ஒரு பாய் மரக்கலத்துக்கு நீல வண்ணமும் தீட்டப்படுவது மரபாம்.

கலங்களின் முன்பக்கமாகிய அணியத்தின் முகப்புக்கள் வெவ் வேறான உருவங்களைப் பெற்றுத் திகழும். விலங்குகளின் தலைகள், பறவைகளின் தலைகள், மக்களின் தலைகள் முதலியவற்றின் உரு வங்கள் அவற்றை அணி செய்யுமாம். உயர் வகுப்புக் கலங்களின முகப்புக்களின் அமைப்புகளாய் விளங்கிய தலைகளுக்கு பொன் னலாய மாலைகளும் நவரத்தினங்களும் பொருத்தப் பெற்றி ருக்குமாம்.

அக்கலங்களில் மக்கள் தங்குவதற்குரிய அறைகள் வெவ்வேறானவை. அவற்றிற்கேற்பப் பெயர்களும் வெவ்

வேறாய் வழங்கின. கலகத்தின் ஒரு முனையிலிருந்து மற்றொரு முனை வரை முழுமையும் கூடம் அமைந்திருப்பின் அது சர்வ மந்திர வகுப்பைச் சார்ந்ததாகும். அத்தகைய கலகங்கள் போர் வீரர்களை யும், கால்நடைகளையும், அரசர் நிதியையும் ஏற்றிச் செல்ல உபயோகிக்கப்படும். கலத்தின் இடைப்பகுதியில் மட்டும் கூடம் அமைந்திருப்பின், அது மத்திய மந்திரக் கலம் என வழங்கப் பட்டது. அது இன்பச் செலவிற்கு உபயோகிக்கப்பட்டது. கலத்தின் அணியப் பகுதியில் மட்டும் கூடம் உடையது அக்கிர மந்திரம் எனப்பட்டது. அது கடற் போர்களுக்கு உபயோகிக்கப் பட்டது. கௌரவர் கொடுமைக்குப் பயந்து தப்பிச் சென்ற பாண்டவர் அக்கிர மந்திரக் கலத்தை உபயோகித்தனரெனப் பாரதம் கூறுகின்றது. இதுவரை யுக்தி கல்பதரு என்னும் கப்பல் சாத்திரத்தின்கண் கூறப்பட்ட செய்திகள் விவரிக்கப்பட்டன. இனிச் சாஞ்சித் தூபிகளால் மரக்கலங்களைப் பற்றி அறியப்படும் உண்மைகளை ஆராய்வோம்:

### சாஞ்சித் தூபிகள் :

சாஞ்சித் சிற்பங்களினின்றும்தான் பண்டைய இந்தியக் கப்பற் கலை பற்றி ஆராயத் தொல்பொருட்கலைச் சின்னங்கள் துணை புரிகின்றன. முதல் தூபியின் கீழ் வாயிலில் மரப்பலகைகளை இணைத்துக் கயிறுகளால் பிணிக்கப்பட்ட படகின் உருவம் செதுக்கப்பட்டுள்ளது. இச்சாதாரணப் படகைக் காட்டிலும் சற்றுப் பேரளவினதாகவும், மத்திய மந்திர அமைப்பை உடைய தாகவும் உள்ள ஒரு படகு அம்முதல் தூபியின் மேலை வாயிலிற் காட்சியளிக்கிறது.

### அசந்தா :

அசந்தாவில் உள்ள சுவர் ஓவியங்களிற் சில வகைக் கலங்கள் காணப்படுகின்றன. அவற்றுள் ஒன்று உயர்ந்த அணியத்தையும் அமரத்தையும் பெற்று மூன்று கூம்புகளோடு கூடிய அக்கிர மந்திர அமைப்புள்ள கலமாகும். வேந்தரின் இன்பச்செலவுக்கேற்ற மத்திய மந்திர அமைப்புள்ள கலம் ஒன்றும் அங்குக் காணப்படுகிறது. இதிலுள்ள மண்டபம் தூண்களின்மீது விதானம் அமைக்கப்பட்டது

போல விளங்குகிறது அணியத்தினின்று சுக்கான் பிடிப்பவனுக்கு அங்கு உள்ள ஏணியின் மீது இடம் அமைக்கப்பட்டுள்ளது. துடுப்புத் தள்ளுபவன் அமரத்தில் அமர்ந்திருப்பது, போல வரையப்பட்டுள்ளது. அசந்தாவில் காணப்படும் மற்றோர் ஓவியத்தில் விசயன் என்னும் வேந்தனின் கடற்படை சிங்களத்தில் இறங்குவது போல வரையப்பட்டுள்ளது. அப்படை ஆயிரத்தைந்நூற்றுவர் வீரர்களைக் கொண்டது; பல்வேறு வகையான கலங்களையும் பெற்றது. குதிரைகளும் யானைகளும் அப்படையில் இருந்தன.

### பரபூதூர்

இடைக்காலத்தின் முற்பகுதியைச் சார்ந்தவை எனக்கருதப் படும் பரபூதூர் இந்திய சிற்பங்கள், கி. பி. ஏழாவது அல்லது எட்டாவது நூற்றாண்டிலேயே இந்தியக் கப்பற்கலை உயர்நிலையை அடைந்திருந்தது என்பதனை விளக்குகின்றன. சாவாத் தீவைச் சேர்ந்த இப் பரபூதூர்ச் சிற்பங்களின் மாதிரி ஒன்று அமெரிக்காவைச் சேர்ந்த பிலடெல்பியாவின் காட்சிச் சாலையில் இடம் பெற்றுள்ளது.

### சுகந்நாதம்

அடுத்த சில நூற்றாண்டுகளில் இந்தியக் கப்பற்கலை நன்கு முன்னேற்றமடைந்தது என்பதற்குரிய சான்றுகள் உண்டு. பூரியில் உள்ள சகந்நாதர் ஆலயத்தில் மத்திய மந்திர அமைப்பைச் சேர்நத மரக்கலம் ஒன்று காட்சியளிக்கிறது. இக்கலத்தின் மத்திய மண்டபத்தை மாந்தர் நால்வர் தாங்கி நிற்பதுபோலக் காட்டுகிறது இச்சிற்பம். இம்மண்டபத்தின் உச்சியினின்று ஓர் ஊஞ்சல் தொங்குவது போலவும் இதனை அசைத்தாட்ட ஒரு சங்கிலி கூறையினின்று தொங்குவது போலவும் அமைப்புகள் அக்காலத்திற் கப்பற்கலை எந்த நிலையில் இருந்ததென்பதனை ஒருவாறு வலியுறுத்துகின்றன.

### மார்க்கோபோலோ

பதின்மூன்றும் நூற்றாண்டில் இத்தியாவைக் கண்ணுற்ற மார்க்கோபோலோ, அக்காலத்து இந்திய மரக்கலங்களைப் பற்றிய சுவை மிகுந்த குறிப்புகளை எழுதியுள்ளார்

அவற்றுள் சில வருமாறு:

கலங்கள் பர் என்னும் மரத்தால் செய்யப்பட்டன. அவை இரட்டைப் பலகைகள் அமைந்தவை. மேற்பலகைகளின் இணைப் புக்கள் மறையும்படி உட்பக்கம் சட்டங்கள் பொருத்தி இடை வெளி களிற் கயிறுகளின் புரிகளைச் செருகி இருப்பாணிகள் அறையப் பட்டிருந்தன, அடிப்பாகத்துக்குக் கற்றாழை நாரும் சுண்ணாம்பும் சேர்த்து இடித்த கலவையோடு ஒருவகை மர நெய்யைக் கலந்து உருக்கிய பிச்சுக் கட்டி போன்ற குழம்பைப் பூசி, நீர் உள்ளே கசிந்து வராமல் தடுக்கப்பட்டது.

கலங்கள் முந்நூற்றவர் வரை கொள்ளக்கூடியவையாகவும் ஆறுயிரம் மிளகுக் கூடைகள் ஏற்றக் கூடியவையாகவும் இருந்தன. அவை துடுப்புகளால் இயக்கப்பெற்றன. ஆனால், ஒவ்வொரு துடுப்பையும் இயக்க நால்வர் வேண்டும். இக்காலக் கலங்கள் போல அவற்றின் இரு பக்கங்களிலும் சிறு படகுகள் கட்டப்பட் டிருந்தன. பெரிய கலங்கள் ஒரே தளம் உடையவையாயிருந்தன. இத்தளத்தின் கீழ்ச் சிற்றரைகள் இருக்கும். அவற்றின் எண் ணிக்கை கலத்தின் அளவுக்கு ஏற்றவாறு அமைந்திருக்கும். அவை நல்ல சுக்கான்களும், நான்கு கூம்புகளும், பாய்களும் பெற்றுத் திகழ்ந்தன. தளங்களின் கீழ் இருந்த சிற்றறைகளேயன்றிக் கலத்தில் ஓட்டை ஏற்பட்டு நீர் உள்ளே கசியுமாயின், கலத்தின் அடித்தளத்தில் உள்ள பொருள்கள் நனையாதிருப்பதற்காகத் தடித்த பலகைகளால் ஆக்கப்பட்ட பொருள் தாங்கிகளும் உண்டு.

## நிக்கோலோ காண்டி:

கி. பி. 15-ஆம் நூற்றுண்டில் இந்தியாவுக்கு வந்த நிக்கோலோ காண்டி (Nicolo Conti) என்பவர் அக்காலத்தில் ஐரோப்பாவில் இருந்த மரக்கலங்களைக் காட்டிலும் இந்திய மரக்கலங்கள் மிகப் பெரியவையாய் விளங்கின என்று கூறி யுள்ளார். "இந்திய மக்கள் இரண்டாயிரம் பீப்பாய்கள் (ஒரு பீப்பாய் 126 காலன் அளவு கொண்டது) கொள்ளக்கூடிய வையும் நம்முடையவைகளைக் காட்டிலும் பெரியவைகளும் ஐந்து கூம்புகளை உடையவைகளாகிய மரக்கலங்களை,

அமைக்கின்றார்கள். அவற்றின் கீழ்ப்பகுதிகள் புயற்காற்றுக்கும் அசையாவாறு ஒன்றன் மீது ஒன்றாக மூன்று பலகைகளைப் பொருத்தி அமைக்கப்படுகின்றன'' என்பது நிக்கோலோவின் கூற்றாகும்.

## முகலாயர் காலம் :

முகலாயர் ஆட்சியிலும் இந்தியக் கப்பற்கலை நாட்டின் பல்வேறு பகுதிகளில் முன்னேற்றமடைந்து, அக்காலத்தில் வங்காளத்தில் கட்டப்பெற்ற பல்வேறு வகையான மரக்கலங்களைப் பற்றிய வருணனைகள் அக்காலத்துச் சமகால இலக்கியங்களில் காணப்படுகின்றன. தேக்கு முதலிய பல வகையான உயர்ந்த மரங்கள் இருப்பாணிகளால் இணைக்கப்பட்டுக் கலத்தின் அடித் தளம் அமைக்கப்படுவது வழக்கமாயிற்று. பின்னர் அதன்மீது உலோகத் தகடுகள் வேயப்படும். கலத்தின் அணியம், சுகம்(கிளி) மாயூர(மயில்) சிங்கம் முதலிய பறவைகள், விலங்குகள் முதலியவற்றின் உருவங்களைப் பெற்று விளங்கும். இது காரணமாகச் 'சுகபங்கி, மாயூரபங்கி' என்னும் பெயர்கள் கலங்களுக்கு வழங்கப் பட்டன. முகலாயர் காலத்துக் கலங்களில் மண்டபங்கள் அலங்காரங் களும் தோரணங்களும் பெற்று விளங்கின,

## மராட்டியர் காலம் :

முகலாயர் ஆட்சியிற் போலவே மராட்டியர் ஆட்சியிலும் கற்பற்கலை சிறப்புற்றிருந்தது. மராட்டிய மன்னர் சிவாஜி அக் கலைக்குப் பேருக்கமளித்துப் பெருமைப் படுத்தினார். மராட்டியக் கப்பற்படையைக் கண்டு அக்காலத்தில் அஞ்சாத அயல்நாட்டவரே இலர் என்று கூறப்படுகிறது.

## ஆங்கிலக் கிழக்கிந்தியக் கம்பெனி :

ஆங்கில ஆட்சியின் தொடக்கத்திலும் இந்தியக் கப்பற் கலை தலைசிறந்து விளங்கியது. 1735ல் பம்பாயில் கப்பல் கட்டும் துறை அமைக்கப்பட்டபோது அதனை மேற்பார்வையிட்டு நடத்தியவர் பார்சிக் கனவான் ஒருவரே என்பதை

அறிகிறோம். அவர் பார்வையில் வெவ்வேறு வகையான கலங்கள் இருபத்திரண்டு கட்டப்பட்டன என்று வரலாறு கூறுகின்றது. கல்கத்தாவிலும் அவ்வாறே கலங்கள் பல கட்டப்பட்டன. ஆயினும், ஆங்கில ஆட்சியில் வேறு சில உன்னதக் கலைகளைப் போல இக் கலையையும் இந்தியர் கைவிட நேர்ந்த காரணத்தால் சமீப காலத்தில் கப்பற்கலையே நமது நாட்டுக்குப் புதியதொரு கலையாகி விட்டது.

**முடிவுரை :**

'குலத்தொழிற்கல்லாமால் பாகம்படும்', என்னும் முதுமொழிக் கிணங்க, இக்காலத்தில் பாரத மக்கள் தங்கள் பரம்பரைக் கலையாகிய கப்பற்கலையில் சிறந்து விளங்குவதும், மேனாட்டுக் கப்பல்களுக்கு எவ்வகையினும் தாழ்வின்றி விளங்கும், கப்பல்களைக் கட்டுவதும் நமக்கும் நம் நாட்டுக்கும் ஒப்பிலாப் பெருமையளிப்பனவாம். இந்நிலையில் விசாகபட்டினத்தில் ஏற்கனவே அமைந்துள்ள கப்பல்கட்டும் துறைபோன்ற மற்றொரு துறையையும் நிருமாணிக்கும் முயற்சியில் மத்திய அரசாங்கம் தீவிரமாக ஈடுபட்டு வருவதை நாம் அனைவரும் அறிவோம். அது நமது தமிழ் நாட்டில் நிருமாணிக்கப்படுமாயின், தமிழ் நாட்டுக் கடல் வாணிகம் ஆக்கம் பெறும் என்பது ஒருதலை.

## அருஞ்சொற்பொருள்

இலச்சினை – முத்திரை, தோணி – படகு, கலன் - கப்பல் வெள்ளிடை விலங்கள் – வெளியிடத்தில் உள்ள மலைபோலத் தெளிவானது, மரப்பிணை – மரப்பலகைகளின் பொருத்தம்.

## வினாக்கள்

1. பண்டைக் காலத்திலேயே நமது நாட்டிற் கப்பற்கலை சிறப்புற்றிருந்தமையை விளக்கும் ஆதாரங்கள் எவை?

2. நமது நாட்டுக் கப்பற்கலையைப் பற்றிப் பிறநாட்டினர் கூறியுள்ள குறிப்புக்கள் யாவை? அப் பிறநாட்டினர் பெயர்கள் யாவை?

3. 'ஆம்பொறை' என்பது யாது?

4. தமிழர் கால் என்று எதனை வழங்கினர்?

5. தமிழர் மரக்கலத்திற்கு வழங்கிய பெயர்கள் எவை?

6. 'அமரம்' என்பது படகின் எவ்வுறுப்பிற்குப் பெயர்?

7. சிறு குறிப்பு எழுதுக:—

யுக்தி கல்ப தரு, சமானியம், விசேடம், அணியம், மத்திய மந்திரக் கலம், சுக பங்கி, மாயூர பங்கி.

## 20. பேராசிரியர் சுந்தரம் பிள்ளை

பேராசிரியர் வித்துவான் ச. ஆறுமுக முதலியார்,
எம். ஏ., பி. ஓ. எல். டி.

[இவ்வாசிரியர் குமாரபாளையம் ஆசிரியர் பயிற்சிக் கல்லூரித் தலைவராய் இருக்கிறார்; சிறந்த புலமையும் நிறைந்த அறிவும் உடையவர்.' இவர் பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்தை 20—2—44 அன்று திறந்து வைத்தபோது நிகழ்த்திய சொற்பொழிவு இது.]

அன்பும் அறிவும் சான்ற தலைவரவர்களே! தமிழ்ப்பெரு மக்களே! இப்புறநானூற்று மாநாட்டின் இடையில் என்னையும் கலந்துகொள்ளுமாறு எனக்கு ஒரு வாய்ப்புக்கொடுத்ததோடன்றி, பேராசிரியர் சுந்தரம் பிள்ளை அவர்களின் திருவுருவப் படத்தைத் திறந்து வைக்கும் பெருமையையும் எனக்கு இம்மாநாட்டின் அமைச்சர் திருவாளர் வ. சுப்பையா பிள்ளை கொடுத்தது என் கல்வியறிவும் பட்டறிவும் ஆற்றலும் கருதியன்று; நான் ஒரு தமிழாசிரியன் என்னும் உரிமையும் பற்றியேயாம் என் நன்றியும் வணக்கமும் அவருக்கும் உங்களுக்கும் உரியன இவ்வளவு பெருந்திரளான ஒரு தமிழறிஞரின் கூட்டத்தை இன்று காண உள்ளம் கழிபேருவகை எய்துகிறது.

அன்பர்களே! சென்ற நூற்றாண்டின் இடையிலும் இறுதியிலும் தமிழ்க் கல்விக்குப் புத்துயிரளிக்கும் பெரும் பணியில் ஈடுபட்ட பலருள்ளும், பலவகையிலும், பேராசிரியர் பிள்ளையவர்கள் மிகச்சிறந்தவராவர் என்பதற்குப் பலகாரணங்கள் காட்டலாம். முதலாவதாக, இவர் கல்லூரியில் மெய்யுணர்வு நூற்புலவராயிருநதும். தம் தாய் மொழியாகிய தமிழ்மொழிக் கல்வியிலும், அதன் முன்னேற்றத்திலும் பெரிதும் ஈடுபட்டவராய்ச் சிறந்த புலவரானதோடு, பல துறைகளிலும் நூல்கள் யாத்தனர், தமிழ் மக்கள் எத்துறையில் ஈடுபட்டிருப்பினும், தாய்மொழி முன்னேற்றத்தை மறந்துவிடக்கூடாது என்பதை அறிவுறுத்த இக்கால மககளுக்கு இவர் ஒரு சிறந்த எடுத்துக்காட்டன்றோ?

மேலும், நாடகத் தமிழின் முன்னேற்றத்துக்குழைத்தவர், இயல், இசை, நாடகம் ஆகிய மூன்று தமிழுக்கும் உழைத்தவராகாரோ? முத்தமிழ்த் துறைபோகிய புலவர்களே உத்தமப் புலவர்களென இத்தலத்துப் புகழப்படுகின்றனர். என்னை? இயற்றமிழும் இசைத் தமிழும் நாடகத் தமிழில் அடங்குதலாலும், இயல், இசைகளுக் கில்லாத சில சிறப்பியல்புகள் நாடகத் தமிழுக்குள்ளனவாதலானும் என்க. பாலில் வெண்ணெய் திரண்டு வருவதுபோல, இயல், இசையடியாகப் பிறக்கும் நாடகத்தமிழ் இவையிரண்டின் தெளிவும் முதிர்ந்த வளர்ச்சியும், பயனுமாகும். இவ்விரண்டும் கூடிய வழியே நாடகம் பிறக்குமாதலின், அது கருதி. அது ஈற்றில் வைக்கப்பட் டுள்ளது. கையில் நூலெடுத்துப் படிக்கத் தெரியாதோரும், படித் தற்குரிய காலமில்லாதோரும் நாடகத்தினால் நல்லறிவு வாய்க்கப் பெறுவர்; உலக இயல்பையும், மக்களியற்கையையும் உள்ளபடியே படம் பிடித்து நாடகம் காட்டும்; இயல் இசைகளைப் போலக் கேள்வி இன்பத்தோடு நின்றுவிடாது காட்சியின்பமும் உடன் அளிக்கும், காட்சி இன்பமே காதால் கேட்பதைவிட உளத்தில் நன்றாய் அமைக் கப்படும். உலகத்தின் சாயலாக இருக்கும் நாடக மேடையில் மக்கள் ஒழுக்கத்தின் விருப்பத்தை நேரிற் கண்டுகொள்ளலாம். நல்லதன் நலனும், தீயதன் தீமையும் கண்ணுக்கெதிரே நாடகத்தில் காணப்படுகின்றன. உழைத்த உள்ளத்திற்கு ஊக்கம் விளைத்து, மன எழுச்சிகளாகிய உளச்சுவைகளைப் பண்படுத்திக் கற்பனையை வளமுறச் செய்து, சிந்தனை அனுமானங்களையும், செம்மையாகப் பேசி, உரையாடும் ஆற்றல்களையும் வளர்த்துப் பயன் விளைவிக்கும் இன்னோரன்ன இயல்புகளால் தலைசிறந்து விளங்கும் நாடகம்.

இச்சிறந்த கலை, கடைச் சங்க நாட்களுக்குப் பிறகு நம் தமிழ் மொழியில் வளர்ச்சியுறாது போனதோடன்றி. அதற்கு முன்னெ ழுந்த எண்ணிறந்த நாடக இலக்கியங்களும் அகத்தியம், பரதம் முறுவல், சயந்தம், குணநூல், செயிற்றியம், மதிவானர் நாடகத் தமிழ் நூல், கூத்த நூல் முதலிய நாடக இலக்கணங்களும் அழிந் தொழிந்தன.

சென்ற நூற்றாண்டில் நாடகத் தமிழின் மறுமலர்ச்சிக்கு அடிகோலி நாடகத்துக்கே சிறந்த இலக்கியமாய் என்றும்

விளங்கும்படி சிறந்த நாடக இயல்புகள் எல்லாம் செகப்பிரியர் நாடகங்களிற் போல இடம் பெறவும், ஒன்பான் சுவைகளும் ஒருங்கே பொருந்தவும், பத்துவகை அழகுகளும் பாங்குடன் அமையவும், சிறந்த தலைவியை அமைத்து ஏற்ற உறுப்பினர்களை யும் சேர்த்துச் சிறந்த நாடகமாகிய 'மனோன்மணீயத்தை' உலகிற் களித்த பெருமை பிள்ளையவர்களுக்கே உரியது.

அன்றியும், பாயிரத்தில் அமைந்த தமிழ்த் தெய்வ வணக்கம் தமிழ் நாடெங்கும் இன்று ஒலித்துக் கொண்டிருப்பதோடு தமிழன்னையின் திருச்செவிகளிலும் திருவுள்ளத்திலும் இனிது ஒலித்துக் கொண்டிருக்கிறது. மணிவாசகப் பெருந்தகை, இறைவனை, முன்னைப் பழம் பொருட்கும் முன்னைப் பழம் பொரு ளாயும், பின்னைப் புதுமைக்கும் பெயர்த்தும் அப்பெற்றியனாயும் கூறினார். முன்னைப் பழமொழிக்கும் முன்னைப் பழமொழியாகவும், பின்னைப் புதுமொழிக்குப் பின்னும் புதுமொழியாகவும் விளங்கும் நந்தம் செந்தமிழ் மொழி. 'உயர்தனிச் செம்மொழி' எனற்பாலது என்று கருதிய பிள்ளையவர்கள், அதற்குக் கடவுளையே உவமை கூறினார்.

"பல்லுயிரும் பலவுலகும் படைத்தளித்துத் துடைக்கினும் ஓர்
எல்லையரு பரம்பொருள்முன் னிருந்தபடி இருப்பதுபோல்
கன்னடமும் களிதெலுங்கும் கவின் மலையா ளமுந்துளுவும்
உன்னுரத் துதித்தெழுந்தே ஒன்றுபல ஆயிடினும்
ஆரியம்போல் உலகவழக்கு அழிந்தொழிந்து சிதையாவுன்
சீரிளமைத் திறம்வியந்து செயல்மறந்து வாழ்த்துதுமே!"

என்பது இவர் அருள் வாக்கு.

சிறந்த நாடகப் புலவராகிய இவர் இவ்வாழ்த்து வாயிலாய், மொழிநூற் புலவர்களுக்கெல்லாம் அறிவுறுத்தும் சிறந்த மொழி நூல் உண்மைக்காகவும் தமிழ் மக்களாகிய நாம் கடமைப்பட்டுள் ளோம். "சதுமறை ஆரியம் வருமுன்" இந்திய நாடாகிய "பெருநில வுலகின் இரு நிலப்பரப்பையும்" திராவிட மொழியாந் தமிழ் ஆண்டு வந்தது என்னும் மொழிநூல் உண்மையையும், சிறப்பாகக் "கன்ன டமும் களிதெலுங்கும் கவின் மலையாளமுந் துளுவும்" தமிழாகிய

தாயினின்றும் தோன்றின என்னும் திராவிட மொழிநூல் உண்மையையும் எடுத்துக் காட்டி மொழி நூலாராய்ச்சிக்கும் அடிகோலியுள்ளார் இவர்.

இன்னும் இவர் தமிழ் இலக்கிய ஆராய்ச்சியிலும், தமிழ்நாட்டுத் திருவாங்கூர் நாட்டு வரலாற்று ஆராய்ச்சியிலும், "அறிவியல்களின் (சாஸ்திரங்களின் Sciences) வகைகளும் அவற்றின் முக்கிய முறைமையும் பொருளும்" என்னும் அறிவியல் துறையிலும் ஒருங்கே சிறந்தவர் என்பதை இவர் எழுதிய பத்துப்பாட்டு ஆராய்ச்சி, திருஞான சம்பந்தர் கால ஆராய்ச்சி, திருவிதாங்கூர்ப் பண்டை மன்னர் கால ஆராய்ச்சி, நூற்றொகை விளக்கங்கள் காட்டிக்கொண்டு நிற்கின்றன இங்ஙனம் பல துறைகளிலும் சிறந்த இவர் இன்றைய தமிழ் மக்கள்.

"தீங்கரும் பீன்ற திரள்கால் உளையலரி
தேங்கமழ் நாற்ற மிழந்தாஅங்—கோங்கும்
உயர்குடி யுட்பிறப்பி னென்னும் பெயர்பொறிக்கும்
பேராண்மை யில்லாக் கடை?"

என்றதற்கிலக்காயிராமல், நம் பண்டைப் பெருமைகளை மட்டும் பேசி நின்றுவிடாமல், ஒவ்வொருவரும் தமிழ் மொழியின் நிலையையும் தம்மாலியன்றளவு உயர்த்த வேண்டு என்று அறை கூவியதோடு நில்லாமல், தாமே தொண்டாற்றிச் செயலிலும் காட்டியிருக்கிறார். இவர் பூதவுடம்பு அழியினும், "மன்னுவுலகத்து மன்னுதல் குறித்தோர் தம் புகழ் நிறீஇத் தாமாய்ந்தனரே."; என்றது போல புகழுடம்பு என்றும் நின்று நிலவும்.

அன்பர்களே! பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்களின் அடிச்சுவடுகளைப் பின்பற்றித் தொண்டர்கள் தமிழ்த் தொண்டாற்றுவதற்கு இவர் திருவுருவப் படத்தின் வழியாய் அவர்களுக்கு ஊக்கத்தையும் உள்ளக் கிளர்ச்சியையும் கொடுத்து அவர்களை வாழ்த்துவதோடு, அவர்கள் வேலையைக் கண்காணித்துக் கொண்டுமிருப்பர் என நம்பி, இத்தமிழ்ப் பெருங்கூட்டத்தில் மிக்கமகிழ்ச்சியுடன் இவர் திருவுருவப் படத்தை நான் திறந்து வைக்கிறேன்.

வாழ்க தமிழ் மொழி; வாழ்க சுந்தரம் பிள்ளையவர்கள்!

## வினாக்கள்

1. தமிழ்க் கல்விக்குப் புத்துயிரளிக்கும் பெரும்பணியில் ஈடுபட்ட பலருள்ளும் பேராசிரியர் சுந்தரம் பிள்ளையவர்கள் சிறந்தவராவார் என்பது எங்ஙனம்?

2. நாடகத் தமிழின் இயல்பையும் சிறப்பையும் விளக்குக.

3. அழிந்தொழிந்த நாடக இலக்கண நூல்கள் யாவை?

4. தமிழ் மொழிக்குக் கடவுளையே உவமை கூறிப் பிள்ளையவர்கள் பாடிய பாட்டின் கருத்தை எழுதுக.

5. மொழி நூல் ஆராய்ச்சிக்கு அடிகோலியாகப் பிள்ளையவர்கள் கூறியவை யாவை?

6. பிள்ளையவர்கள் எழுதிய பிற நூல்கள் யாவை?

## பயிற்சி

1. வாக்கியங்களில் அமைக்க:—

இன்னோரன்ன, இலக்கிய ஆராய்ச்சி, முன்னைப் பழம் பொருள், கண்காணித்துக்கொண்டு.

2. பிரித்தெழுதுக:—

மக்களியற்கை, உன்னுதரத்துதித்து, அழிந்தொழிந்து.

3. மனோன்மணீயக் கதையைப் படித்து அறிந்து அதைப்பற்றிய விளக்கக் கட்டுரை ஒன்று எழுதுக.




விஜயா பிரிண்டர்ஸ், மதுரை—'1965.

# CHITRA VACHAGAM

IX STANDARD

*By*

Vidwan M. AYYAVU
Vidwan K. K. MUTHIAH

CHITRA PUBLISHING HOUSE
SRIVAIKUNTAM.

 1965 [ Price Rs. 2-25

Printed at the Vijaya Printers, Madurai.